# இந்தியப் பணச்சந்தை

## INDIAN MONEY MARKET

எஸ். வெங்கடராமன்



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

த. பா. நி. (க.வெ.) வரிசை எண்—674

# இந்தியப் பணச்சந்தை

ஆசிரியர்
எஸ். வெங்கடராமன், எம்.காம்.,
வணிகத்துறைப் பேராசிரியர்,
அ. வ. அ. கல்லூரி,
மாயூரம்.



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

First Edition—February, 1976

T.N.T.B.S. (C.P.) No. 674



INDIAN MONEY MARKET

S. VENKATARAMAN

Price Rs. 4-50

Published by the Tamilnadu Textbook Society under the Centrally Sponsored Scheme of Production of books and literature in regional languages at the University level, of the Government of India in the Ministry of Education and Social Welfare (Department of Culture), New Delhi.

Printed out of the Paper allotted by the Government of India.

Printed by :
Metropolitan Printers.
Madras-600002

# பதிப்புரை

'இந்தியப் பணச்சந்தை' என்ற இந் நூல் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் 674ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து இதுவரை 709 நூல்கள் வெளிவந்துள்ளன. இந் நூல மைய அரசு, கல்வி, சமூக நல அமைச்சகத்தின் 'மாநில மொழியில் பல்கலைக்கழக நூல்கள் வெளியிடும் திட்டத்'தின்கீழ் வெளியிடப் படுகிறது.

மேலாண்மை இயக்குநர்

*தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்.*

# பொருளடக்கம்

# 1. பணச் சந்தை
## (Money Market)

**பொது விளக்கம்**

சந்தை என்றவுடன் நம்மெல்லோருக்கும் நினைவுக்கு வருவன 'தானியச் சந்தை', 'மாட்டுச் சந்தை', 'காய்கறிச் சந்தை' அல்லது நாட்டுப்புறங்களில் பெரிய ஊர்களில் வாரம் ஒரு முறை கூடுகின்ற பொதுச் சந்தைகள் ஆகியவைதாம். அதாவது, வாழ்க்கைக்குத் தேவையான பல்வகைப் பொருள்களைப் பல இடங்களிலிருந்தும் வரவழைத்து ஓரிடத்தில் தொகுத்து, பலரும் கூடி விற்கவும், வாங்கவும் வாய்ப்பளிக்கும் இடமே சந்தை எனப்படும். இங்கு நாம் அவற்றிலிருந்து பெரிதும் மாறுபட்ட பணச் சந்தையைப் பற்றி விவாதிக்கப் போகிறோம். ஏனைய சந்தைகளில் அவ்வப் பொருள்களைக் கண்ணால் காண முடியும். அவற்றின் உபயோகத் தரத்திற்கேற்ற விலையை நிர்ணயிக்க முடியும். அவ்வாறு நிர்ணயித்த விலையில் பணத்தைக் கொடுத்துப் பெற முடியும். ஆனால், இங்குப் பணம் (money), பணம் என்ற பொருளாக அல்லாமல் பண உபயோகம் (use of money) வாங்கவும் விற்கவும்படுகிறது. பெரும்பாலும் பணத்தைக் கண்ணால் காணமுடியாது. பணம் தனி நபர் அல்லது நிறுவனத்தின் சேமிப்பாக, மிகைப் பணமாக (உபரிப் பணமாக) மாறி, பணப்பத்திரம் என்ற வடிவத்தில் அங்கு விற்கவும் வாங்கவும் படுகிறது. பணப்பத்திரம் என்பது, ஒருவர் தமது சேமிப்பிலோ அல்லது கைம்முதலிலோ ஒரு குறிப்பிட்ட தொகையைப் பிறருடைய தேவைக்காகக் கொடுக்க முன்வரும்போது, அம் மொத்தப் பணத்திற்கு வழங்கப்படும் அத்தாட்சிக் குறியீடேயாகும். அதாவது, நிறுத்தல் முகத்தல் முதலிய அளவைகளைப் போல, குறிப்பிட்ட தொகை ஒருவருக்கு வழங்கப்படும்போது, அவர் குறிப்பிட்ட காலத்திலும், குறிப்பிட்ட வட்டி வீதத்திலும் திருப்பித் தருவதைத் தமது கடனாக (கடமையாக) ஒப்புக்கொண்டு அதை எழுத்து மூலமாக வாக்குறுதியளிக்கும்போது, அது ஒரு பத்திரமாகிறது.

எப்படி, பொருள்களைத் தம் முயற்சியாலும் உழைப்பாலும் உற்பத்தி செய்தோ, அல்லது பிற இடங்களிலிருந்து சேர்த்தோ, ஒருவர் பிறருடைய தேவைக்கு வழங்கும்போது தமது உழைப்புக்கும் முயற்சிக்கும் ஊதியமாகச் சிறிது இலாபத்தைச் சேர்த்து விற்கின்றாரோ, அதே போலப் பணச்சந்தையிலும், தமது மிகைப் பணத்தைப் பிறருடைய தேவைக்காக வழங்குகின்றவர் தமது முயற்சிக்கும் உழைப்புக்கும் ஊதியமாக 'வட்டி' என்ற இலாபத்தைப் பெறுகிறார். இவ்வகைப் பணப்பத்திரங்களை வாங்கவும் விற்கவும் வாய்ப்பளிக்கும் நிதி மையங்களே பணச் சந்தையின் செயற்களங்களாகும்.

ஒரு நாட்டின் பொருளாதார முன்னேற்றத்திற்கு மிக மிக இன்றியமையாதது வலுவானதொரு நிதியமைப்பாகும். வளர்ந்து வரும் நாடுகளில் அந்நாட்டின் முன்னேற்றத்திற்கு அச்சாணியாய்த் திகழ்வது வங்கிகளின் அமைப்பேயாகும். பல்லாண்டுதொட்டு நம் நாட்டில் நிலவிவரும் பொருளாதார அடிப்படையை ஆராய்வோமே யாகில் கட்டுக்கோப்பான மூலதன வளர்ச்சி இல்லாமை புலனாகும். ஆங்காங்குத் தேங்கிக் கிடக்கும் நிதித்திறன் ஒரு புறமும், சீரற்ற முறையில் கையாளப்படும் வங்கியியல் முறைகளும் வங்கியியல் சீரமைப்புக்குள் கட்டுப்படாது விடுபட்ட நிதிக்கசிவுகளும் சொல்லி மாளா. இத்தகைய நிதி நிலைமைக்குக் காரணங்கள் யாவை? பணச் சந்தை என்றால் என்ன? பணச்சந்தையில் பங்குகொள்ளும் அங்கங்கள் யாவை? வாணிபம் செழிக்க, ஆலைகள் பற்பல தோன்றிட, சேவைகள் பெருகிட, உழைப்பினைப் பெருக்கிட, ஊதிய உயர்வுமூலம் நாட்டில் மக்கள் வாழ்க்கைத்தரம் உயர்ந்திட, உற்பத்தித்திறன் பெருகிட அனைத்திற்கும் அவசியம் 'பொருள்'—இதற்குத் தேவைப்படும் 'மூலதன ஆக்கம்' (capital formation)—அதை அளித்திடும் 'நிதி யமைப்பு' ஆகும்.

பணச் சந்தையின் சிறப்பியல்புகளைக் காண்பதற்கு முன், பணச் சந்தை என்றால் என்ன என்பதைப் பார்ப்போம். பணச்சந்தை என்றால், குறுகிய கால நிதிவசதி பெறும் சந்தையாகும். அவ்வப் போது தேவைப்படும் பணவசதி பெறுவதற்கு ஒரு வாய்ப்பளிப்பதே பணச் சந்தையின் நோக்கம். கடன் அளிப்பவர்களுக்குக் கழிவாயாக அமைவது பணச்சந்தை. அது மட்டுமன்று, கடன் தேடுவோர்க்குத் தோற்றுவாய்தான் பணச்சந்தை. சுருங்கக் கூறின், குறுகியகால நிதிவசதி யளிக்கவல்ல எல்லாவித நிதி நிலையங்களாலும் பின்னிப் பிணைக்கப்பட்ட மொத்த அமைப்பே பணச் சந்தையாகும். இந்தப் பணச் சந்தையில் பங்கு பெற்றுச் செயலாற்றும் வணிகர் களின் பட்டியலில் இடம்பெறும் கடன் ஏற்போரும், கடன் வழங்கு

வோரும் குறுகிய காலத் தவணையில் கடன் வசதியை ஏற்போர் பெறுகிறார்; வழங்குவோர் அளிக்கிறார் என்பது குறிப்பிடத்தக்கது.

வணிகத்திற்கு, முதல் இன்றியமையாதது. இதனை 'முதலிலார்க்கு ஊதியம் இல்லை' என்பது விளக்குகின்றது. முதலை மட்டுமல்லாது அவ்வப்போது ஏற்படக்கூடிய பணமுடை, நெருக்கடி நேரங்களில் வியாபாரிகளும், உற்பத்தியாளர்களும், வங்கியாளர்களும், சரக்குச் சந்தையினரும் ஏனையோரும் தாற்காலிகத் தவணையில் நிதி உதவி கோருகின்றனர். அந்த நேரத்தில் கைகொடுத்து உறுதுணை புரிவது பணச் சந்தையேயன்றி வேறொன்றுமில்லை.

**விளக்கம்**

பணச்சந்தை என்பது தவறான கருத்தைக் காட்டுவது போலிருக்கிறது. இதை விளக்கிக் கூறுங்கால் பேராசிரியர் கிரௌதர் 'பலதரப்பட்ட பணப் போன்மைப் பத்திரங்களில் (near money) பேரம் நிகழ்த்தும் பல்வேறு நிறுவனங்களையும் நிலையங்களையும்' பொதுவாகப் பணச் சந்தை என்று கூறுகின்றார்.

பேராசிரியர் எஸ். என். சென் என்பாரின் கூற்றின்படி, பணச் சந்தையென்பது வணிக மாற்று உண்டியல்கள், குறுகியகால அரசாங்க ஆவணங்கள் போன்ற கடன் கருவிகளின்மூலம் குறுகிய கால நிதியைக் கடன் கொடுக்கவும் பெறவும் உள்ள அமைப்பேயாகும்.

மேனாட்டுப் பேராசிரியர் மேடன், நாட்லர் அவர்களின் கூற்றில் பணச்சந்தை என்பது 'குறுகிய காலத் தவணையில் கடனாக ஈந்தும் பெற்றும், அதன் மூலம் ஒரு நாட்டின் அல்லது பன்னாட்டின் பண விவகாரங்களைக் கணிசமான அளவில் சரிக்கட்டக் கையாளும் ஒரு உத்தி' ஆகும்.

இங்குக் கடனுதவியை எதிர்நோக்கும் வணிகர்கள், ஊக வணிகர்கள் (speculators), தரகர்கள் (brokers), தயாரிப்பாளர்கள் (manufacturers) இவர்கள்தாம் பணச் சந்தையின் ஏற்போர். வணிக வங்கிகள் (Commercial Banks), நிதி நிறுவனங்கள் (Financial Institutions), காப்பீட்டு நிறுவனங்கள் (Insurance Companies), மைய வங்கி (Central Bank) மற்றும் ஏனையோர் கடனுதவி அளிப்போர்களாவர். இந்தப் பணச் சந்தையில் கைம்மாறி வரும் புழக்க ஏடுகள்தாம் மாற்று உண்டியல்களும், (Bill of Exchange), வாக்குறுதிச் சீட்டுகளும் (Promisory Notes). இவைகளைப் 'பணப் போன்மைப் பத்திரங்கள்' (near money) என்பர்.

ஒரு குறிப்பிட்ட இடத்தில் கூடி விற்பனையோ, கொள்முதலோ செய்வதைச் சந்தை என்போம். ஆனால் பணச்சந்தைக்கென்று சென்னையிலோ, பம்பாயிலோ, இலண்டனிலோ, நியூயார்க்கிலோ தனித்ததோர் இடம் ஒதுக்கப்படுவதில்லை. அதேபோல் பணமும் நேரிடையாகக் கைம்மாறுவதுமில்லை. குறுகிய காலக் கடனை ஈந்தும், பெற்றும் நடைபெறும் நடவடிக்கைகளைப் பணச் சந்தையில் காண்கிறோம்.

நீண்ட காலக் கடனுதவி தரும், கோரும் நிகழ்ச்சிகளை மூலதனச் சந்தையில் காணலாம். ஆனால், பணச் சந்தையில் அன்றாட நிகழ்ச்சிகளில் குறுகிய காலச் சீட்டுகளே வெகுவாகப் பரிவர்த்தனை செய்து கொள்ளப்படுகின்றன. ஆனால், மாறுபட்ட கருத்துகளும் உண்டு. சிலர், பணச் சந்தை என்பது நீண்ட, குறுகியகால-இருவித-கடனுதவிகளையும் உள்ளடக்குவதாகக் கூறுகின்றனர்.

உடனடியாகக் கடன் வழங்கு நிதி பெறுவதற்கும், அளிப்பதற்கும் வசதியளிக்கும் வகையிலே, ஒரு மைய இடத்தை நிருணயிப்பது வழக்கம். இந்தியாவில் பம்பாயை மையமாகக் கொண்டு பணச்சந்தை செயல்படுகின்றது. இதேபோல் இலண்டன் பணச் சந்தை, நியூயார்க் பணச் சந்தை பிரபலமானவைகளாகும். பம்பாயில் மட்டுமன்றி, இந்தியா முழுமையிலிருந்தும் குறுகிய காலத் தவணை நிதி கவரப்படுகிறது. ஆனால், இலண்டன் பணச் சந்தையோ உலகம் முழுதும் பாராட்டப் பெற்று, பன்னாட்டு வணிகச் சந்தையாகப் புகழ் பெற்றுவிட்டது. கடன் கேட்டு வரும் பிற நாட்டினருக்காகப் பன்னாட்டாருடைய கவனத்தையும் ஈர்த்து உடனடியாக, கடனுதவி வழங்க ஏற்பாடுகள் செய்யப்படுகின்றன. இவ்வாறு இலண்டன் பணச்சந்தையானது, அகில உலக முக்கியத்துவம் பெற்றுவிட்டது.

### பணச்சந்தையின் அமைவிடம் (Location)

பூகோள ரீதியாக நோக்கும்போது, பணச்சந்தை ஓர் இடத்தில் உருவாகிச் செயல்படலாம் அல்லது ஓர் இடத்துடன் தொடர்புள்ளதாக இருக்கலாம். எடுத்துக்காட்டாக, இலண்டன் பணச்சந்தை, நியூயார்க் பணச்சந்தை, பம்பாய் பணச்சந்தை முதலியனவற்றைக் கூறலாம். பம்பாய்ப் பணச்சந்தையில் பம்பாய் நகரத்தில் குறுகிய காலத்துக்குக் கடன் கொடுக்கப்படும் தொகை மட்டுமல்லாமல், அனைத்திந்தியக் கடன் வழங்கும் தொகையும் புழக்கத்தில் உள்ளது. இலண்டன் பணச்சந்தையோ, இங்கிலாந்தின் குறுகிய காலக் கடனுகை வழங்கும் தொகையை மட்டுமல்லாது அனைத்துலக நிதிகளையும் தன்பால் ஈர்த்துக்கொண்டு அந் நிதிகளைக் கடன் வேண்டுவோருக்குத்

தேவைகளுக்குத் தகுந்தாற்போல் வழங்குவதால் 'பன்னாட்டுப் பணச்சந்தை' என்றே குறிப்பிடத் தக்கதாய் உளது.

## பணச்சந்தை நடவடிக்கைகளில் ஈடுபடுவோர்

குறுகியகால நிதித்தேவைகள், எல்லோருக்கும், முக்கியமாக அரசு வர்த்தக நிலையங்கள், தொழில் நிறுவனங்கள் மற்றும் தனிப் பட்டோர் முதலானோருக்கு ஏற்படுகின்றன. குறுகியகாலக் கடனைப் பணச்சந்தையிலிருந்து அதிகமாகப் பெற்றுப் பயனடைபவை அரசு களேயாகும். நிதிப்பற்றுக்குறை அவ்வப்போது அரசுகளுக்கு ஏற் படுவதனால் பணச்சந்தையிலிருந்து அவைகள் எப்போதும் குறுகிய காலக் கடன் வாங்கியவண்ணமிருக்கும். வர்த்தக மற்றும் தொழில் நிறுவனங்கள், தங்கள் நடைமுறை மூலதனத்திற்காகக் (Working capital) கடன் திரட்டுகின்றன. கூடுதலான தேவைக்கு வேண்டிய மூலப்பொருள்களைத் தம் இருப்பில் வைத்துக்கொள்ள நிறுவனங்கள் கடன் பெறுகின்றன. இந் நிறுவனங்களைத் தவிர, பங்குத்தரகர்கள், அரசு ஆவணங்களின் நடவடிக்கைகளில் ஈடுபடுப வர்கள், வர்த்தகர்கள், உற்பத்தியாளர்கள், விவசாயிகள் மற்றும் வேறு சிலரும் கடன் வசதியை நாடுகிறார்கள்.

கூட்டுப் பங்கு வங்கிகளுக்கே கூடுதலான நிதி தேவைப்படும். அவ்வாறு தேவைப்படும்போது மைய வங்கியிடமிருந்தோ அல்லது ஒவ்வொரு வணிகவங்கியும் மற்றொரு வங்கியிடமிருந்தோ கடன் தேடிக்கொள்கிறது. பணச்சந்தையில் கடன்களாகக் கொடுக்கப் படும் நிதி நாட்டின் மையவங்கியிடமிருந்தும், வணிக வங்கிகளிட மிருந்தும் மற்றும் நிதி நிறுவனங்களிடமிருந்தும் பெறப்படுகின்றன.

ஒரு நாட்டின் பணப்புழக்கத்திலும் பொருளாதார வளர்ச்சி, தேக்கங்களிலும் மூலதனச்சந்தைக்கும் பெரும்பங்கு உண்டு; என்று லும் மருத்துவர்கள் எவ்வாறு உடலில் உள்ள பல நாடி (இரத்தக் குழாய்கள்) களை விடுத்து ஒரு சில நாடிகளை மட்டும் தேர்ந்தெடுத்து அவற்றின் துடிப்பைக் கொண்டு உடலின் ஆரோக்கிய நிலையைக் கூறி விடுகின்றார்களோ, அவ்வாறே ஒரு நாட்டின் பொருளாதார நாடி களில் குறுங்காலக் கடன் வசதிசெய்யும் 'பணச்சந்தையே' மிக முக்கி யமான நாடியாகும். அதில் ஏற்படும் பணச் சுழற்சி தேக்க வீக்கங் களைக் கொண்டே அந்நாட்டின் பொருளாதார ஆரோக்கிய நிலையை மிகத் துல்லியமாகக் கணித்துவிடலாம்.

அப்படிப்பட்ட பணச் சந்தை இந்தியாவில் வளர்ந்த வரலாறு, தற்காலத்தில் செயல்படும் நிலை, அதன் அங்கங்கள், அவற்றின் பணிகள் எல்லாவற்றையும் நெறிப்படுத்தும் முறைகள் முதலான வற்றை இனி வரும் அதிகாரங்களில் காண்போம்.

## 2. இந்தியப் பணச் சந்தை வரலாறு

குறுங்காலக் கடன்வசதியளிக்கும் நிலையங்களையே பணச் சந்தை என்பது குறிக்கும் என்று கண்டோம். இவ்வகைப் பணச் சந்தை இந்திய மண்ணில் வளர்ந்த வரலாற்றைச் சிறிது பார்ப்போம்.

இந்தியாவைப் பொறுத்த வரையில், ஐரோப்பியரின் வருகைக்குப்பின்னர்தான் நவீன வங்கி முறைகளும் தொழில்முறைகளும் அவற்றின் உடன் விளைவாகப் பணச்சந்தை, மூலதனச்சந்தை அமைப்புகளும் தோன்றி வளர்ந்தன.

ஐரோப்பியர் வருகைக்கு முன், பல்வேறு சிற்றரசுகளிலும் மொகலாயப் பேரரசு போன்ற பேரரசுகளிலும் அவ்வப் பிரதேசங்களில் பரம்பரையாக ஒரு சில தனிப்பட்ட குடும்பத்தினர், அல்லது வகுப்பினர் நாட்டின் நாணயச் செலாவணிக்குப் பொறுப்பாகவும், தனி நபர்களுக்கும், அரசர்களுக்கும்கூடக் (போர்க்காலத்தில்) கடன் வழங்கும் வளம் பெற்றவர்களாகவும் விளங்கி வந்துள்ளனர். கடன் வழங்குவதும் கடன் பெறுவதும் வேத காலத்திலிருந்து நிகழ்ந்து வருகிற ஒன்றுகும். அர்த்தசாஸ்திரம் போன்ற அறநூல்களும் இதைத் தவறுன செயலாகவோ அல்லது முறைகேடான செயலாகவோ கூறவில்லை. மாருக, எவ்வெவ்வகைக் கடன்களுக்கு எவ்வளவெவ்வளவு வட்டி வீதம் வாங்கலாம் என்று விதிமுறைகளை வகுத்துத் தந்துள்ளன. ஆனுல், எவ்வாறு பல்வேறு அரச குடும்பங்களால், பல்வேறு சிறு சிறு நாடுகளாக ஆளப்பட்டுப் பல்வகைப்பட்ட நிதி, நீதி, நிருவாக முறைகளைக் கொண்டிருந்த பரத கண்டம், ஐரோப்பியர் வருகைக்குப் பின் ஒரே வகையான நிதி, நீதி, நிருவாக முறைகளைப் பெற்றதோ (சில சுதேச சமஸ்தானங்கள் தம் தம் பாரம்பரியமான முறைகளைக் கையாண்டாலும் பொதுவானதொரு ஒருமைப்பாட்டை ஐரோப்பியர்களால் அமல்படுத்த முடிந்தது) அதே போல, ஒரே விதமான வணிக வங்கி தொழில்முறைகளையும் ஐரோப்பியர் வருகைக்குப் பின்னரே பெற்றது.

1683-ல் ஆங்கிலக் கிழக்கிந்தியக் கம்பெனி சென்னையில் மேற்கத்திய பாணியில் ஒரு வங்கியைத் தொடங்கியது. இது இந்தியப் பொருளாதார வரலாற்றில் ஒரு திருப்பு மையமாக அமைந்தது. ஏற்கெனவே இந்திய மண்ணில் வங்கி நடவடிக்கை இருந்து வந்ததென்று கூறப்பட்டாலும் அது மேற்கத்திய பாணியைப் போன்று ஒரு தனிப்பட்டவரின் பொருளாதார வளர்ச்சிக்கு உதவுவதாக அமைந்து செயல்படவில்லை என்று உறுதியாகக் கூறலாம். அத்துடன், மேற்கொள்ளப்பட்ட முறைகளும் ஊருக்கு ஊர், பிரதேசத்திற்குப் பிரதேசம், பாரம்பரியமான பல்வேறு பழக்கவழக்கங்களாலும் மொழிகளாலும் கையாளப்பட்டு வந்ததால், நாடு முழுமைக்கும் ஒரே விதமான வங்கி முறை நடைமுறையில் இல்லை. இந்த மிகப் பெருங் குறையைத் தீர்த்து வைத்தவர்கள் இந்தியாவை ஆண்ட ஐரோப்பியர்களே. அவர்கள் தம் சுயநலத்திற்கென்று செய்த சில ஏற்பாடுகளே ஒரு புதிய இந்தியாவின் தோற்றத்துக்கு வழி வகுத்தது. வங்கிமுறை, போக்குவரத்துச் சாதன வசதிகள், தொழில் முறைகள், நிருவாக முறைகள் எல்லாம் அவர்களது ஆதிக்கத்தை நிலைநாட்டுவதற்கென்றே தொடங்கப் பெற்றவை. ஆனால், அவை தாம் தற்போதைய இந்தியாவைத் தோற்றுவித்தவையாகும்.

இவ்வகையில் அமைந்ததே மேற்குறிப்பிட்ட முதல் வங்கியின் தொடக்கமாகும். அடுத்து 1809-ல் அரசின் உதவியோடு கல்கத்தா வங்கி தொடங்கப்பெற்றது. கல்கத்தா, பம்பாய், சென்னையிலிருந்த மூன்று மாநில வங்கிகளை இணைத்து 1921-ல் இந்தியாவின் இம்பீரியல் வங்கி (Imperial Bank of India) தோற்றுவிக்கப்பட்டது. இவ் இம்பீரியல் வங்கி தோன்றும் வரை சென்னை, பம்பாய், கல்கத்தா ஆகிய மூன்று நகரங்களிலுமிருந்த மாநில வங்கிகளே ஆங்கில அரசின் எல்லா வங்கி நடவடிக்கைகளையும் செய்து வந்தன. இம்பீரியல் வங்கி தோன்றியபின் அதுவே அரசாங்க வங்கியாகச் செயல்பட்டு வந்தது.

1926-ல் ஹில்டன் யங் கமிஷன் இந்தியாவிற்கு ஒரு மைய வங்கி வேண்டுமென்று பரிந்துரைத்ததன் பேரில் 1935-ல் இந்திய ரிஸர்வு வங்கி (Reserve Bank of India) தோற்றுவிக்கப்பட்டது. 1949-ல் ரிஸர்வு வங்கியையும் 1955-ல் இம்பீரியல் வங்கியையும் (தற்போதைய ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியா) நாட்டுடைமையாக்கினர். 1969-ல் ஜூலை 19-ல் 14 பெரிய வணிக வங்கிகளை நாட்டுடைமையாக்கினர். இது, முதலில் ஆங்கில அரசினலும், பின்னர் இந்திய அரசினலும் மேற்கத்திய பாணி வங்கி முறையை வளர்த்துவந்த வரலாருகும். அத்துடன் இவை ஆங்கில அரசின் நிருவாக வணிக வசதிக்காகத் தோற்றுவித்து வளர்க்கப்பட்டவையாகும்.

1858-ல் இந்திய விடுதலை இயக்கம் தொடங்கியது. நாட்டில் தேசிய உணர்வு தலையெடுத்தது. இதனால், ராஜாராம் மோஹன்ராய் போன்றவர்கள் இந்தியாவில் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக ஊறி வளர்ந்து நிலைபெற்றிருந்த சில சமூகப் பழக்கவழக்கங்களை மாற்றி ஐரோப்பிய நாகரிகத்தில் உள்ள நவீனக் கல்விமுறை போன்ற முற்போக்கான கொள்கைகளையும், சில பழக்கவழக்கங்களையும் இந்திய சமூகத்தில் பரப்பியதுபோல அங்கிருந்த பணவளம் பெற்றோர் மேற்கத்திய பாணியில் தொழில்களையும், வணிக முறைகளையும் வங்கி முறைகளையும் பின்பற்றிப் புதிய தொழில், வணிக நிறுவனங்களைத் தோற்றுவித்தனர். நாட்டின் பல பாகங்களில் இந்தியர்களால் பல வங்கிகள் தோற்றுவிக்கப்பட்டன. 1881-ல் அவுத் (Oudh) என்ற இடத்தில் வரையறுக்கப்பட்ட பொறுப்புகளுடன் (Limited Liability) ஒரு வங்கி தோற்றுவிக்கப்பட்டது. அடுத்து, இப்பொழுதும் நன்கு செயல்பட்டுவரும் நாட்டின் பழமையான வங்கிகளில் ஒன்றாகிய பஞ்சாப் நேஷனல் பாங்க் (Punjab National Bank) 1894-ல் தோற்றுவிக்கப்பட்டது. அடுத்து 1906 முதல் 1913 வரையிலான ஆண்டுகளில் நாட்டில் சுதேசி இயக்கம் மிகத் தீவிரமாக இருந்தபொழுது 9 புதிய வங்கிகள் தோன்றின. அவற்றில், இன்றும் வெற்றிகரமாகச் செயல்பட்டு வருபவை (1) பாங்க் ஆப் இந்தியா (Bank of India), (2) இண்டியன் பாங்க் (Indian Bank), (3) சென்ட்ரல் பாங்க் ஆப் இந்தியா (Central Bank of India), (4) பாங்க் ஆப் பரோடா (Bank of Baroda), (5) பாங்க் ஆப் மைசூர் (Bank of Mysore) ஆகியவையாகும். இவ் வங்கிகளெல்லாம் பெரும்பாலும் இந்தியாவின் பெரும் வணிக மையங்களாகிய பெரிய நகரங்களிலேயே செயல்பட்டு வருகின்றன.

நாட்டுப்புறத்தில் நவீன வங்கிமுறை பரவுவதற்கு மிக நீண்ட காலம் பிடித்தது. இம் முயற்சியில் இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் ஏற்பட்ட கூட்டுறவு இயக்கம்தான் தீவிரக் கவனம் செலுத்தி வந்தது. அங்கங்குக் கூட்டுறவு நாணயச் சங்கங்களும், கூட்டுறவு மைய வங்கிகளும், நில அடைமான வங்கிகளும் அவ்வம் மாநில அரசுகளின் ஆதரவில் தொடங்கப் பெற்றன.

இந் நவீன வங்கிமுறை (Modern Banking) வளர்ச்சிதான், இந்திய மண்ணில் நெடுங்காலமாக இல்லாமல் இருந்த தனி நபர் சேமிப்பையும், அச் சேமிப்பைப் பொருளாதாரவளர்ச்சி நோக்கோடு, விவசாய, தொழில், வணிகங்களுக்கென முதலீடு செய்யும் பழக்கத்தையும் இந்திய மக்களுக்கு ஊட்டி வளர்த்தன. அங்கங்கே இந்தியத் தொழில் வணிக நிறுவனங்களும் ஒவ்வொரு நாளும் தோன்றிய வண்ணமிருந்தன; என்றாலும் காலங்காலமாக வறுமையால் பீடிக்கப்

பட்ட இந்தியாவுக்கு அன்பும் ஆதரவும் காட்டக்கூடிய ஓர் அரசு தேவைப்பட்டது. ஆங்கிலேயர் ஆட்சி அவ்வகை அரசாக அமைய வில்லை.

அந்நிய நாட்டு ஆதிக்கத்தின் விளைவாக இந்தியாவின் நிதி நிறுவனங்கள் வளர்ச்சியடையாமல் இருந்தன. அந்நியர்களின் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்காகவும் அவர்கள் நலனைக் காப்பதற் காகவும் இந்திய நிதி இயலில் ஓரிரு துறைகள் சற்று வளர்ச்சியுடைய தாக இருந்தன. இந்தியப் பணவியல், வங்கியியல், மற்றும் பொரு ளாதாரத் துறையில் இயங்கிய சில நிறுவனங்கள் யாவும் இங்கிலாந்தில் செயல்படும் வழிமுறைகளை அடிப்படையாகக் கொண்டு இயங்கின. 'கேபிடல்' என்ற பத்திரிகையில் 1896ஆம் ஆண்டு குறிப்பிட்டிருந்ததுபோல் இந்தியாவின் நலனை முன்னிட்டு அமலுக்குக் கொண்டுவரும் கொள்கை ஏதேனும் இங்கிலாந்தில் இயங்கி வந்த வலுவான அமைப்புகளின் நலனைப் பாதிப்பதாய் இருந்தால், அக் கொள்கை செயல்படுத்தப்படாமல் விடப்படும். மேலும் இந் நாட்டை ஆட்சி செய்துவந்த ஆங்கிலேயப் பேரரசு இந்திய நாட்டு வங்கியியல், தொழில், வாணிகம் இவைகளின் வளர்ச்சிக்கு எந்தவித முயற்சியும் எடுத்துக்கொள்ளவில்லை. இவ்வித ஊக்கமின்மையால் இந்திய நாட்டின் பொருளாதார முன்னேற்றம் தடைபட்டது.

வேளாண்மையை முக்கியத் தொழிலாகக்கொண்ட நம்நாட்டில், விவசாயிகளின் நிதித் தேவைகளைப் பெரிய அளவில் ஷ்ராப், மகாஜன் நாட்டு வங்கியரும் மற்றும் தனிப்பட்ட முறையில் கடன் கொடுப்போரும் பூர்த்தி செய்து வந்தார்கள். இந்தியாவில் இயங்கி வந்த சில பரம்பரைத் தொழில்கள் வளர்ச்சியுறவில்லை. மேலும் நாட்டில் பரவலாகவும் இல்லை.

அயல் நாடுகளின் போட்டியால், இந்தியத் தொன்மைத் தொழில்கள் (Indigenous Industries) நலிந்து, வலுவிழந்து கிடந்தன. நம் நாடு அடிமைத் தளையில் கட்டுண்டு செயலற்றுக் கிடந்ததால், அதற்கு என்று உகந்த, தேவைப்பட்ட ஒரு பொருளாதார அமைப்பை (பாங்கை) உருவாக்க முடியவில்லை. தொன்மைத் தொழில்கள் வளர்ச்சியுறாமல் சீரிழந்து குலைந்த நேரத்தில், நம் நாட்டிற்குத் தேவைப்பட்ட உற்பத்திப் பொருள்கள் பெருமளவில் இறக்குமதியாகும் வண்ணம் இருந்தன. இருப்பினும் அங்கங்கே சில பெரிய தொழில் நிறுவனங்கள் இந்தியாவில் உருவாகாமலும் இல்லை. தொழில், வணிக வளர்ச்சிக்கு நம் நாட்டிற்கு இன்றியமையாத நிதி நிறுவனங்களாகிய இந்தியக் கூட்டுப்பங்கு வங்கிகளும் (Indian Joint

Stock Banks) அந்நியச் செலாவணி வங்கிகளும் ஐரோப்பியர்களின் ஆதிக்கத்தில் செயல்பட்டு வந்தன.

இந் நூற்றாண்டின் தொடக்கத்தில் இந்தியப் பணச்சந்தையின் ஒரு பகுதி இந்தியர்களின் வசமும் மற்றொருபகுதி ஐரோப்பியர்களின் ஆதிக்கத்திலும் இயங்கி வந்தன. இந்தியப் பொருளாதாரம் அந்நியர்களின் குறுக்கீட்டால் இயல்பாக, முறையாக முன்னேற்றம் அடையவில்லை.

இந்திய வங்கியியல் நவீன முறையில் வளராததற்கு மற்றுமொரு காரணமும் உண்டு. அக் காலத்திய அரசுகள் வங்கியியலில் முன்னேறுவதற்கான பிரச்சினைகளை விடுத்துத் (தவிர்த்து) தம் முழுக் கவனத்தையும் செலாவணி, பணவியல் பிரச்சினைகளில் செலுத்தின.

நம் நாட்டிற்கு ரிஸர்வு பேங்க் ஆப் இந்தியா (Reserve Bank of India) என்ற மைய வங்கி நிறுவப்பட்டுச் செயல்படும் காலம்வரை அரசின் மனப்பாங்கு (attitude) மேற்கூறியதுபோல் இருந்தது.

இந்தியப் பணச்சந்தை வரலாற்றில் பம்பாய்க்கும் கல்கத்தாவிற்கும் முக்கியமான இடமுண்டு. சென்ற நூற்றாண்டிலும் இந்த நூற்றாண்டுத் தொடக்கத்திலும், வங்காளம், பம்பாய் ஆகிய இரண்டு பெரிய மாநிலங்கள்தாம் தொழிற் பெருக்கம், வணிகவளம், நாணயப் புழக்கம் ஆகியவற்றில் முன்னேறியிருந்தன. முக்கியமான ஏற்றுமதிப் பொருளான சணல் தொழிலின் இருப்பிடம் வங்காளம். இந்தியாவின் பஞ்சாலைத் தொழிலில் அதிகமாக வளர்ந்துள்ள இடம் பம்பாய். கல்கத்தா, பம்பாய் ஆகிய இரண்டுமே முதல்தரமான துறைமுகங்களைப் பெற்றுள்ளன. அத்துடன், முக்கியமான வணிக மையங்களாகையால் அவற்றைச் சுற்றிப் பல துணைத்தொழில்களும் தோன்றி வளர்ந்துள்ளன. ஒரு குறிப்பிடத்தக்க செய்தி என்னவென்றால், வங்காளத்தில் தோன்றிய தொழில் வணிக நிறுவனங்களில் பல, ஆங்கிலேயர்களால் தோற்றுவிக்கப்பட்டு நிருவகிக்கப்பட்டன. பம்பாயில் தோற்றுவிக்கப்பட்டவை பெரும்பாலும் இந்தியர்களாலேயே தோற்றுவிக்கப்பட்டு நிருவகிக்கப்பட்டன. இது தவிர, ஏனைய மாநிலங்களிலும் சுதேசி இயக்கம் தீவிரமடைய அடைய நம் நாட்டினரால் பல தொழில், வணிக நிறுவனங்கள் தோற்றுவிக்கப்பட்டன.

**பம்பாயின் சிறப்பிடம்**

இந்தியப் பணச்சந்தை வரலாற்றில் பம்பாய் ஒரு தனிச் சிறப்பான இடத்தை வகிக்கிறது. ஆரம்ப காலத்தில், அதன் தொழில் வணிக வளர்ச்சியைப்பற்றி ஏற்கெனவே குறிப்பிட்டோம்.

முதல் உலகப் போர்க்காலத்திலும் இரண்டாம் உலகப் போர்க் காலத்திலும் அதனுடைய முக்கியத்துவம் மேலும் பெருகி, கல்கத்தாவைவிட அது பல நிலைகளில் உயர்ந்துவிட்டது. போர்க் காலங்களில் அது நேச நாடுகளுக்கு வாய்ப்பும் வசதியும் மிக்க ஒரு போர்த்தளமாகச் செயல்பட்டது. சூயஸ் கால்வாய் மூலமாகவும், நன்னம்பிக்கை முனை (Cape of Good Hope) வழியாகவும் வரும் கப்பல்களுக்கு அது அருகில் அமைந்த ஒரு துறைமுகமாக விளங்கியது. இதனால், ஐரோப்பிய நாடுகளுடன் நிகழ்ந்த இந்திய ஏற்றுமதி இறக்குமதிகளில் பெரும்பகுதி பம்பாயின் மூலமே நடைபெற்றது. இதன் விளைவாகப் பம்பாய்க்குப் போக்குவரவு வசதிகளும், ஏனைய நிதி நிருவாக வசதிகளும் அதிகமாக ஏற்பட்டன.

பம்பாயில்தான், ரிஸர்வு வங்கியின் தலைமையகம் ஏற்படுத்தப் பட்டது. பங்கு மாற்றுச் சந்தை (Stock Exchange), பருத்திச் சந்தை (Cotton market), பொற் சந்தை (Bullion market) ஆகியவை யெல்லாம் பம்பாயில்தான் ஏற்படுத்தப்பட்டு, அவை இந்தியா முழுமைக்குமான தலைமையகங்களாகச் செயல்படுகின்றன. இந்தியாவில் எந்த இடத்தில், எந்தத் தொழில், வணிக நிறுவனங்கள் தொடங்கப் பெற்றாலும், அவற்றின் பங்குகள் முதலில் பம்பாயில்தான் வெளியிடப்படுகின்றன. அங்கு அவற்றிற்கு நல்ல வரவேற்பு இருந்ததென்றால், அவை நிச்சயம் வெற்றி பெறும் என்று உறுதியாகக் கூறலாம். ஏனென்றால், பம்பாய் வணிகர்கள், பொருளாதார வணிகக் கண்ணோட்டத் திறம் பெற்றவர்களாகவும், பம்பாய் மட்டுமல்லாது அகில இந்தியாவிலும் இயங்கும் வணிகப் போக்குகளை அவ்வப்போது கணித்து வருபவர்களாகவும் உள்ளனர். அண்மையில் ஸ்பிக் (Spic) நிறுவனத்தின் பங்குகள் முதலில் அங்கு வெளியிடப் பெற்று நல்ல வெற்றி பெற்றதை எல்லோரும் அறிவர்.

இவ்வாறு இந்தியப் பணச் சந்தை வரலாற்றில் பம்பாய் ஓர் உயர்ந்த இடத்தை வகிக்கிறது. அதுவே இந்தியப் பணச் சந்தையின் தலைமையகம் என்று சொல்லக் கூடிய அளவிற்கும் வளர்ச்சி பெற்றுள்ளது. இலண்டன், நியூயார்க் பணச் சந்தைகளுடன் ஒப்பிடக் கூடிய அளவிற்கு வளர்ச்சியுற்றதன்று என்றாலும், உலகின் பிற பணச் சந்தைகளுக்கு இது எந்த விதத்தாலும் குறைந்ததன்று என்று அறுதியிட்டுக் கூறலாம்.

# 3. மூலதனச் சந்தை
## (Capital Market)

பணச் சந்தை என்பது, ஒரு குறுகிய கண்ணோட்டத்துடன் பார்க்கும் பொழுது தொழில், வணிக நிலையங்கள் வங்கி முறையின் துணைகொண்டு தங்கள் குறுங்காலத் தேவைக்குப் பயன்படுத்திக் கொள்ளும் புழக்க நிதியின் இயக்கத்தைக் குறிப்பிடுவதாகத் தோன்றும். ஆனால், அது நீண்டகால மூலதனங்களின் உருவாக்கத்தையும் உள்ளடக்கியதாகும். அதாவது நாட்டு மொத்த வருவாயில் மொத்தச் செலவு போக மீதப்படும் மிகைப் பொருள் சேமிப்பாக வைக்கப்படுகிறது. இச் சேமிப்புப் பல வகைகளில் முதலீடு செய்யப் படுகின்றது. அம் முதலீடுகள் நெடுங்கால மூலதனங்களாகின்றன.

மாதச் சம்பளம் பெறும் அரசாங்க அல்லது தனியார் துறை ஊழியர்களுக்குக் கட்டாயமாகச் சம்பளத்தில் பிடிக்கப்படும் சேமிப்பு நிதிகள் (Provident Funds) நெடுங்கால மூலதனமாகின்றன. இவர்கள் ஆயுள் காப்பீட்டிலும் (Life-Insurance) சேர்ந்து சேமிக்கின்றனர்.

மாதச் சம்பளம் பெறாத பொதுமக்களில், வசதி படைத்தவர்கள் தங்கள் வருவாயில் செலவு போக மீறும் பொருளை நிலம், வீடு, தங்கம், வெள்ளி முதலியன வாங்குவதிலும், அரசு ஆவணங்கள், தொழில் நிறுவனங்கள் வெளியிடும் பங்குகள், கடன் பத்திரங்கள் ஆகியன வாங்குவதிலும் முதலீடு செய்கின்றனர். இவ்வாறு தனி நபர் சேமிப்பு மேற்குறிப்பிட்ட பல வகைகளில் மூலதனங்களாக மாறுகின்றன.

இங்கு மூலதனச் சந்தை என்று கூறும்போது, நாம் முக்கியமாக எடுத்துக்கொள்வது தொழில் வளர்ச்சிக்கு உதவுகின்ற மூலதனத்தையே. நாட்டின் தொழில் வளத்திற்கு உதவும் மூலதனத்தைப் போல் நிலம், வீடு முதலான சொத்து மூலதனங்களும் ஓரளவு முக்கியமானவையாகும். பெரும்பாலோர் தங்கள் சேமிப்புகளைத்

தங்கம், வெள்ளி முதலானவைகளிலேயே முதலீடு செய்கின்றனர். காரணம், சமுதாயத்தில் அவைகளுக்கு உள்ள மதிப்பும், அவற்றின் நீர்மை நிலையும் (liquidity) தாம்.

நாம் இங்கு மூலதனச் சந்தை என்று குறிப்பிடுவது, மக்கள் குறிப்பிட்ட வகைகளில் முதலீடு செய்வதையல்ல. மாறாக மக்கள், தங்கள் சேமிப்புகளைப் புதிய பொன் விளிம்பு ஆவணங்களையும் (Gilt-edged securities), பாதிப்பொன் விளிம்பு ஆவணங்களையும் (semi-gilt-edged securities), தொழில் நிறுவனங்கள் புதிதாக வெளியிடும் பங்குகள் கடன் ஈட்டுப் பத்திரங்கள் முதலானவற்றையும் வாங்குவதில் முதலீடு செய்வதையே குறிப்பிடுகின்றோம். அதிலும் கூட, தனியாகத் தொழிலிலும் வாணிகத்திலும் முதலீடு செய்யப்பட்ட சேமிப்புகளை நீக்கி, குறிப்பாகச் சந்தையில் புழக்கத்திற்கு வரும் முதலீடுகளையே குறிப்பிடுகின்றோம். பொதுவாக நாட்டின் பொருளாதார நிலையைக் கணிக்கின்றபோது, தனி நபர் சேமிப்புகளையும் ஏற்கெனவே புழக்கத்தில் இருக்கும் ஆவணங்களில் முதலீடு செய்யப்பட்டதையும் கணக்கிலெடுத்துக் கொள்ள வேண்டும். ஒருவர் வாங்குவது, இன்னொருவரது விற்பனையாகிறது. ஆகையால், புதிய வெளியீடுகளில் முதலீடு செய்யப்படும் சேமிப்புகளே, புதிய மூலதனம் உருவாதற்குக் காரணமாகின்றன.

### நிறுமச் சேமிப்புகள் (Corporate Savings)

முதலீடு செய்முறை, பல விஷயங்களை உள்ளிட்ட ஒரு பெரிய பிரச்சினை. சேமிப்பு முறையின் பல்வேறு வகைகளை நன்கு விளக்கிய பின்னரே, முதலீடு செய்முறையைப் பற்றி விளக்க முடியும். சேமிப்பு என்றால், பொதுவாகத் தனிப்பட்ட அல்லது தனிநபர் சேமிப்பையே குறிப்பதாக இருந்தது. ஆனால் தற்போதைய நவீனப் பொருளாதார அமைப்பில், நிறுவனங்களும் (Companies) கூட்டுக் கழகங்களும் (Corporations) சேமிக்கின்றன. ஒரு தொழில் நிறுவனத்தின் இலாபத்தை அத் தொழிலிலேயே மறுபடியும் மறுமுதலீடு செய்கின்ற பொழுது நிறுமச் சேமிப்பு (Corporate Savings) உருவாகிறது. தேய்மானம் (depreciation), கடன் பொறுப்புகள் (liabilities), வரிகள் (taxes) முதலானவற்றிற்கு ஒதுக்கியது போக மீதமுள்ள ஊதியத்தில் ஒரு பகுதி பங்குதாரர்களுக்கு விநியோகிக்கப்படுகின்றது. மற்றொரு பகுதி, நிறுவனத்தை நிலைநிறுத்தவும் வளர்க்கவும் பயன்படுத்தப்படுகிறது. உதாரணமாக, ஒரு நேரத்தில் டாட்டா அயர்ன் அண்டு ஸ்டீல் கம்பெனியினுடைய (Tata Iron and Steel Company) செலுத்தப்பட்ட மூலதனம் ரூ. 10½ கோடிதான். ஆனால், தனது நிகர இலாபத்தில் விநியோகிக்கப்படாமல் காப்பு நிதியாகத் (Reserve

Fund) தேக்கி வைத்துக் கொண்டுள்ள தொகை ரூ. 12 கோடிக்கும் மேலாகும்.

எல்லாத் தொழில் வணிக நிலையங்களும் தாம் ஈட்டிய ஊதியத்தை மறு முதலீடு (Ploughing back) செய்வதன் மூலமே நல்ல வளர்ச்சியைப் பெறுகின்றன. சேமிப்பு, இப்படிப் பயன்படுத் தப்படும் பொழுது, பொருளாதார வளர்ச்சியில் அது ஒரு முக்கிய மான இடத்தைப் பெறுகிறது. வங்கிகள் காப்பீட்டு நிறுவனங்கள் முதலீட்டுப் பொறுப்பகங்கள் (Investment Trusts), மற்றச் சேமிப்பு நிலையங்கள் ஆகிய அனைத்தும் இம் முறையைப் பின்பற்றியே, தமது நிகர இலாபத்தின் ஒரு பகுதியிலிருந்து காப்பு நிதியை (Reserve Fund) உருவாக்கிக் கொள்கின்றன. இது நேர்முகமாகவோ மறைமுக மாகவோ, புதிய தொழில்கள் தோன்றுவதற்கும் வளர்வதற்கும் பேருதவி செய்கிறது. தனிநபர் சேமிப்புகள் பலவகைகளில் முதலீடு செய்யப்படுகின்றன. அவை நேரடியாகத் தொழில் வளர்ச்சிக்கு உதவுவது மிக மிக அரிது. ஆனால், நிறுவனங்கள் தங்கள் நிறுமச் சேமிப்புகளை (Corporate Savings) மறுபடியும் தமது தொழிலிலேயே முடக்குகின்றன. இதனால், இந் நிறுவனங்கள், தமது சொந்த ஊதி யத்தின் ஊட்டத்தினால் உள்ளுக்குள்ளேயே, நன்கு உரம் பெற்று விடுகின்றன.

### தேய்மான நிதிகள் (Depreciation Funds)

ஒரு தொழில் நிறுவனத்தின் மொத்த நடப்பு ஊதிய ஈட்டி லிருந்து (Current Earnings) உபரி அல்லது மிகையான தொகையை நிறுமச் சேமிப்புக்கு (Corporate saving) ஒதுக்குவதற்கு முன், இயந் திரச் சாதனங்களைப் பழுது பார்ப்பதற்காகவும், புதுப்பிப் பதற்காகவும் ஒரு குறிப்பிட்ட சிறு தொகையை ஒதுக்க வேண்டி யுள்ளது. அதாவது இருக்கும் மூலதனத்தைக் காப்பதற்காகவே, மொத்த ஊதியத்திலிருந்து ஒரு தொகையை ஒதுக்க வேண்டியுள்ளது. இதற்குத் தேய்மான நிதி (Depreciation Fund) என்று பெயர். ஒவ்வோராண்டும் இவ்வாறு ஒதுக்குகின்ற தேய்மான நிதியை, நிறுவனம் தனக்கு நடைமுறை நிதியாகவும் (Working Capital) பயன் படுத்திக் கொள்ளலாம். அல்லது நிலை மூலதனங்களைப் (Fixed capital) பெருக்கிக் (expand) கொள்ளவும் பயன்படுத்திக் கொள்ள லாம். ஆனால் என்றாகிலும் ஒரு நாள், அந் நிதியை, பழையன வற்றைக் கழித்துப் புதிய எந்திரச்சாதனங்களை வாங்குவதற்குப் பயன்படுத்த வேண்டியிருக்கும். இத் தேய்மான நிதி, ஆண்டு நிகரச் சேமிப்பிலிருந்து வேறுபட்டதாகும். ஆனால், இவ்விரண்டும் கூடினால் 'மொத்த மூலதன ஆக்கம்' (Total Capital formation) விளைகிறது. சில சமயங்களில் அடிக்கடி எந்திரச் சாதனங்களை மாற்றிப் புதியன

வற்றை நிறுவுகின்ற பொழுது, மொத்த மூலதனம், நிகர மூலதனம் ஆகிய இரண்டிற்கும் நடைமுறையில் வேறுபாடு கண்டறிய முடியாத நிலை ஏற்படுகிறது. எங்கெங்கு முடியுமோ அங்கெல்லாம் இரண்டையும் வேறுபடுத்திக் காட்டுவது மிகவும் நல்லது. புதிய மூலதன ஆக்கம் (New Capital formation) என்றால், நிகர மூல தனத்தைத் (Net Capital) தான் குறிக்கும். மொத்த மூலதனம் என்றால் இருக்கும் மூலதனத்தைப் புதுப்பிக்க ஒதுக்கும் தொகை யையும் உள்ளடக்கியதாகும். எனவே, இங்கு நாம் மூலதனச் சந்தை என்ற தலைப்பின்கீழ் முதன்மையாகக் கருத்தில் எடுத்துக்கொள்வது நிகர மூலதன ஆக்கத்தையே (Net Capital formation).

ஒரு நாட்டில் தொழிற்பெருக்கம் ஏற்படுகின்றபொழுது, நிறுமச் சேமிப்பும் (Corporate saving) கூடவே வளர்கிறது. அது மீண்டும் தொழில்களிலேயே மறு முதலீடு (re-investment) செய்யப்படு வதனால், தொழில்கள் ஊட்டமும் ஊக்கமும் பெற்று வளர்கின்றன. இதுதான் முன்னேறிய நாடுகள் அடைந்துள்ள விரைவான தொழில் வளர்ச்சியின் இரகசியமாகும். தனிநபர் சேமிப்பு முக்கியமானது தான் என்றாலும் தொழில்கள் உருவாக்கும் நிறுமச் சேமிப்புகள் (Corporate savings)தாம் அவற்றின் வளத்திற்கும், வளர்ச்சிக்கும் பெரிதும் உதவுகின்றன. தொழில் வளர்ச்சியில் முன்னேறியுள்ள நாடுகளில் தனிநபர் சேமிப்பைக் காட்டிலும் நிறுமச் சேமிப்புகளே அதிகம். (உதாரணமாக, 1950ஆம் ஆண்டில் பிரிட்டனில் தனிநபர் சேமிப்பு 400 மில்லியன் பவுன்களாகவும், நிறுமச் சேமிப்பு 500 மில்லியன் பவுன்களாகவும் கணக்கிடப்பட்டது. அதே போல் அமெரிக்கா ஐக்கிய நாடுகளிலும் முறையே 17,000 டாலர்களாகவும், 19,000 டாலர்களாகவும் கணக்கிடப்பட்டது.) தனியார் துறைத் தொழில்களுக்குத் தொடக்க நிலையில் தனிநபர் சேமிப்புகள் மிக முக்கியத்துவம் பெற்றிருந்தாலும், அவற்றின் விரைவான வளர்ச்சிக்கு இந் நிறுமச் சேமிப்புகளே பெருங்காரணமாகும். எனவே, எங்கெல்லாம் தொழிற்பெருக்கம் விரைவுபடுத்தப்பட வேண்டுமோ அங்கெல்லாம் இந் நிறுமச் சேமிப்பை ஊக்குவிக்க வேண்டியது அவசியமாகிறது.

தனிநபர் சேமிப்பும், நிறுமச் சேமிப்பும் (Corporate Saving புதியமூலதனங்களில் முதலீடு செய்யப்படும்போது, அவை மூலதனச் சந்தையின் முக்கிய அங்கங்களாகின்றன. பல கோணங்களிலிருந்து வரும் தேவைக்கு இப் புதிய மூலதன அளிப்பு(Supply of new capital) ஈடு கொடுக்கின்றது. அரசாங்கமும், அரசுப் போன்மைக் கழகங் களும் ((Quasi Government Bodies) எழுப்பும் புதிய பொதுக் கடன் திட்டங்கள், சிறு சேமிப்புத் திட்டங்கள் ஆகியவை இப் புதிய மூலதன

அளிப்பில் பெரும் பகுதியை ஈர்த்துக் கொள்கின்றன. இச் சந்தையின் ஒப்பியல் முக்கியத்துவம் (Relative importance) அவ்வப்போது நிலவும் பொருளாதாரச் சூழ்நிலைக்கேற்பக் காலந்தோறும் மாறுபடும்.

புதிய மூலதன வெளியீடுகளைப் (New industrial issues) பொறுத்த வரையில், ஏற்கெனவே நன்கு நிலைபெற்று, தம் உற்பத்திச் சாதனையாலும் ஊதிய ஈட்டினாலும் பொது மக்களிடையே நல்ல பெயர் சம்பாதித்துள்ள பழைய நிறுவனங்களுக்கு அது மிக எளிதாகும். ஆனால், புதிய நிறுவனங்களுக்கு மிகவும் கடினமாகும். அவற்றின் முகவர்கள் (Promoters) பொது மக்களிடத்தில் முதலில் தம் நிறுவனத்தின் பேரில் ஒரு நம்பிக்கையை உருவாக்க வேண்டியுள்ளது. மேலும், பங்கு மாற்றுச் சந்தை மிகச் சுறுசுறுப்பாக இயங்கும் போது, ஏற்கெனவே புழக்கத்திலுள்ள முதலீடுகள் (existing investments) நன்கு இலாபகரமாக விற்பனையாகிக்கொண்டுள்ள சமயத்தில், புதிய மூலதனத்தை மிக எளிதாகத் திரட்டிவிடலாம். ஆனால், பங்குச் சந்தை மந்தமான சமயத்தில் பொது மக்களிடத்தில் புதிய மூலதனங்களில் முதலீடு செய்யும் உற்சாகமின்றித் தயக்கவுணர்வு நிலவுகின்றபோது ஒரு புதிய தொழில் தொடங்குவதற்கு என்னதான் மிக நல்ல திட்டம் இருந்தாலும், அதற்குத் தேவையான மூலதனம் திரட்டுவது மிகவும் கடினமானதொன்றாகிவிடுகின்றது.

### பணச் சந்தைக்கும், மூலதனச் சந்தைக்கும் உள்ள வேறுபாடுகள்

நெடுங்கால நிதிவசதிகளுக்கு வகை செய்து கொடுப்பது மூலதனச் சந்தை (Capital Market). ஆனால், குறுகிய காலக் கடன் தேவைகளைப் பூர்த்தி செய்வது பணச் சந்தை. மூலதனச் சந்தையை இருபிரிவுகளாகப் பிரிக்கலாம். (1) பழைய மூலதனச் சந்தை, (2) புதிய மூலதனச் சந்தை. ஏற்கெனவே நிருமாணிக்கப் பெற்று, தொடர்ந்து செயல்பட்டு வரும் பழைய கூட்டுப் பங்குக் கம்பெனிகளின் பங்குகளையும் பங்குத் தொகுப்புகளையும் வாங்கி விற்கும் நடவடிக்கைகளில் ஈடுபட்டிருக்கும் பங்கு மாற்றுச் சந்தையைக் கொண்டதாகப் பழைய மூலதனத்துக்குரிய சந்தை அமைகிறது. புதிதாகத் தொடங்கப்பெற்ற கம்பெனிகளின் பங்குகளையும், பங்குத் தொகுப்பையும் வாங்கி விற்கும் நடவடிக்கைகளில் ஈடுபட்டிருப்பது புதிய மூலதனச் சந்தை. சில நூலாசிரியர்கள் நெடுங்காலக் கடன் வசதிகளை அளிக்கும் மூலதனச் சந்தையையும் குறுங்காலக் கடன் வசதிகளை அளிக்கும் பணச் சந்தையையும் பணச் சந்தை என்னும் தொடர் குறிக்கும் என்று கருத்துத் தெரிவிக்கின்றனர்.

பணச் சந்தைக்கும், மூலதனச் சந்தைக்கும் ஒரு நெருங்கிய தொடர்பு இருக்கத்தான் செய்கிறது. முதலாவதாக, மூலதனச்

சந்தை குறிப்பாகப் பழைய மூலதனச் சந்தை, நிதிக்காகப் பணச் சந்தையை நம்பியிருக்கிறது. இரண்டாவதாகப் பணச் சந்தையிலும், மூலதனச் சந்தையிலும் அதே நிறுவனங்கள்தாம் செயல்படுகின்றன. எடுத்துக்காட்டாக, வணிக வங்கிகள் குறுங்காலக் கடனையும் நெடுங்காலக் கடனையும் அளிக்கின்றன. ஆகவே, இவ்விரு சந்தைகளுக்குமிடையே நெருங்கிய தொடர்பு உண்டு என்பது தெளிவாகிறது.

நெடுங்காலக் கடன் வசதிகளைச் செய்து கொடுக்கும் மூலதனச் சந்தையில் சில நிறுவனங்களையும் அவைகளின் பணிகளையும் பிரிதோர் அதிகாரத்தில் காண்போம்.

# 4. பணச் சந்தையின் கருவிகள்

பணச் சந்தையின் அங்கங்களேயும் அவற்றின் செயல்பாட்டையும் பற்றி அறிந்து கொள்வதன் முன், அதன் உயிர்நாடிகளாகிய பணப் பத்திரங்கள் எவ்வாறு உருவாகின்றன என்பதைச் சிறிது பார்ப்போம்.

பணச் சந்தையின் உந்துசக்தி, கடன் தேவையும் கடன் அளிப்பும் என்பதை முன்பு கண்டோம். கடன் தேவையையும், கடன் அளிப்பையும் கூட்டி வைப்பது 'நாணயம்' என்ற நம்பிக்கையாகும். நாணயம் என்ற சொல்லே கொடுக்கல், வாங்கல் நடவடிக்கைகளில் பணம் கொடுப்பவருக்கும் வாங்குபவருக்கும் இடையே ஏற்படுகின்ற பரஸ்பர நம்பிக்கையைத்தான் குறிக்கிறது. சாதாரணமாக ஒருவரைக் குறித்து 'அவர் ஒரு நாணயமுடையவர்' என்று ஊரில் பேசப்படுகின்றது என்ருல் அதன் பொருள் என்ன? அவர் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றுகின்ற பண்பாளர் என்பதே அதன் பொருள். அப்படிப்பட்டவர், தமது தேவைக்காகப் பிறரிடம் வாங்கிய கடனேயோ பொருளேயோ உரிய காலத்தில் உரிய விதத்தில் திருப்பித் தந்து விடக்கூடிய பொறுப்புணர்ச்சியும், அதற்கேற்ற செல்வ வளமும் பெற்றவர் என்பதுதான் அதன் விளக்கமான பொருள்.

இக் கருத்தையே கீழ்க்குறிக்கப் பெறும் மூன்று வணிகத்துறை அறிஞர்களின் கூற்றுகளும் வலியுறுத்துகின்றன.

[1] 1. 'நாணயம் என்பதை எளிதான முறையில் வருணிப் போமேயானல் அது பின்னர்ப் பெறப் போகும் மாற்றுப் பொருளுக்கு இன்று சரக்கினைக் கொடுப்பதேயாகும்'

—பேராசிரியர் லா:ப்லின் (Laughlin)

---

[1] திரு. ஆளுடையபிள்ளை—'வணிக இயலின் தத்துவங்கள்', பக்கம் 456,

2. 'கடனாகவோ நுகர்வதற்காகவோ ஒருவர் சொத்தை மற்றொருவருக்குக் கொடுக்க அடிப்படையாக விளங்கும் நம்பிக்கை, வாங்கிய கடனையோ பொருளையோ திருப்பிக் கொடுக்க இவருக்கு வகையுண்டு என்ற நம்பிக்கைதான் நாணயம்'

—பேராசிரியர் நாசே (Nasse)

3. 'பின்னர்ப் பணம் செலுத்துவதற்கு இப்பொழுது பெறும் உரிமை'

—பேராசிரியர் மக்ளியாட்

மேற்கூறியவற்றிலிருந்து கடன் நடவடிக்கைக்கு ஆதாரம் நம்பிக்கையும் நாணயமும் என்பதை யறியலாம். இந் நாணயமே பத்திர வடிவம் பெறுகின்றபோது செலாவணி யாற்றலையும் பெறுகின்றது.

நாணயத்தின் அடிப்படையில் உருவாகும் பணப்பத்திரங்களைக் கீழ்க் கண்டவாறு வகைப்படுத்தலாம்.




[9] நான் உங்களுக்குக் கடன்பட்டிருக்கிறேன்

மேல்வகைப் பட்டியலில் குறிப்பிட்டவற்றில் செலாவணித் தன்மையற்றவற்றை விடுத்துச் செலாவணித் தன்மையுடையவற்றையே பணச் சந்தையின் கருவிகளாக எடுத்துக் கொள்ள வேண்டும். அவற்றிலும் காசோலையும், உறுதிப் பத்திரமும் அவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்தவையல்ல. ஏனைய மாற்று உண்டியல் (Bill of Exchange) கருவூல உண்டியல் (Treasury Bill) உடையவன் கடன்பத்திரம் (Bearer Debenture Certificate) ஆகியவை பணச் சந்தையின் முக்கியமான கருவிகளாகும். பொதுக் கம்பெனிகளால் (Public Companies) வெளியிடப்பட்டிருக்கும் பங்குகளைப் பெற்றிருக்கும் பங்குதாரர்களுக்கு வழங்கப்படும் பங்குப் பத்திரங்களையும் (Share Certificates) பணச் சந்தையின் ஒரு வகைக் கருவிகளாகக் கருதலாம். இவ்விதக் கருவிகள் ஒவ்வொன்றும் எப்படி உருவாகின்றன, அவையவை பணச் சந்தையில் வகிக்கும் இடமென்ன என்பதைப் பற்றி இனிக் காண்போம்.

## மாற்று உண்டியல் (Bill of Exchange)

வாணிபத்தில் ரொக்கத்திற்குத்தான் பொருள் விற்கப்படுமென்றால் பல நடவடிக்கைகள் தடைபட்டு விடும். வாணிபம் பல நிலைகளிலும், பல இடங்களிலும், சுறுசுறுப்பாக நடைபெறவே முடியாது. எனவேதான் கடனுக்குப் பொருள்களை விற்பதும் வாங்குவதும் மிகவும் சாதாரணமான ஒன்றாக இருக்கிறது.

இக் கடன் விற்பனையிலும் ஏனைய கடன் நடவடிக்கைகளுக்கு அடிப்படையான நாணயமும் வகையுடைமையும் கருத்தில் எடுத்துக் கொள்ளப்படுகிறது. கடனில் பொருள் வாங்குவோரின் நாணயத்திற்கும் வகையுடைமைக்கும் இன்னொருவர் சான்றுறுதி (பெரும்பாலும் ஏற்பகங்கள் அல்லது வங்கிகள்) அளிக்கவேண்டியுள்ளது. எனவே, ஒரு மாற்று உண்டியலில் மூவர் இடம் பெறுகின்றனர். ஒருவர் மாற்றுண்டியலை வரைபவர் (drawer); அதாவது விற்பனையாளர். இரண்டாமவர் விற்பனைத் தொகையைக் கொடுக்கக் கடன்பட்ட வரையப்படுபவர் (drawee). மூன்றாமவர், மேற்கடனாளியின் நாணயத்திற்கும், வகையுடைமைக்கும் தாம் பொறுப்பேற்றுக்கொண்டு அவ் வுண்டியலில் சான்றுறுதியளிப்பவர். இம் மூன்றாமவர், கடனாளியின் வங்கியாகவோ அல்லது ஓர் ஏற்பகமாகவோ (Acceptance House) இருப்பார்.

இவ் வகைக் கடன் விற்பனை மூலம் வாணிபம் பெருகி, பொருள்களின் விநியோகமும் பணச் சுழற்சியும் நன்கு நிகழ்வதால் பொருளாதார வளர்ச்சியும் முறையாக நிகழ்கிறது.

காசோலையைப் 'பார்த்தவுடன் செலுத்தப்படவேண்டிய உண்டியல்' என்று நாம் கூறலாம். மாற்று உண்டியலைப் பின் தேதியிட்ட காசோலை (Post-dated cheque) என்றும் கூறலாம். உரிய உண்டியலை வைத்திருக்கும் கடன் ஈவோர் கடனாளியிடமிருந்து பணத்தைப் பெறுகிறார். ஆனால், உரிய காலத்திற்கு முன்பே கடன் ஈவோருக்குப் பணம் தேவைப்படுமாயின் அவர் அந்தக் காசோலையை ஏற்றுக் கொள்வதற்கு விருப்பமுடைய ஒருவரை நாடுவார். அந்த உண்டியலில் கடன் ஈவோர் தமது புறக்குறிப்பைத் (endorsement) தெரிவிக்க வேண்டும். உண்டியலைப் பெற்றுக்கொள்ள விருப்ப முள்ளவர் உரிய காலம் வரை அதைத் தன்னிடம் வைத்திருப்பார். இவ்வாறு பணம் தேவைப்படும்போது உண்டியலைத் தள்ளுபடி செய்யலாம். தள்ளுபடிக்கு ஏற்கும் வங்கி அல்லது தள்ளுபடியகம் உரியகாலம் வரை காத்திருக்க வேண்டியிருப்பதால் அந் நிறுவனம் அதற்கு ஈடாக ஒரு சிறு தொகையைக் கழித்துக்கொண்டு மீதத்தையே கொடுக்கும். கெடுவுக்காலத்திற்கு முன்பாகவே புறக்குறிப்பைத் தெரிவித்து மாற்று உண்டியலைப் பெற்று உடனடியாகப் பணம் பெறும் முறையே உண்டியலில் தள்ளுபடி எனப்படும். கெடுவுக் காலத்திற்கு முன்பாக மாற்று உண்டியலுக்குக் கொடுக்கப் படும் பணத்திற்கும் அதன் உண்மையான மதிப்பிற்கும் உள்ள வேறுபாட்டிற்குத் தள்ளுபடி (discount) எனப் பெயர். இந்தத் தள்ளுபடியை நூற்றுக்கு ஓர் ஆண்டிற்கு மாற்று உண்டியலின் உண்மை மதிப்பில் எவ்வளவு விகிதம் என்று கணக்கிடுவது வழக்கம். கோபால் என்பவர் கோவிந்து என்பவரிடம் பொருள்களைக் கடனில் வாங்குகிறார். கடன் ஈவோராகிய கோவிந்து உடனடியாகப் பணம் வேண்டும் என்கிறார். ஆனால், பொருள்களை விற்றபின்தான் பணம் தரமுடியும் என்கிறார், கடனாளியாகிய கோபால். கடனாளி ஓர் உண்டியலைத் தன்மீது வரைவதற்கு ஒப்புக்கொள்வதன்மூலம் (கடன் ஈவோருடன்) விற்பனையாளருடன் அந்தப் பேரத்தை முடிக்கலாம். கடன் ஈவோர் உண்டியலை வரைபவர் (drawer). கடனாளியின்மீது உண்டியல் வரையப்படுகிறது. கடன் ஈவோர் (drawee) மாற்று உண்டியலைப் பின்வரும் முறையில் வரைகிறார். (22ஆம் பக்கம் காண்க.)

உண்டியலில் பலவகையுண்டு. காலக்கெடு அல்லது தவணைத் தேதி கொண்ட உண்டியலாக (Period or term bill) இருந்தால் வரையப்பட்டவரின் ஒப்புதல் தேவையாகிறது. உண்டியல் வரைபவர் (drawer) தாம் வரைந்துள்ள உண்டியலில் வரையப் பட்டவரின் ஏற்பைப் பெறுவதின் மூலம் அது செலாவணிப் பத்திர மாகிறது (Negotiable Instrument). ஆகவே, இதைப் பிறருக்கு எளிதில் மாற்றலாம். ஆணையின் பேரில் செலுத்தப்படும் உண்டிய லாக (Bill payable to order) இருந்தால் அதைப் பிறருக்கு மாற்று

வதற்கோ ஒரு நிறுவனத்தினிடம் தள்ளுபடி செய்வதற்கோ, புறக்குறிப்பு இடுதல் அவசியமாகிறது. ஓர் உண்டியலைப் புறக்குறிப்பிட்டு அதை வேறு ஒருவருக்கு மாற்றுவதால் இரண்டு நோக்கங்கள் நிறைவேறுகின்றன. ஒன்று உண்டியலில் கண்டிருக்கும் தொகையின் பால் உள்ள உரிமை மற்றவருக்கு மாற்றப்படுகிறது. இரண்டாவது, புறக்குறிப்பிட்டதன்மூலம் இவ் வுண்டியலைப் பெறுபவர் தனக்குக் கடன் ஈந்தவருக்குக் கடன் தீர்வைக்காக இதைப் பயன்படுத்தலாம். மூன்றுவதாகப் புறக்குறிப்பிடுவதன் மூலம் அவ் வுண்டியலுக்கு

22, அண்ணுசாலை,
சென்னை-2
ஏப்ரல் 8, 1975

ஸ்டாம்பு

ரூ. 5,000

மதிப்புப் பெற்றுக்கொண்டதற்காக, இதில் குறிப்பிட்டிருக்கும் தேதிக்குப் பிறகு மூன்று மாதங்கள் கழிந்ததும் மதுரை கிழக்கு மாடவீதி 47ஆம் எண்ணில் இருக்கும் திரு. ச. கேசவன் அவர்களுக்கு அல்லது அவர் உத்தரவு பெற்றவருக்கு ரூபாய் ஐயாயிரம் தொகை செலுத்துக.

இரா. கோவிந்தன்
கையொப்பம்

பெறுநர்: சு. கோபாலன்,
12, பாரதியார் தெரு
கோவை-18.

அதிகப்படியான பாதுகாப்பு ஏற்படுகிறது. தவணை முடிவடைந்தவுடன், எவர்மீது இவ் வுண்டியல் வரையப்பட்டு ஏற்றுக் கொள்ளப்பட்டதோ அவர் அவ் வுண்டியல் வைத்திருப்பவரிடம் தொகை செலுத்த வேண்டும். தவறினல், அவ் வுண்டியலை வைத்திருப்பவர் (holder), தனக்கு உண்டியலைக் கொடுத்தவரிடம் (endorser) அல்லது உண்டியல் வரைந்தவரிடம் (drawer) உண்டியலைத் தாக்கல் செய்து தொகையைப் பெற்றுக் கொள்ளலாம்.

மேற்கண்ட எடுத்துக் காட்டில் ஈவோர் மாற்று உண்டியலை வரைந்து கடனளிக்கு அனுப்பிவைக்கிறார். கடனளி தனது பொறுப்புகளை—அதாவது ஐயாயிரம் ரூபாய் ரொக்கத்தைக் கெடுவுக்காலத்திற்குள் செலுத்திவிடுவதாக ஒப்புக் கொள்கிறார். மாற்று உண்டியலின் மேல் தனது ஏற்பைத் தெரிவித்து ஒப்பமும்

இடுகின்றார். கடனாளி மாற்று உண்டியலை ஏற்றுக் கொண்டதும் அந்த உண்டியல் செலாவணித்தன்மை பெறுகிறது. மூன்று மாதங்கள் கழித்து யாரிடம் மாற்று உண்டியல் இருக்கிறதோ அவருக்கு ஐயாயிரம் ரூபாய் ரொக்கம் கொடுப்பதற்குக் கடனாளி தயாராக இருக்க வேண்டும். கெடுவுக் காலத்தில் பணத்தைப் பெறுபவரைப் பெறுவோர் (payee) எனக் கூறுகிறோம்.

கடன் ஈவோர் மூன்று மாதங்கள் கழித்து 5,000 ரூபாய் ரொக்கம் பெறுவதைவிட உடனடியாக ரொக்கம் பெறுவதை விரும்புவார். எனவே இந்த மாற்று உண்டியலைத் தள்ளுபடிக்கு (Discounting the bill) விற்றுவிடுவார். அம்மாதிரி அவர் அதை விற்கும்போது தமக்கு அந்த மாற்று உண்டியலில் எந்த விதமான உரிமையும் (claim) கிடையாது என்பதைத் தெரிவிக்கத் தமது புறக் குறிப்பை அதில் இடுகிறார். அவர் அவ்வாறு புறக்குறிப்பிடுவது அவருக்கு ஒரு பொறுப்பையும் உண்டாக்குகின்றது. அதாவது கடனாளி கெடுவுக்காலத்தில் பணம்தர முடியாது போய்விட்டால் அந்தத் தொகைக்குக் கடன் ஈந்தோரே பொறுப்பாளி ஆவார். அவர் இந்த மாற்று உண்டியலை விற்கும் பொழுது அவரிடமிருந்து விலைக்கு வாங்குபவர் அவருக்கு 5,000 ரூபாய் ரொக்கத்தைக் கொடுக்க மாட்டார். உதாரணமாக, 4,950 ரூபாய் ரொக்கம் கொடுக்கலாம், 5,000 ரூபாய்க்கும் 4,950 ரூபாய்க்கும் வேறுபாடான 50 ரூபாய் ரொக்கம் ஐயாயிரம் ரூபாய்க்கு மூன்று மாத காலத்திற்கான வட்டித் தொகையைக் குறிக்கின்றது. அவ்வாறாயின் தள்ளுபடி வீதம் 4 சதவீதம் ஆகும். தள்ளுபடி செய்வோர் மூன்று மாதங்களுக்குப் பிறகு ரூபாய் 5,000 பெறுவார்.

மாற்று உண்டியல் அரசுப் பத்திரத்தைப் போலவே தன் ஆயுள் காலத்திற்குள் ஒருவர் கையிலிருந்து இன்னொருவர் கைக்கு எளிதில் மாறக் கூடியது. கடன் ஈவோரிடமிருந்து உண்டியலை வாங்கிய ஒரு மாதக் காலத்தில் தள்ளுபடி செய்வதற்கு ரொக்கம் தேவைப்படுகிறது என்று வைத்துக் கொண்டால் இந்த உண்டியலை மறு தள்ளுபடி (Re-discounting) செய்து ரொக்கம் பெறலாம். அவர் அவ்வாறு செய்தால் இப்பொழுது உண்டியலை விலைக்கு வாங்குவோருக்கு அந்த மாற்று உண்டியல் இரண்டு மாதம் கழித்து 5,000 ரூபாய் பெறுவதற்கான உரிமையைக் குறிக்கிறது. மாற்று உண்டியலின் தற்போதைய விலை சிறிது உயர்ந்திருக்கும். வட்டிவீதம் 4 சதவீதமாக இருப்பின் மாற்று உண்டியலின் தற்போதைய விலை ரூ. 4,966 ரூபாய் 67 காசுகளாக உயர்ந்திருக்கும். தள்ளுபடி செய்பவர் மறுகழிவு செய்யும் போது தம் புறக்குறிப்பை அதில் தெரிவிக்கிறார். ஆக, அவரும் இந்த மாற்று உண்டியலுக்குப் பொறுப்பாளியாகிறார்.

மாற்று உண்டியலைக் காலவகையால் இருவிதமாகவும், இடவகையால் இருவிதமாகவும் பிரிக்கலாம்.

**காலவகைப் பிரிவு**

1. கேட்பு உண்டியல் (Demand Bill): இது கடனளிக்குக் கடனை (அதாவது சரக்கு விற்பனைத் தொகையை)த் தரக் காலக்கெடு சிறிதும் வழங்காமல், கேட்கின்ற நேரத்தில் கொடுக்க வேண்டும் என்று வரையப்படுகிறது.

2. கால உண்டியல் அல்லது தவணைக்கடன் உண்டியல் (Time Bill or Usance Bill): இது குறிப்பிட்ட காலத்திற்குள் (சாதாரணமாக 3 மாதங்களுக்கு மிகாமல்) தொகை செலுத்தப்பட வேண்டும் என வரையறுத்து வரையப் படுகிறது.

**இடவகைப் பிரிவு**

1. உள்நாட்டு உண்டியல்: ஒரு நாட்டிற்குள்ளேயே ஓரிடத்து விற்பனையாளர் பிறிதோரிடத்து வாங்குவோரின் பேரில் எழுதப்படுவது.

2. வெளி நாட்டு உண்டியல்: ஒரு நாட்டு வணிகர் இன்னொரு நாட்டு வணிகரின் (சரக்கு வாங்குவோர்) மேல் வரையப் படுவது.

**கருவூல உண்டியல் (Treasury Bill)**

வணிக உண்டியல்கள் பொருள்களின் வாணிகத்தைப் பொறுத்து உருவாகின்றன. பொருள்களின் வாணிகத்தைச் சாராமல் கூட உண்டியல்கள் உருவாகலாம். தனிப்பட்டவர்களும் நிறுவனங்களும் கடனுக ரொக்கம் பெறுவதற்கு நிதி உண்டியல்கள் (Finance Bills) எனப்படும் உண்டியல்களைப் பயன்படுத்தலாம். அதேபோல, ஓர் அரசும் தனது நிதித்தேவையை நிறைவு செய்ய நிதி உண்டியல்கள் வரையலாம். அவை கருவூல உண்டியல்கள் என்றழைக்கப்படும் அவை அரசாங்கத்தின் கருவூலத்தினுல் (Treasury) அரசின் சார்பில் வெளியிடப் பெற்றதால் கருவூல உண்டியல்கள் என்று பெயர் பெற்றன.

கருவூல உண்டியல்கள் என்பவை வழிமுறைச் செலவு முன் பணத்தைப் (way and means advance) போன்று அரசாங்கத்தின் குறுகிய காலக் கடனுகும். அவற்றுக்குப் பிணையாக அரசின் உத்திர

வாதமே அமைகிறது. அவை சாதாரணமாக மூன்று மாதப் புழக்கத் திற்கு வழங்கப்படும். இதனுல், வங்கிகள் தங்கள் உபரிநிதியை முதலீடு செய்ய இவ் வுண்டியல்கள் மிக நல்ல சாதனமாக அமைகின்றன.

இந்தியாவில் மைய அரசினுலோ, மாநில அரசுகளாலோ கருவூல உண்டியல்கள் வழங்கப்பட்டு வந்தன. இவற்றில் பெரும் பகுதி மைய அரசினுலேயே வழங்கப்படுகின்றன. இந்திய அரசு உண்டியல்கள் பெரும்பாலும் மூன்றுமாதத் தவணையுடையனவாக வழங்கப்படுகின்றன. ஆனுல் சில மாநில அரசுகள் அதற்கு மேலும் நீடித்த காலங்களுக்கு உண்டியல்களை வழங்கிவந்தன. இரண்டாம் உலகப்போரின்போது இங்கிலாந்தும், மற்ற நேசநாடுகளும், இந்தியாவும் பெருமளவில் கருவூல உண்டியல்களை வெளியிட்டுப் போர்த்தேவைக்கான நிதிவளத்தை அவ்வப்போது ஏற்படுத்திக் கொண்டன.

கருவூல உண்டியல்கள் பொது அளிப்பு முனைவு (டெண்டர் களின்) மூலம் வழங்கப்படுகின்றன. இந்திய அரசு உண்டியல்கள் வாரந்தோறும் வழங்கப்படுகின்றன. மாநில அரசுகள் உண்டியல் வெளியிடுவது தற்போது நிறுத்தப்பட்டுவிட்டது. அளிப்பு முனைவு (tender) கோரப்பட்டு, அவற்றில் உயர்ந்த தொகையுடையது ஏற்றுக் கொள்ளப்படுகிறது.

உண்டியல்களின் விநியோகமும் பட்டுவாடாவும் ரிசர்வு வங்கியி லேயே செய்யப்படுகிறது. அளிப்பு முனைவு (tender) மூலம் வெளிப் படையாக விற்கப்படும் கருவூல உண்டியல்களைத் தவிர, அரசாங்கத் தின் குறுகிய காலத் தேவைக்கும், வங்கிகளின் தாற்காலிக உபரி நிதியை ஏற்கவும் அப்போதைக்கப்போது இடைக்கால கருவூல உண்டியல்கள் வழங்கப்படுகின்றன. பிற்கூறப்பட்ட இம் முறை யினுல், ரிசர்வு வங்கி பணச் சந்தை மேல் ஒரு கட்டுப்பாட்டைச் செலுத்திப் பணப் புழக்கத்தை நெறிப்படுத்த முடிகிறது.

இங்கிலாந்து அரசு 91 நாள்கள் தவணையுள்ள கருவூல உண்டியல்களைத் தவிர 63 நாள்களுக்கான கருவூல உண்டியல்களைக் கூட வெளியிடுகிறது. 10,000, 25,000, 50,000, 1,00,000 பவுன்கள் மதிப்புள்ள அலகுகளில் (units) கருவூல உண்டியல்கள் வெளியிடப் பெறுகின்றன. கடன் கொடுப்போரின் (creditor) பெயர் குறிப்பிடப் பட்டிருக்கும். அவ்வாறு கடன் கொடுப்போரின் பெயர் குறிப் பிடாமல் இருந்தால் அந்தக் கருவூல உண்டியல்களுக்கான பணம் கெடுவுக்காலத்தில் உண்டியலைக் கொணர்வோரிடம் கொடுக்கப் படும். இவ்வகை உண்டியல் 'கொணர்பவர் உண்டியல்' (Bearer-

Treasury Bill) எனப்படும். சந்தையிலுள்ள கருவூல உண்டியல்களில் பெரும்பாலானவை கொணர்பவர் உண்டியல்களே. வணிக உண்டியல்களில் இப்படிப்பட்டவை கிடையாது. வணிக உண்டியலைப் புறக்குறிப்பிட்டு ஒருவர் மற்றொருவருக்கு மாற்றுவதனால் பாதுகாப்பு அதிகரிக்கிறது. ஆனால் கருவூல உண்டியல் அரசினால் வெளியிடப்பட்டு, அதன் உத்திரவாதத்தைக் கொண்டதாக இருக்கிறது. ஆக உண்டியல் தள்ளுபடியகங்கள் அல்லது வங்கிகளின் கையெழுத்துகள் மூலம் கருவூல உண்டியலுக்குப் பாதுகாப்புத் தேவையில்லை. ஆகையால் அதன் பாதுகாப்பைப் பற்றிக் கவலையில்லை. பணம் படைத்தோர் இவற்றை ஐயம் ஏதுமின்றி விலைக்கு வாங்குவர். அரசு வெளியிடும் பணத்தாள்கள் எவ்வாறு எளிதாக மக்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டுப் புழக்கத்தில் இருக்கின்றனவோ, அதேபோல அரசினால் வெளியிடப்படும் இக் கருவூல உண்டியல்களும், பணச் சந்தையில் இயங்கிவரும் எல்லா நிறுவனங்களாலும், நபர்களாலும் எவ்விதத் தயக்கமுமின்றி ஏற்றுக் கொள்ளப் படுகின்றன.

இந்த உண்டியல்களால் அரசு குறைந்த வட்டிக்குப் பெரும் நிதி திரட்ட முடிகிறது. கடன் கொடுப்போருக்கும் இந்த உண்டியல்கள் ரொக்கத் தன்மையுடைய சொத்துகளாக அமைகின்றன. வட்டி வீதம் குறைவாக இருந்தாலும் கடன் கொடுப்போர் கருவூல உண்டியல்களை விரும்பி வாங்குகின்றனர். அரசும் கூட இந்த உண்டியல் மூலம் கடன் பெறுவதையே பெரிதும் விரும்புகிறது. நீண்ட காலப் பத்திரங்களின் விற்பனையைக் குறைத்துக் கொண்டு கூடக் கருவூல உண்டியல்கள் மூலம் அரசு கடன் வாங்குகிறது. தற்போது வணிக உண்டியல்களின் அளிப்பு உலகின் பல முக்கியப் பணச் சந்தைகளில் குறைந்திருப்பதால் அந்த இடத்தை நிறைவு செய்யக் கருவூல உண்டியல் பயன்படுகின்றது. உண்டியல் தள்ளுபடியகங்கள் இதனால் மிகவும் பயனடைகின்றன. கருவூல உண்டியல்களை இருப்பாக வைத்திருப்பது வணிக வங்கிகளுக்கும் மைய வங்கிக்கும் வசதியாக உள்ளது; ரொக்க நீர்மைக்கும் வழி செய்கிறது; மைய வங்கியின் வெளிச் சந்தை நடவடிக்கைகளைச் (open market operation) செயல் படுத்துவதற்குத் தகுதியான ஒரு பத்திரமாகக் கருவூல உண்டியல் திகழ்கிறது.

கருவூல உண்டியல்கள் அளிப்பு முனைவு (tender) முறையிலும், இடையறு (tap) முறையிலும் வெளியிடப்படுகின்றன. இங்கிலாந்தில் அரசுத் துறைகளான அரசு சேமிப்பு வங்கிகள் (Government Savings Banks), காப்பீட்டு நிறுவனங்கள் (Insurance Companies), இங்கிலாந்து மைய வங்கியின் வெளியீட்டுத்துறை (Issue Depart-

ment) நாணயமாற்றுச் சமன்காப்புக் கணக்கு (Exchange equilisation Account) மற்றும் அயல்நாட்டு நிதி அமைப்புகளுக்கும் இடையரு (tap) முறையில் கருவூல உண்டியல்கள் விற்கப்படுகின்றன. அவைகளுக்குத் தேவையான உண்டியல்களை நிகழ்ந்து முடிந்த அளிப்பு முனைவு வீதத்தோடு (Previous Tender Rate) ஒரு சிறு வீதத்தையும் (பொதுவாக ·016%) கூட்டி அந்த வீதத்திற்கு உண்டியல்கள் விற்கப்படும்.

இலண்டன் வங்கிகள், உண்டியல் தள்ளுபடியகங்கள், தரகர்கள் ஆகியோர் அளிப்பு முனைவு (tender) முறை மூலம் கருவூல உண்டியல்களை வாங்குகின்றனர். மற்றவர்கள் அளிப்பு முனைவு முறையில் வாங்க வேண்டுமாயின் அவர்கள் இவர்களின் மூலமாகத் தான் வாங்க முடியும். இக் கருவூல உண்டியலைப் பற்றி, கருவூல உண்டியல் சந்தையில், மேலும் விரிவாகக் காணலாம்.

### பங்குச் சீட்டுகள் (Corporate shares)

ஒரு கூட்டுப் பங்குக் கம்பெனியின் மூலதனம், பல சிறு சிறு அலகுகளாகப் (units) பிரிக்கப்படுகிறது. அவ்வாறு பிரிக்கப்பட்ட ஒவ்வொரு சிறு அலகும் (unit) ஒரு 'பங்கு' என அழைக்கப்படுகிறது. கம்பெனிச் சட்டத்தில் ஒரு பங்கு என்பது கீழ்க் கண்டவாறு விளக்கப்படுகிறது.

ஒரு 'பங்கு' என்பது ஒரு கம்பெனியின் மூலதனத்தில் ஒரு பகுதியாகும். வேறு பிரித்து விளக்கப் பட்டாலொழிய பங்கு என்பது பல பங்குகள் சேர்ந்த தொகுப்பை உள்ளடக்கியதாகும். ஒரு பங்கு என்பது அதில் குறிக்கப்பட்ட வெறும் தொகையை மட்டும் குறிப்பதன்று. அது, பங்குதாரருக்கு அக் கம்பெனியின் வளர்ச்சியில் உள்ள அக்கறையையும், அதன் கடன் பொறுப்புகளில் அவருக்குள்ள பொறுப்பையும் உணர்த்துகிறது.

ஒரு கம்பெனி அங்கத்தினருடைய பங்கு, அவருடைய தனிப்பட்ட சொத்தாகும். அதை அவர் தம் விருப்பப்படி யாருக்கும் மாற்றவோ, விற்றுப் பணமாக்கவோ அவருக்குப் பூரண உரிமையுண்டு. ஒவ்வொரு பங்குதாரரும் தாம் வைத்துள்ள பங்குகளுக்குப் பங்குச் சான்று (share certificate) பெற்றிருப்பார். பங்குதாரருக்குப் பங்கின் மேல் உள்ள உரிமையைப் பங்குரிமைச் சீட்டு (share warrant) மூலமும் உறுதி செய்வதுண்டு. முழுக்கச் செலுத்தப்பட்ட (fully paidup shares) பங்குகள் தொகுக்கப்பட்டால் அதைப் 'பங்குத் தொகுப்பு' (stock) என்று சட்டம் கூறுகிறது.

பங்குகளில் பல வகையுண்டு. அதைக் கீழ்க் கண்ட வகைப் பட்டியல் விளக்குகின்றது.




**சாதாரணப்பங்குகள்** (Equity or ordinary Shares)

சலுகைப் பங்குகட்கு இலாப ஈவு (dividend) வழங்கிய பின்னர், இலாப ஈவைப் பெறும் உரிமை பெற்றவை இப் பங்குகள். சலுகைப் பங்குகட்குக் கம்பெனிக்கு இலாபம் ஏற்பட்டால் ஒரு குறிப்பிட்ட விகிதத்தில் இலாப ஈவு கொடுக்கப்படுகிறது. குவிவுச் சலுகைப் பங்குகட்கு இலாபம் ஏற்பட்ட ஆண்டு, முன் வருடங்களில் கொடுக்கப்படாத இலாப ஈவையும் சேர்த்துக் கம்பெனி கொடுக்க வேண்டும். சாதாரணப் பங்குகளுக்கு இலாபம் அதிகமாக ஏற்பட்டால்தான் கம்பெனி இலாப ஈவு வழங்கும். கம்பெனி இலாபம் அடையவில்லை அல்லது போதுமான அளவு கம்பெனிக்கு இலாபம் ஏற்படவில்லை என்ற நிலை ஏற்பட்டால், சாதாரணப் பங்கு தாரர்களுக்கு இலாப ஈவு கிட்டாது. கம்பெனியைக் கலைக்க நேரிட்டால் அப்போது கூடச் சலுகைப் பங்குதாரர்களுக்கு அவர்களுக்குச் சேரவேண்டிய மூலதனத்தை முதலில் திருப்பிக் கொடுக்க வேண்டும். பிறகு, சாதாரணப் பங்குதாரர்களின் மூலதனம் திருப்பிக் கொடுக்கப்பட வேண்டும். சாதாரணப் பங்குகள் மூலம் திரட்டப்படும் மூலதனத்தை 'இடர்த்துணிவு மூலதனம்' (Risk Capital) என்று கூறப்படும்.

**சலுகைப் பங்குகள் (Preference Shares)**

இப் பங்குகளை வைத்திருக்கும் பங்குதாரர்கள், ஒவ்வோர் ஆண்டும் ஒரு குறிப்பிட்ட சதவீதம் இலாப ஈவு பெறுவதற்கும், கம்பெனியைக் கலைக்க நேரிட்டால் (winding up) அந் நேரத்தில் தாங்கள் செலுத்திய மூலதனத்தை, சாதாரணப் பங்குதாரர்கள் (Equity Share Holders) அடைவதற்கு முன் திரும்பப் பெறுவதற்கும் சில சலுகைகளைப் பெற்றிருக்கிறார்கள். பொதுக்கம்பெனி (Public Company) யொன்று 1956ஆம் ஆண்டு கம்பெனிச் சட்டத்தின் கீழ் இருவகைப் பங்குகளைத்தான் வெளியிடலாம். அவைகள் (i) சாதாரணப் பங்குகள் (Equity Shares), (ii) சலுகைப் பங்குகள் (Preference Shares). தனிக் கம்பெனி (Private Company) எவ்வகைப் பங்குகளையும் வெளியிடலாம்.

**மீட்புச் சலுகைப் பங்குகள் (Redeemable Preference Shares)**

1956ஆம் ஆண்டு இந்தியக் கம்பெனிச் சட்டம் 80ஆவது பிரிவின் படி இவ் வகைப் பங்குகள் வெளியிடப் பெறும். குறிப்பிட்ட தேதியிலோ, குறிப்பிட்ட காலவரை அறிக்கையின் பேரிலோ, கம்பெனியின் விருப்பத்தின் பேரிலோ இவ்வகைப் பங்குகளை மீட்டுக் கொள்ளச் சிறப்பான உரிமை பங்குதாரருக்கு உண்டு.

**எஞ்சிய இலாபத்தில் பங்குபெறும் சலுகைப் பங்குகள் (Participating Preference Shares)**

சாதாரணப் பங்குகளுக்குரிய இலாப ஈவையும், அம்மாதிரி வழங்கியபின் எஞ்சிய இலாபத்திலும் பங்குபெறும் உரிமை பெற்றவை.

**குவிவுச் சலுகைப் பங்குகள் (Cumulative Preference Shares)**

இப் பங்கு சிறப்பான உரிமை பெற்ற பங்காகும். ஆண்டு தோறும் இதற்குக் குறிப்பிட்ட இலாப ஈவு அளிக்கப்பட வேண்டும். கம்பெனி பல ஆண்டுகளாக இலாபம் ஈட்டாமல் ஓராண்டில் ஈட்டத் தொடங்கினால் அவ் வாண்டு இலாபத்தில் முன் அளிக்கப்படாது விட்டுப்போன அத்தனை ஆண்டுகளுக்கும் உரிய இலாப ஈவை இப் பங்குகளுக்கு அளித்த பின்னர்தான் ஏனைய பங்குகளுக்கு அளிக்க வேண்டும்.

**பின்னுரிமைப் பங்குகள் அல்லது தோற்றுவிப்பாளர் பங்குகள் (Deferred Shares or Founders' Shares)**

1956 இந்தியக் கம்பெனிச் சட்டப்படி இப்போது இது வெளியிடப்படுவதில்லை, எல்லாவகைப் பங்குதாரர்கட்கும் இலாப ஈவு

அளித்துப் பின்னர் எஞ்சியதைப் பெறும் உரிமை பெற்றது. கம்பெனி பெரும் இலாபம் சம்பாதித்த காலங்களில் இப் பங்குதாரர் களுக்கு இலாப ஈவின்மூலம் கிடைத்த ஆதாயம் மிக மிக அதிகமாக இருந்தது.

### கடன் ஈட்டுப் பத்திரங்கள் (Debentures)

ஒரு நிறுவனத்திற்குத் தேவைப்படும் கடன் சிறிய தொகையாக வும் குறுகிய காலத்திற்காகவுமாக இருந்தால், வங்கிகளிடமிருந்தோ, நிதி நிலையங்களிடமிருந்தோ அதைப் பெற்றுக்கொள்ளலாம். ஆனால், நீண்ட காலத்திற்குப் பெரும் தொகைகள் தேவைப்பட்டால் வேறு வழிகளில் அதைக் கடனைப் பெற முயலுகிறது. அவ் வகையில் பொதுமக்களுக்குக் கடன் ஈட்டுப் பத்திரங்களை வழங்கி வேண்டிய தொகையை ஈட்டிக்கொள்கிறது.

மூலதனம் பங்குகளாக (shares) பிரிக்கப்படுவதுபோல, கடன்கள் கடன் ஈட்டுப் பத்திரங்களாகப் பிரிக்கப்படுகின்றன. பங்குகள் விற்கப்படுவது போலவே கடன் ஈட்டுப் பத்திரங்களும் விற்கப்படுகின்றன. அவற்றை வாங்குவோருக்குக் கடன் ஈட்டுப் பத்திர ஆவணங்கள் (securities) வழங்கப்படுகின்றன. ஒரு கடன் ஈட்டுப் பத்திரம் என்பது ஒரு குறுப்பிட்ட நிறுவனத்தினால், அப் பத்திரத்தில் குறிப்பிடப்படும் தொகையைத் தனது கடனாக ஏற்றுக் கொள்ளப்பட்டதற்குரிய ஆவணமாகும். அதில் அந் நிறுவனம் பெறுகின்ற கடனுக்குப் பொறுப்பேற்றுக் கொள்ளும் பல நிபந் தனைகள் அடங்கியிருக்கும்.

கடன் நிதி திரட்டுவதற்கு மற்ற வழிகளைக் காட்டிலும், இப் பத்திரங்களின் விற்பனையே சாலச் சிறந்ததாகும். ஆனால் கீழ்க் கண்ட காரணங்களினால், இந்திய நிறுவனங்கள், கடன் பத்திரங் களின் விற்பனை மூலம் தங்களுக்குத் தேவையான நடைமுதலைத் திரட்டிக்கொள்ள முடியாதவையாக உள்ளன.

1. கடன் பத்திரங்களை விற்று மூலதனம் சேகரித்துக் கொடுக்கச் சரியான திறன்பெற்ற நிலையங்கள் இல்லை.

2. காப்பீட்டு நிறுவனங்கள் கடன் பத்திரங்களில் முதலீடு செய்வதை விரும்பவில்லை. மற்ற நாடுகளில் காப்பீட்டு நிறுவனங் கள் தங்கள் நிதியில் பெருந்தொகையை இப் பத்திரங்களில் முதலீடு செய்கின்றன.

3. கடன் பத்திரங்கள் அதிகமான முத்திரை வரிக்கு (stamp duty) உள்ளாகின்றன. இது அவற்றைப் பிரபலமடையவிடாமல் செய்கின்றது.

4. வங்கிகள் கடன் பத்திரங்களை வழங்கியுள்ள நிறுவனங் களுக்குக் கடன் வழங்கத் தயங்குகின்றன. காரணம், கடனை மீட்பதில் கடன் ஈட்டுப் பத்திரம் வாங்கியவர்களே முதல் உரிமை (first charge) பெறுகிறார்கள்.

5. நிறுவனங்களின் ஆரம்பக்காலத் தோல்விகளை மனத்திற் கொண்டு, மக்கள் கடன் பத்திரங்களை வாங்குவதில் அவ்வளவு அக்கறை காட்டுவதில்லை. எனவே, தொடக்கநிலையில், நிறுவனத் தைத் தோற்றுவிப்போரும் (promoters) அவர்கள் நண்பர்களுமே பங்குகளை வாங்குவதன்மூலம் மூலதனத்தை உருவாக்க வேண்டி யுள்ளது. இதனாலேயே கடன் பத்திரங்கள் விற்பனை பிரபலமடை யாமலும், மக்களுக்கு இப்படியொரு முதலீட்டு வசதியுள்ளது என்பதே தெரியாமலும் உள்ளது.

6. நெடுங்காலக் கடன் பெறுவதில் அரசாங்கமும் போட்டிக்கு வருகிறது. கடன் பத்திரங்களைக் காட்டிலும் அதிக வட்டி தரும் அரசு ஆவணங்கள் கவர்ச்சி மிக்கனவாயுள்ளன. சில நேரங்களில் அரசு ஆவணங்கள் வாங்குவோருக்கு வரி விலக்குச் சலுகையும் அளிக்கப்படுகிறது. எனவே, மக்கள் நிறுவனங்களின் கடன் ஈட்டுப் பத்திரங்களில் முதலீடு செய்வதைக் காட்டிலும் அரசு ஆவணங்களில் முதலீடு செய்வதையே இலாபகரமாகக் கருதுகின்றனர்.

**கடன் ஈட்டுப் பத்திரங்களின் வகைகள் (Kinds of Debentures)**

**1. வெற்றுக் கடன் பத்திரம் (Simple or Naked Debentures)**

இவ் வகைக் கடன் ஈட்டுப் பத்திரங்களில் ஒரு நிறுவனம், தான் பெற்றுக்கொண்ட தொகைக்குத் தனது சொத்துகளை ஈடு காட்டுவ தில்லை.

**2. அடைமானக் கடன் பத்திரம் (Mortgage Debentures)**

இவ் வகைக் கடன் ஈட்டுப் பத்திரங்களில் ஒரு நிறுவனம், தான் பெற்றுக்கொண்ட தொகைக்குத் தனது சொத்துகளை அடைமான மாகக் காட்டுகிறது.

**3, நிலையீட்டுக் கடன் ஈட்டுப் பத்திரம் (Fixed Debentures)**

இவ் வகைக் கடன் பத்திரங்களில், ஒரு நிறுவனத்தின் குறிப் பிட்ட சில நிலைச்சொத்துகள் (Immovable Properties) ஈடாகக் காட்டப்படுகின்றன.

### 4. இயங்கு ஈட்டுக் கடன் பத்திரம் (Floating Debentures)

இவ் வகைக் கடன் பத்திரங்களில் ஒரு நிறுவனத்தின் இயங்கு சொத்துகள் (movable properties) ஈடாகக் காட்டப்படுகின்றன. இப் பத்திரங்கள் பெற்றிருப்போர் அந் நிறுவனத்தின் சொத்துகளின்மேல் ஏனைய கடன் கொடுப்போரின் உரிமைகளைக்காட்டிலும் சிறப்பான உரிமைகளைப் பெற்றிருப்பர்.

### 5. ஏற்புடை அடைமானக் கடன் பத்திரம் (Equitable Debentures)

ஒரு நிறுவனத்தின் ஒரு சில சொத்துகளின் உரிமைப் பத்திரங்களை ஈடாகக் காட்டி வெளியிடப் பெறுவனவாகும்.

### 6. கொணர்பவர் கடன் ஈட்டுப் பத்திரம் (Bearer Debentures)

இது வைத்திருப்பவருக்கு, இதைத் தம் விருப்பப்படி மிக எளிதாக யாருக்கும் விற்கவும், மாற்றிக்கொள்ளவும் உரிமையுண்டு. முதிர்வுக் காலத்தில் இதைக் கொணர்பவர் எவராயிருந்தாலும் பணம் பெற்றுக்கொள்ளலாம்.

### 7. பதிவான கடன் ஈட்டுப் பத்திரம் (Registered Debentures)

இப் பத்திரம், முதலில் பதிவு செய்யப்பெற்ற உரிமையாளர்க்கன்றி மற்றவர்க்கு எளிதில் மாற்றமுடியாது. அப்படி மாற்றுவதென்றால், மேலும் ஒரு மாற்றுப்பத்திரம் (deed) எழுதிப் பதிவு செய்துதான் மாற்றவேண்டும். அதன் முதிர்வுக்காலத்தில் யார் பெயருக்கு இறுதியாகப் பதிவு செய்யப்பெற்றுள்ளதோ (Registered Holder) அவருக்குத்தான் கடன்தொகை பட்டுவாடா செய்யப்படும்.

### 8. மீட்புக் கடன் ஈட்டுப் பத்திரம் (Redeemable Debentures)

இப் பத்திரம் கடன்தொகையை ஒரு குறிப்பிட்ட காலத்தில் திருப்பிச் செலுத்தும்படி விதிப்பதாகும்.

### 9. மீட்கமுடியாத கடன் ஈட்டுப் பத்திரம் (Irredeemable Debentures)

நிறுவனம் கலைக்கப்பட்டாலன்றிக் கடன் திருப்பித் தரப்படமாட்டாது என்று விதிப்பது இக் கடன் பத்திரம். இது எளிதாகப் பிறருக்கு மாற்றப்படக்கூடிய தன்மை பெற்றிருப்பதால் அடிக்கடி கைமாறிக்கொண்டேயிருக்கும். இவ் வகைக் கடன் ஈட்டுப் பத்திரங்களைப் பெரும்பாலும் பொதுப்பயன் நிறுவனங்கள் (Public Utility Concerns), குறிப்பாக, இரயில்வேயும், மின்வாரியமும் வெளியிடுகின்றன.

மீட்புக் கடன் ஈட்டுப் பத்திரங்களே நிறுவனங்களால் அதிகமாக வெளியிடப் பெறுகின்றன. இவ் வகையில், 10 அல்லது 15 ஆண்டுக் கெடுவுடைய பத்திரங்களை நிறுவனங்கள் வெளியிட்டு, ஒவ்வோராண்டு இலாபத்திலும் பத்திர மீட்புக்கென்று ஒரு நிதி ஒதுக்கப் படுகின்றது. பத்திர முதிர்வுக் காலத்தில் இந் நிதியைப் பயன் படுத்தி நிறுவனங்கள் எளிதாகக் கடன் ஈட்டுப் பத்திரங்களை மீட்டுக் கொள்கின்றன.

பங்குச் சீட்டுகளுக்கும் கடன் பத்திரங்களுக்கும் உள்ள வேறுபாடுகள்

1. பங்குச் சீட்டுகள் ஒரு நிறுவனத்தினுடைய மூலதனத்தின் கூறுகளாகும். அவை நிறுவனத் தொடக்கக் காலத்தில், அதன் இயக்கத்திற்கு முதல் தேவையாக அமைபவை.

கடன் பத்திரங்கள் ஒரு நிறுவனத்துடைய கடன் பொறுப்புகளாகும். இவை ஒரு நிறுவனம் இயங்கத் தொடங்கிச் சில காலத்திற்குப்பின், அதன் வளர்ச்சித் தேவைக்காக வெளியிடப் பெறுபவையாகும்.

2. பங்குதாரருக்கு (Share hloder) ஒரு நிறுவனத்தின் வளர்ச்சியில் அக்கறையுண்டு; அதன் நிருவாகத்தில் நேரடியாகத் தொடர்பு கொள்ளாவிட்டாலும், நிருவாகக் குறைகளை எடுத்துணர்த்தவும், நல்ல நிருவாகத்திற்கு ஆலோசனை கூறவும் உரிமை உண்டு. அவருக்கு நிறுவனத்தின் ஆண்டறிக்கையும், ஆண்டுப் பொதுக் கூட்டங்களில் கலந்து கொள்ள அழைப்பும் அனுப்பப்படும். ஆனல் இவ் வுரிமைகளில் ஒன்றும் கடன்பத்திர உரிமையருக்குக் (Debenture holder) கிடையாது.

3. நிறுவனம் நன்கு இலாபகரமாகச் செயல்பட்டால்தான் பங்குரிமையருக்கு இலாப ஈவு வழங்கப்படும். சில ஆண்டுகளில் இலாப ஈவு வழங்கப்படாமலே கூடப் போகும். ஆனல் கடன் பத்திர உரிமையருக்கு, நிறுவனம் இலாபத்தில் ஓடினலும், நட்டத்தில் ஓடினலும் ஆண்டுதோறும் அவரது கடனுக்குரிய வட்டியைச் செலுத்தித் தீர வேண்டும்.

4. நிறுவனக் கலைப்புக் காலத்தில், அதன் சொத்துகளின் பேரில் கடன்பத்திர உரிமையருக்கே முதல் உரிமையுண்டு. பங்குரிமையருக்கு இறுதியாகத்தான் உண்டு.

5. பங்குத் தொகை முழுவதும் ஒரே சமயத்தில் கட்ட வேண்டுமென்பதில்லை. இயக்குநர் குழுவின் அழைப்புக்கேற்பப் பல தவணைகளில் கட்டிக் கொள்ளலாம், ஆனல் கடன்பத்திரத்

தொகையை ஒரே சமயத்தில் குறிப்பிட்ட தேதியில் கட்டியாக வேண்டும்.

6. ஒரு நிறுவனத்தின் பங்குச் சீட்டுக்குப் பணச் சந்தையில், அந் நிறுவனம். ஈட்டியுள்ள இலாபம், பெயர், புகழ் முதலியவற்றைப் பொறுத்து விலை நிர்ணயிக்கப்படுகிறது. இவ் விலை, பத்திரிகைகளில் அவ்வப்போது பிரசுரிக்கப் பெறுகின்றது. ஆனல் கடனீட்டுப் பத்திரங்களுக்கு இவ்வித விலை ஏற்ற இறக்கங்கள் எப்பொழுதும் ஏற்படுவதில்லை.

7. பங்குச் சீட்டுப் பெற்றிருப்போர் நிறுவனத்தின் உரிமையாளராகவும், கடனீட்டுப் பத்திரம் பெற்றிருப்போர் நிறுவனத்தின் கடனாளராகவும் ஆகின்றனர்.

8. பங்குகளுக்குப் பிணை ஏதும் அளிக்கப்படுவதில்லை. ஆனல் கடனீட்டுப் பத்திரங்களுக்கு நிறுவனத்தின் சொத்துகள் பிணையாகக் காட்டப்படுகின்றன.

9. பங்குகள் பெரும்பாலும் மீட்கப்படுவதில்லை. ஆனல் கடனீட்டுப் பத்திரங்கள் மீட்கப்படுவனவாகும்.

**வங்கிகளின் ஏற்புகள் (Bankers' Acceptance)**

வங்கியேற்பு என்பது, சில சமயங்களில் 'வாங்கிய பின் உண்டியல்' என்றழைக்கப்படும். ஒரு வணிகர், ஒரு வங்கியைக் குறிப்பிட்ட நபருக்கு, குறிப்பிட்ட தேதியில் ஒரு குறிபிட்ட தொகையைப் பட்டுவாடா செய்யுமாறு அவ் வங்கியின் மேல் ஓர் உண்டியலை வரைய, அவ் வுண்டியலை, அவ் வங்கி ஏற்றுக் கொண்டதென்றல், அது வங்கியேற்பு எனப்படும். இதில், இவ் வங்கி, உண்டியல் வரைபவரை (Drawer) அக் குறிப்பிட்ட தேதிக்குள் அத் தொகையைக் கட்டுமாறு கேட்டுக் கொள்ளுமென்றலும், அதில் வங்கியே முதற் கடனளியாக (Principal Debtor) ஆகிறது. இவ் வங்கியேற்பு உண்டியல், பணச் சந்தையில் விற்கப்படுகிறது. இவ் வகையான வங்கி ஏற்புகள் நியூயார்க் பணச் சந்தையில்தான் அதிகம் புழக்கத்திலுள்ளன. வணிகத்தாளும் (Commercial paper), வங்கியேற்பும் (Banker's acceptance), நியூயார்க் பணச் சந்தையின் முக்கியக் கருவிகளாகும். வங்கியேற்பு, நெடு நாட்களாக இருந்து வரும் ஒரு முறையென்றலும் இடைக் காலத்தில் இவை வீழ்ச்சியுற்றன. மீண்டும் தற்சமயம் ஓரளவுக்கு இவை பெருகியுள்ளன. எனினும் 1920-29-க்கு இடைப்பட்ட காலத்தில் இவற்றிற்கிருந்த செல்வாக்கு மீண்டும் ஏற்படுவதற்கான அறிகுறிகள் இல்லை.

இலண்டனில் கையாளப்படும் முதல்தரமான உண்டியல்களுக்கு இவ் வங்கியேற்புகள் ஒப்பானவையாகும்.

**நாட்டு உண்டிகள் (Hundis or Indigeneous Bill of Exchange)**

இதுவரை பணச் சந்தையின் கருவிகளாகக் கூறப்பட்டவை மேற்கத்திய பாணி வங்கி முறையில் புழங்குபவை. இப்போது இங்குக் கூறப்படுவது, இந்தியாவில் பல ஆண்டுகளாகப் புழக்கத்தில் இருந்து வரும் நாட்டு உண்டியலைப் பற்றியதாகும்.

நாட்டு உண்டிகளில் இருவகை உண்டு. ஒன்று 'தர்சனி' உண்டி (Dharshani Hundi). அதாவது இவ் வுண்டியைக் காட்டிய மாத்திரத்தில் கடனாளி பணத்தைச் செலுத்தித் தீர வேண்டும். இதைக் கேட்பு உண்டியல் (Demand Bill) போன்ற தெனக் கூறலாம். இன்னொரு வகை 'முக்தாத்தி' உண்டி (Muddhathi Hundi). இது தற்கால வணிக உண்டியலைப் (Bill of Exchange) போலக் காலக் கெடுவை உள்ளடக்கியது. ஆனால் இதற்கு முத்திரை வரிச் செலவு மிகவும் அதிகமானபடியால் வங்களாத்திலும், பம்பாய் நகரிலுந்தான் தற்போது இது புழக்கத்திலுள்ளது. ஏனைய இடங்களில் வழக்கிழந்து விட்டது. இதன் இடத்தை 'தர்சனி உண்டி' பிடித்துக் கொண்டது.

நாட்டு வங்கியர், வட்டித் தொழிலர் மூலமாக உருவாகின்ற உண்டிகள் பல நாணயமற்ற நடவடிக்கைகளுக்கு இடம் கொடுத்துச் சமூக விரோதச் செயல்களுக்கு ஊக்கமளிப்பதனாலும், இவ் வுண்டிகளில் ஒரு சிலவே வணிக உண்டிகளாகவும், மீதிப் பெரும்பாலும் பணவசதி உண்டிகளாகவே இருப்பதாலும், இவ் வுண்டிகள் சார்பான கணக்கு வழக்குகளெல்லாம் முறையான விதி முறைகளுக்கும், ரிசர்வு வங்கிச் சட்ட திட்டங்களுக்கும், தணிக்கைக்கும் கட்டுப்படாததாலும், இவற்றிற்குக் கள்ளப் பணச் சந்தையிலேயே பேராதரவும், பெருவரவேற்பும் உள்ளது. நல்ல பணச் சந்தையில் மதிப்பும் இல்லை; வரவேற்பும் இல்லை. இவ் வுண்டிகளை முறையான வணிக உண்டியல் (Bill of Exchange) போலத் தள்ளுபடி செய்ய (to discount) பெரும்பாலான வங்கிகள் முன் வருவதில்லை. அவற்றை ரிசர்வு வங்கியிடம் அளித்து மறு தள்ளுபடி செய்வதோ (Rediscounting) முற்றிலும் நடவாத காரியம் என்றாலும் இவ் வுண்டிகள் இந்தியாவின் பல பாகங்களில், பல முறைகளில், பல மொழிகளில் இன்றும் வெகுவாக உருவாகிக் கொண்டுதாம் உள்ளன. வணிகர்களிடையே செலாவணியாகிக் கொண்டுதாம் வருகின்றன.

இந் நாட்டு உண்டிகள் மதிப்பிழந்து செலாவணித் தன்மையை இழந்ததற்கு அவற்றிற்கு விதிக்கப்பட்டுள்ள காலத்திற் கொவ்வாத சில பரம்பரை மரபுகளும் நிபந்தனைகளும் ஒரு காரணமாகும். எடுத்துக்காட்டாக, 'ஷாஜோக்' (Shahjog) உண்டி என்பது யார் பேரில் வரையப்பட்டதோ, அவரைப் பற்றிய முகவரி முதலான எல்லா விவரங்களையும் அறிந்து கொண்ட பின்னரே பணம் பட்டுவாடா செய்யப்படும். 'ஜோக்மி' உண்டி (Jokhmi Hundi) யில் சரக்கு விற்பனையில், சரக்குகளுக்கு அழிவோ, சேதமோ ஏற்பட்டால் அதை விற்பனையாளர் அல்லது உண்டியலை வைத்திருப் போரே ஏற்றுக்கொள்ள வேண்டுமேயொழிய, கடனாளிக்கு அதில் எவ்விதப் பொறுப்பும் இல்லை. 'தனி ஜோக்' (Dhanijog) உண்டி யார் கையிலுள்ளதோ அவர் பணம் பெற்றுக்கொள்ளலாம். 'தேக் கன்ஹார்' (Dekhanhar) உண்டியும் இவ்வாறே யார் கொடுத்தாலும் பணம் கிடைக்கும். 'பெர்மன் ஜோக்' (Firmanjog) உண்டி யாருக்குச் சாட்டப்படுகிறதோ (Payable to order) அவருக்குப் பணம் கிடைக்கும்.

இவ் வதிகாரத்தை முடிப்பதற்கு முன் பணச் சந்தையில் முக்கியமான இடத்தை வகிக்கின்ற அழைப்புக் கடன் பற்றி ஒரு சிறிது கூறவேண்டும். இவ் வழைப்புக் கடன் நடவடிக்கை பெரும் பாலும் பத்திர வடிவம் பெறுது. வங்கிகள் ஒன்றுக்கொன்று தங்கள் உடனடித் தேவைக்கான பற்றுக் குறையை நிறைவு செய்ய, மற்ற வங்கியிடமிருந்து அதனுடைய மிகைப் பணத்தைத் தாற்காலிகக் கடனாகப் பெற்று ஒரு நாளுக்குள்ளோ, மூன்று நாள்களுக்குள்ளோ திருப்பித் தந்துவிடும். ஒரு வேளை பிற வங்கிகளால் முடியாத நிலையில் பெரிய வணிக நிறுவனங்களோ, நிதியாளர்களோ (Financiers) தாங்களே நேரடியாக அல்லது தரகர்கள் வழியாக வங்கிகளுக்கு உதவுவதுண்டு. இவ் வழைப்புக்கடன் சந்தை பணச் சந்தையின் சிறப்பான ஓர் அங்கமாகத் திகழ்கிறது.

# 5. பணச் சந்தையின் அங்கங்கள்
## (Components of Money Market)

இதுவரை பணச்சந்தை என்றால் என்ன வென்பதைப் பற்றியும் அதில் பயன்படுத்தப்படும் கருவிகளைப் பற்றியும் கண்டோம். இவ் வதிகாரத்தில் அக் கருவிகள் எவ்வாறு பயன்படுத்தப் பெறுகின்றன; அதைக் கொண்டு இயங்கும் நிறுவனங்கள் எவ்வாறு செயல்படுகின்றன என்பதைப் பற்றிப் பார்ப்போம். கீழ்க்கண்டவைகளே பணச் சந்தையின் முக்கிய அங்கங்களாகும்:

1. *அழைப்புக்கடன் சந்தை* (Call Loan Market)
2. *ஏற்புச் சந்தை* (Acceptance Market)
3. *தள்ளுபடிச் சந்தை அல்லது உண்டியல் சந்தை* (Discount Market or Bill Market)
4. *கருவூல உண்டியல் சந்தை* (Treasury Bills Market)
5. *பிணையீட்டுக்கடன் சந்தை* (Collateral Loan Market)
6. *அந்நியச் செலாவணிச் சந்தை* (Foreign Exchange Market)
7. *பொற்சந்தை* (Bullion Market)

### 1. அழைப்புக்கடன் சந்தை (Call Loan Market)

*பணச் சந்தையில் பணத்திற்குத் தேவை எவ்வாறு ஏற்படுகிறது, அத் தேவை எவ்வாறு நிறைவு செய்யப்படுகிறது என்பதைச் சிறிது பார்ப்போம்.*

*வங்கிகளுக்கு அன்றாட நடைமுறை வணிகத்திற்குச் சில சமயங்களில் ரொக்கப் பற்றாக்குறை ஏற்படும். விவசாயப் பொருள்கள் உற்பத்தியாகிச் சந்தைக்கு வரும்போது வாணிபம் மும்முரமடையும், அச் சமயங்களில் வணிக நிறுவனங்களுக்கிடையே, மாற்று உண்டியல்கள் நிறைய உருவாகும். அம் மாற்று உண்டியல்களை ஏற்றும்,*

வாங்கியும் தங்கள் வாடிக்கையாளர்களுக்கு நிதி வசதியளிக்க வேண்டிய கட்டாயம் வங்கிகளுக்கு ஏற்படும். அதேபோல், அரசின ரால் வெளியிடப் பெறும் குறுங்கால நெடுங்காலக் கருவூல உண்டியல் களை வாங்கி வைத்துக் கொள்ள வேண்டிய அவசியம் ஏற்படும். இம் மாதிரியான சமயங்களில் வங்கிகளுக்குத் தேவைப்படும் ரொக்கத் தொகை தங்கள் கைவசம் இல்லையென்றால் உடனே உபரி ரொக்கம் வைத்துள்ள வங்கிகளிடமிருந்து தாற்காலிகமாக, ஓர் இரவுக் குள்ளோ, மூன்று நாள்களுக்குள்ளோ அல்லது ஒரு வாரத்திற் குள்ளோ திரும்பித்: தந்துவிடுவதாகத் தங்களுக்குத் தேவையான தொகையை வாங்கிக் கொள்ளும். இம் மாதிரியான நடவடிக்கை நாம் சாதாரணமாகச் சில நெருக்கடியான சமயங்களில் நம் நண்பர் களிடம் 'நாளை தருகிறேன் அல்லது நாளை மறுநாள் தருகிறேன்' என்று சொல்லிக் கைமாற்றாக ஐந்து ரூபாய், பத்து ரூபாய் வாங்கு வதைப் போல, பெரும்பாலும் வங்கிகளிடையே நடைபெறும் தாற்காலிகக் கொடுக்கல் வாங்கலாகும். இதில் சில சமயங்களில், வங்கிகளிடையே முடியாத நிலையில், மின்வாரியம் போன்ற அரசுப் போன்மைக் கழகங்கள் (Quasi Government Bodies), நகராண்மைக் கழகம் போன்ற பொது அமைப்புகள், ஆயுட்காப்பீட்டு நிறுவனங்கள் (Life Insurance Companies), தனியார் பெரும் வணிக நிறுவனங்கள் ஆகியவை கூடத் தங்கள் உபரி ரொக்கத்தை இம் மாதிரி வங்கி களுக்குக் கொடுத்து உதவுவதுண்டு. இக் கொடுக்கல் வாங்கலில் வசூலிக்கப்படும் வட்டி வீதம் இடத்திற்கேற்ற மாதிரியும் பருவத் திற்கேற்ற மாதிரியும் பணத்தேவை, அளிப்பு இவற்றின் போக்கு களுக்கு ஏற்பவும் அவ்வப்போது மாறுபடும்.

வங்கியின் வாடிக்கையாளர் ஒருவர் மற்றவருக்குத்தாம் கொடுக்க வேண்டிய தொகையை அவர் பேருக்குக் காசோலை (cheque) எழுதிக் கொடுக்கிறார். இவ்வாறு பல வாணிக வங்கிகளின் வாடிக்கை யாளர்கள் தங்களிடையே இருக்கும் கொடுக்கல் வாங்கல்களைக் காசோலை விடுத்துக் கணக்குகளைத் தீர்த்துக் கொள்கிறார்கள். ஒரு வங்கியின் மீது அவ் வங்கியின் வாடிக்கையாளரால் எழுதப்பட்ட காசோலை, அதைப் பெற்றிருப்பவருக்கோ, அவர் உத்திரவு பெற்றவருக்கோ, அதைக் கொணர்பவருக்கோ அவ் வங்கி காசோலையில் குறிக்கப்பட்டிருக்கும் தொகையைக் கேட்கும்போது (on demand) செலுத்த வேண்டும் என்ற ஆணையுடையதாக இருக் கிறது. வாடிக்கையாளரிடமிருந்து பெற்ற இக் காசோலையைப் பெற்றுக் கொண்ட நபர், தாம் கணக்கு வைத்திருக்கும் வேறொரு வங்கியில் அந்தக் காசோலையின் தொகையை வசூலிப்பதற்காகத் தம் கணக்கில் சேர்க்கலாம். ஆகவே, பின் கூறப்பட்ட வங்கிக்குக் காசோலை (cheque) எவ் வங்கியின் மீது எழுதப்பட்டதோ, அவ்

வங்கியின் மீது பணம் பெற உரிமை (claim) உண்டு. இவ்வாறு அவ் வங்கிகளிடையே கொடுக்கல் வாங்கல் ஏற்பட்டு விடுகிறது. எவ்வாறு ஒரு வங்கி மற்ருெரு வங்கிக்குக் கொடுக்க வேண்டியிருக் கிறதோ, அதேபோல் இவ் வங்கிக்கு மற்ற வங்கிகளிடமிருந்து வர வேண்டிய தொகையும் இருக்கலாம். வங்கிகளிடையே ஏற்படும் இக் கொடுக்கல் வாங்கலேச் சரிசெய்து தருவதற்குத் தீர்வகம் (clearing House) ஒன்று தேவைப்படுகிறது. அத் தீர்வகம் தனி ஓர் அமைப் பாக இல்லாமல் ஒவ்வொரு நாட்டின் மைய வங்கியின் ஓர் அங்க மாகவே அமைந்துள்ளது. ரிசர்வு வங்கி உள்ள இடங்களில் ரிசர்வு வங்கியும், அதன் கிளேகள் இல்லாத நகரங்களில் ஸ்டேட் வங்கியும் தீர்வகப் பணியைச் செய்கின்றன. இதன் மூலம் ஒரு வங்கி மற்ருெரு வங்கிக்குச் செலுத்த வேண்டிய நிகரத் தொகை எவ்வளவு என்று ஒவ்வொரு நாளும் பகல் சுமார் 1 மணிக்கெல்லாம் தெரிந்துவிடும். ஒவ்வொரு வங்கிக்கும், மற்றவர்களிடமிருந்து காசோலே (cheque), பணவிடை (Draft) போன்ற இனங்கள் வகையில் அன்றைய வசூல் எவ்வளவு என்பது தெரிந்து விடும். இவற்றுடன் கையிருப்பும் சேர்ந்து, அடுத்த நாள் தேவைக்குப் போதுமா அல்லது போதாதா என்று பார்ப்பர். போதாது என்று தெரிந்தால் உடனே உபரி ரொக்கம் (Surplus cash) வைத்துள்ள வங்கியிடமோ, அகமிகைத் தொகை (House money) வைத்துள்ள தனியார் நிறுவனங்களிடமோ, பொது நிறுவனங்களிடமோ அன்றைக்கு (அதாவது அடுத்த நாளேக்கு) வேண்டிய தொகையைக் கைமாற்றுக் கடன் போல் ஒரு நாளில் திருப்பித் தந்து விடுவதாக வாங்கிக் கொள்வர்.

இவ்வகையான கடன் அழைப்புக்கடன் (Call loan) அல்லது அழைப்புப் பணம் (Call money) என்று வழங்கப்படுகிறது. இக் கடன் எவ்வகை ஈடுமின்றிக் கொடுக்கப்படுகிறது. பெரும்பாலும் தரகர்கள் மூலமே இக் கடன் ஏற்பாடு செய்யப்படுகின்றது. இதில் குறிப்பிடத்தகுந்த செய்தி என்னவென்ருல் இவ் வழைப்புக் கடன் நடவடிக்கையில் ஸ்டேட் வங்கி (State Bank of India) கலந்து கொள்வதில்லே.

1943 முதல் இந்தியாவில் வங்கித் தொழில் நன்கு பிரபல மடைந்து, வங்கிகளின் எண்ணிக்கையும் நாளுக்கு நாள் பெருகுவதால் இவ் வழைப்புக்கடனுக்கு ஒரு துணேச் சந்தையே (Sub-market) உருவாகியுள்ளது. இவ் வங்கிகளின் வரிசையில் ஒரு சில பழைய பெரிய வங்கிகள்தாம் பட்டியலில் சேர்க்கப்பட்டுள்ளன. (Scheduled) பட்டியலில் சேராத, அண்மைக் காலத்தில் தோன்றிய சிறிய வங்கிகள் பலவும் அவற்றில் அவசரத் தேவைகளுக்கு அழைப்புக்கடன் வசதி பெறவிழைகின்றன. ஆனுல் பட்டியலில் சேர்ந்த பெரிய

வங்கிகள் சிறிய வங்கிகளிடமிருந்து இவ் வழைப்புக் கடனைப் பெறத் தயாராயுள்ளனவேயொழிய அவற்றிற்குத் தரத் தயாராயில்லை. தனி நபர்க்கடன் நடவடிக்கையில் எவ்வாறு கடன் வாங்குவோரின் நாணயமும் வகையுடைமையும் ஆதாரமாகக் கருதப்படுகின்றதோ, அது போலவே, வங்கிகளிடையேயான இவ் வழைப்புக் கடன் முறையிலும் வங்கியின் வயது, தராதரம், வகையுடைமை ஆகியவை யெல்லாம் ஆதாரங்களாகக் கருத்தில் எடுத்துக் கொள்ளப் படுகின்றன.

வங்கிகள் தவிர பிற அரசுப் போன்மைக் கழகங்கள், பொது நிறுவனங்கள், தனியார் துறை வணிக நிறுவனங்கள் ஆகியவை வங்கிகளுக்கு அழைப்புக் கடனாகத் தங்கள் அகமிகைத் தொகைகளைக் (House money) கொடுக்கலாமேயொழியத் தங்கள் அவசரத் தேவை களுக்கு வங்கிகளிடமிருந்து இம் மாதிரி வாங்க முடியாது.

கல்கத்தா, பம்பாய் போன்ற பெரும் வணிக மையங்களில் (Business centres). இவ் வழைப்புக் கடன் சந்தை மிகச் சுறு சுறுப் பாக நடைபெறும். சிறிய மையங்களில் அவ்வளவு சுறு சுறுப்பு இல்லை. இவ் விடத்தில் சுவையானதொரு செய்தியைக் குறிப்பிடுவது நல்லது. அகமதாபாத் வணிகர்களிடையே இப்படி ஓர் 'இராப் போது' காலக் கெடுவில் ஒரு குறிப்பிட்ட வட்டி வீதத்தில் அழைப்புக் கடன் வாங்குவதும் கொடுப்பதும் பரம்பரையாக நடந்து வருகிறது. இது நாட்டின் பணச் சந்தையில் பெரிதான பாதிப் பொன்றையும் (influance) நிகழ்த்தி விடாதென்றாலும், குறிப்பிடத் தகுந்ததொரு செய்தியாகும்.

### அழைப்புக் கடனும் சிற்றறிவிப்புக் கடனும் (Call loan and loan at short notice)

இந்தியாவில் பம்பாய் போன்ற வணிக மையங்களில் வங்கிகளி டையே நடைபெறும் அழைப்புக்கடன் வேறு, இலண்டனில் வங்கிகள் வழங்கும் சிற்றறிவிப்புக்கடன் வேறு. இரண்டும் ஒரே விதமாகத் தோன்றினாலும் இரண்டுக்கும் அடிப்படையில் சில வேறுபாடுகள் உண்டு. இந்திய அழைப்புக்கடன், வங்கிகள் தங்களுக்குள் நடத்திக் கொள்கின்ற ஒரு கடன் திட்டம். இங்கிலாந்தில், வங்கிகள் தள்ளுபடியகங்களுக்கும் பங்குமாற்றுக் கம்பெனிகளுக்கும் 7 நாள் தவணையில் வழங்கும் கடனே சிற்றறிவிப்புக் கடன். இந்திய அழைப்புக்கடன் எந்தவிதமான ஈட்டின் பேரிலும் இன்றி, முன்னர்க் கூறியது போலக் கைமாற்றுக் கடன்மாதிரிக் கொடுக்கப்படுவது. ஆனால், இலண்டன் சிற்றறிவிப்புக்கடன், உண்டியல்கள், குறுங்கால அரசுப் பத்திரங்கள். பிற ஈடுகள் ஆகியவற்றைப் பிணைகளாகப்

பெற்றுக்கொண்டு வங்கிகள் தள்ளுபடியகங்களுக்கும், பங்குமாற்றுக் கம்பெனிகளுக்கும் கொடுக்கப்படுவது.) இலண்டனில் இக் கடன் முறை அங்கீகரிக்கப்பெற்றுப் பணச் சந்தையில் நிரந்தரமாகக் காணக் கூடிய ஒன்று. ஆனால் இந்தியாவில் இராப்போதுக் கடனாகவும் நிர்ணயமற்றதாகவும் கிடைத்தவரையில் வட்டி பெறலாம் என்ற முறையிலும் நடப்பது.

## அகமிகைத் தொகை (House Money)

ஏற்கனவே கூறியதுபோல, அரசுப் போன்மைக் கழகங்களும், பொது நிறுவனங்களும், தனியார் வணிக நிறுவனங்களும், தங்கள் தொழிலுக்குத் தேவையான நடைமுறைக் கையிருப்புப் போக மிகையான பணத்தை வெறுமனே பயனின்றி வைத்திருப்பதற்குப் பதில் வங்கிகளின் அழைப்புக்கடன் தேவைக்கு வழங்குவதோடு 1 முதல் 3 மாதங்கள், 6 முதல் 12 மாதங்கள் ஆகிய குறிப்பிட்ட காலக்கெடு வைப்புகளாகச் செலுத்தி வைப்பது உண்டு. இவ் வைப்புகளுக்கு நல்ல வட்டி கிட்டும். அதுவும், வாணிபம் மும்முர மாக நடைபெறும் அக்டோபர் முதல் ஏப்ரல் வரையிலான மாதங் களில் வட்டி இன்னும் கொஞ்சம் அதிகமாகவே கிட்டும். டாடா, பிர்லா போன்ற பெறும் வணிக நிறுவனங்கள் தங்கள் அகமிகைகளைக் கொண்டு வங்கிகளுக்கு அழைப்புக்கடன் வழங்குவதிலும் இம் மாதிரியான குறுங்காலக்கெடு வைப்புகளில் செலுத்திப் பயனடை வதிலும் முதன்மை வகிக்கின்றன.

## தனியார் வைப்புகள்

தொழில் நிறுவனங்களும், வணிக நிறுவனங்களும் தங்கள் அகமிகையை மேற்கூறிய வகைகளில் பயன்படுத்தி வட்டி இலாபம் சம்பாதிப்பதைப் போலவே தனி நபர்களும் தங்கள் சேமிப்பைப் (சிறு தொழில் வணிக நிலையங்கள் தங்கள் உபரிப் பணத்தை) பெரிய தொழில் வணிக நிறுவனங்களிடம் வைப்புத் தொகையாகச் செலுத்திவைத்து வட்டி இலாபம் சம்பாதிப்பது நம் நாட்டில் பரவலான வழக்கமாக உள்ளது. வைப்பாளர், தம் வைப்புத் தொகைகளை எந்த நேரத்திலும் கேட்டுப் பெற்றுக்கொள்ளலாம். நிறுவனங்கள் அவர்கள் கேட்கின்ற நேரத்தில் கொடுக்கத் தயாராகவே இருக்கும். ஏனென்றால், வைப்புத்தொகை திருப்பித் தரப்படுவதில் தயக்கமோ தவக்கமோ ஏற்பட்டால் தங்கள் நிறு வனத்தின் பெயரும் புகழும் கெட்டுவிடும். ஆகையால் இம் மாதிரி யான வைப்புகளை ஏற்கும் நிறுவனங்கள் எந்த நேரத்திலும் அவற்றைத் திருப்பித்தரும் (நிபந்தனை எழுத்துமூலம் இல்லையென்றா லும் எழுதா மரபாகக் கடைபிடிக்கப்படுகிறது) நிலையில்தாம் ஏற்றுக்கொள்கின்றன.

பம்பாயில், தானியம், சர்க்கரை, வாசனைத் திரவியங்கள் போன்றவற்றின் மொத்த வியாபாரங்களின்பேரில் தனிநபர்கள் அதிகமாக வைப்புத் தொகைகளைச் செலுத்துவது சாதாரணமாகக் காணக்கூடிய ஒன்றாகும்.

இக் கடன் நடவடிக்கைகளில் மிகுந்த ஈடுபாடு கொண்டு வங்கி களிடையும் நிறுவனங்களிடையும் சுற்றித் திரிபவர் நிதித் தரகர் களாவர். இவர்களே, கடன் ஈவோரையும் கடனாளிகளையும் ஒன்று சேர்க்கின்றனர்.

## 2. ஏற்புச் சந்தை (Acceptance Market)

பணச் சந்தையின் கருவிகள் என்ற தலைப்பில் 'வங்கி ஏற்பு' (Bankers' Acceptance) என்ற ஒன்றைப் பார்த்தோம். அது நியூயார்க் பணச் சந்தையில் நடைபெறுகிற ஒரு வணிக ஏற்பாடு என்பதையும் பார்த்தோம். இங்குக் குறிப்பிடப்படும் ஏற்புச்சந்தை என்பது அதிலிருந்து பெரிதும் மாறுபட்ட ஒரு வணிக நடவடிக்கை யாகும்.

வணிக நடவடிக்கைகளில், குறிப்பாக வெளிநாட்டு வணிக நடவடிக்கைகளில் உருவாகும் உண்டியல்கள் செலாவணித் தன்மையில் பெறுவதற்கு முதல் நிகழ்ச்சி ஓர் ஏற்பகத்தில் நிகழ் கிறது. அதாவது,(ஏற்றுமதியாளர், தம் சரக்கு விலைத்தொகையை இறக்குமதியாளரிடமிருந்து உடனடியாக வசூலிக்க முடியாத காரணத்தால் அவர் பேரில் ஓர் உண்டியலை வரைகிறார். அவ் வுண்டியலுக்கு உயிரும், சட்டப்பூர்வமான வலுவும் கொடுப்பது ஓர் ஏற்பகத்தின் பொறுப்புறுதிக் கையொப்பமாகும்.)

ஏற்பகங்கள் என்பவை நல்ல நிதிவளம்பெற்ற நிதியாளர்களின் கூட்டுருக்களே (Group of Financiars) ஆகும்.

இங்கிலாந்தில் நீண்டகாலமாகப் பேரும் புகழும் பெற்றிலங்கும் ஏற்பகங்கள் சில உள்ளன. இவர்கள் உள்நாட்டு வாணிபத்திற்கு மட்டுமன்றிச் சர்வதேச வாணிபத்திற்கும் பெரிதும் உதவுகிறார்கள். இதனால் இவர்களுக்கு உலகின் பல பெரிய வணிக மையங்களி லெல்லாம் கிளைகள் உண்டு. அவ்வக் கிளைகளின்மூலம் ஒவ்வொரு நாட்டிலும் உள்ள வங்கிகள், வணிக நிறுவனங்கள் ஆகியவற்றின் தராதரம், நாணயம், வகையுடைமை ஆகியவற்றைப்பற்றித் தெரிந்து வைத்துக்கொள்கிறார்கள். அவ்வாறு பெற்ற விவரங்களைக் கொண்டே தங்கள் ஏற்புப் பணியைச் செய்கிறார்கள்.

கடனாளியின் நாணயத்திற்குத் தாங்கள் உத்திரவாதமளிக்கும் பொறுப்பை ஏற்றுக்கொள்வதால் ஏற்பகங்களுக்குச் சிறு கழிவு (Commission) கிடைக்கின்றது. சில சமயங்களில் இப் பணியை அக் கடனாளியின் வங்கியே செய்ய முன்வந்தால் அதுவும் ஒரு குறிப்பிட்ட தொகையைச் சிறு கழிவாக (Commission) அக் கடனாளியிடமிருந்து வசூலிக்கிறது.

இலண்டனில் உலகப் புகழ்பெற்ற ஏற்பகங்கள் உள்ளன. பாரிங்ஸ் (Barings), ராத்சைல்ட்ஸ் (Rothchilds), க்ளீன்வோர்ட்ஸ் (Kleinworts), ஏர்லாங்க்ஸ் (Erlongs), லாசார்ட்ஸ் (Lazards) ஆகியோர் நெடுங்காலமாக இப் பணியாற்றிக்கொண்டு வருவோராவர். இவர்கள் இப் பணியோடு, பெரும் தொழில் வணிக நிறுவனங்களுக்கு நெடுங்கால மூலதனக்கடன் புரட்டுவதிலும் உதவி வருகின்றனர்.

ஏற்பகங்களால் ஏற்றுக்கொள்ளப்பட்ட உண்டியல்கள் வங்கிகளாலும், தீர்வகங்களாலும் (Clearing House) எளிதில் ஏற்றுக் கொள்ளப்படுவதால் நாட்டில் உண்டியல்களின் புழக்கம் வளர்ச்சியடைகிறது.

இந்தியப் பணச் சந்தையில் இங்கிலாந்திலிருப்பதைப் போன்ற ஏற்பகங்கள் இல்லை. இங்கு அவ் வேற்பகங்கள் செய்யும் பணியை இந்திய வணிக வங்கிகளே செய்கின்றன.

**3. தள்ளுபடிச் சந்தை அல்லது உண்டியல் சந்தை (Discount Market or Bill Market)**

உண்டியல் சந்தை என்பது உண்டியல்களில் பேரம் அல்லது நடவடிக்கைகளுள்ள சந்தையாகும். தனி வணிகர்களாலும், நிறுவனங்களாலும் ஏனையோராலும் உண்டியல்கள் ஏற்கப்படலாம். கடனில் சரக்கை விற்றவர், கடனில் சரக்கை வாங்கியவர் மீது உண்டியல் எழுதி, அதில் பின் கூறியவரின் ஏற்பைப் பெற்றுப் பத்திரமாக ஆக்கிக் கொள்கிறார். ஒவ்வோர் உண்டியலுக்கும் காலக்கெடு ஒன்று உண்டு. முன் அதிகாரத்தில் கூறியது போல் கெடுவுத் தேதிக்குள் உண்டியல் வைத்திருப்பவருக்கு நிதி தேவைப் பட்டால் உண்டியல் தொகையில் தள்ளுபடி செய்து பணம் பெறலாம். தள்ளுபடிக்கு உண்டியல்களை வாங்கும் தொழிலில் தேர்ச்சி பெற்ற பல நிறுவனங்களும் தனி நபர்களும் உள்ளனர். இவர்கள் செயலாற்றும் சந்தையை உண்டியல் சந்தை அல்லது தள்ளுபடிச் சந்தை என்கிறோம். உண்டியல்களில், குறிப்பாகப் பன்னாட்டு வாணிபத்தின் மூலம் தோன்றும் உண்டியல்களில் தேர்ச்சி

பெற்ற, நாணயத்திற்குப் பெயர் போன ஏற்பகத்தின் கையொப்பம் இருந்தால் அதை மிக எளிதாகத் தள்ளுபடி செய்து விடலாம். ஏனெனில் அக் கையொப்பம் ஒரு பெரிய உத்திரவாதமாக, உறுதியாக, நம்பிக்கையளிக்கக் கூடியதாக எல்லோராலும் கருதப் படுவதேயாகும்.

இலண்டனில் தள்ளுபடிச் சந்தை (Discount Market) நெடுங் காலமாகச் செயல்பட்டுக் கொண்டு வருகின்ற ஒன்றாகும். அங்கு 12 கழிவகங்கள் உள்ளன. அவற்றில் 3 நிறுவனங்கள் பெரியவை. ஏனைய சிறியவை. பெரிய மூன்றும் பொது வரையறுத்த கம்பெனிகள் (Public Limited Companies); சிறிய ஒன்பதும் கூட்டு வணிக அமைப்புகளாகும் (Partnerrship Firms). இவை தவிர மூன்று அல்லது நான்கு சிறிய நிறுவனங்கள் 'இயக்கத் தரகர்கள்' (Running-Brokers) என்ற நிலையில் உள்ளன. இவர்கள் தம் தொழிலுடன் பிற வங்கிகட்கும் வாடிக்கைக்காரர்களுக்கும் முகவர்களாகவும் (Agents) திகழ்கின்றனர்.

இத் தள்ளுபடியகங்கள், வங்கிகளிடமிருந்தும், பெரும் நிதியகங் களிடமிருந்தும் குறுங்காலக் கடன் பெற்றுத் தங்கள் தொழிலைச் செய்கின்றன. சில சமயங்களில் வங்கிகளிடமிருந்து, அழைப்புக் கடனாகப் பணம் பெற்று மாற்று உண்டியல்களை வாங்குகின்றன. அக் கடனுக்கு இவை கொடுக்கும் வட்டித் தொகையைக் காட்டிலும் அதிகமானதொரு தொகையை உண்டியல்களைத் தள்ளுபடி செய்வதன் மூலம் பெறுகின்றன. இந்த உபரியே அவற்றிற்குக் கிடைக்கும் ஊதியமாகும். உதாரணமாக 6 சதவீதத்தில் வங்கியிடமிருந்து அழைப்புக் கடன் பெற்று 7 சதவீதத்தில் உண்டியல்களைத் தள்ளுபடி செய்தால் 1 சதவீதம் தள்ளுபடியகத்திற்கு இலாபமாக அமைகிறது. உண்டியல்களைத் தள்ளுபடி செய்தபின் அவற்றின் உரிய காலக் கெடுவுக்குள் வங்கி தனது வட்டி வீதத்தை உயர்த்திக் குறுங் காலக் கடன்கள் வழங்குவதையும் நிறுத்தினால், தள்ளுபடியகங்களுக்குக் கஷ்டமும் நஷ்டமும் ஏற்படும். அவற்றைத் தவிர்ப்பதற்காகத் தள்ளுபடியகங்கள் உண்டியலின் ஆயுட் காலமாகிய மூன்று மாதத்திற்குள் வங்கி வட்டி வீதத்தில் ஏற்படக்கூடிய மாற்றங்களை யெல்லாம் ஓரளவு கணித்துத் தள்ளுபடி வீதத்தை (Discount Rate) நிர்ணயிக்கின்றன.

சில சமயங்களில் தள்ளுபடியகங்களுக்கு நிதிப் பற்றுக்குறை நேரும்போது தாங்கள் ஏற்கனவே தள்ளுபடி செய்த உண்டியல்களைப் பெரும் வங்கிகளிடமோ, மைய வங்கியிடமோ மறுதள்ளுபடி (Rediscount) செய்து தமது நிதி வளத்தை நிலைப்படுத்திக் கொள்கின்றன.

இங்கிலாந்தில், பாங்க் ஆஃப் இங்கிலாந்து, அயல் நாட்டு வங்கிகள் தீர்வக உறுப்பு வங்கிகள், ஏற்பு நிலையங்கள், தள்ளுபடி நிலையங்கள் உண்டியல் சந்தை நடவடிக்கைகளில் பெரும்பங்கு வகிக்கின்றன.

இந்தியாவில், இங்கிலாந்தில் இருப்பதைப் போன்ற ஒரு தள்ளுபடிச் சந்தை உருவாகவில்லை. அவ்வாறு உருவாக்குவதற்கு ரிசர்வு வங்கி எடுத்துக் கொண்ட முயற்சிகளைப் பற்றி 'உண்டியல் சந்தைத் திட்டம்' என்ற தலைப்பில் பார்ப்போம். இந்தியாவில் தள்ளுபடிப் பணியையும், மறு தள்ளுபடிப் பணியையும் இந்திய வணிக வங்கிகளும் ரிசர்வு வங்கியுமே செய்து வருகின்றன.

### 4. கருவூல உண்டியல் சந்தை (Treasury Bill Market)

சரக்குகளின் விற்பனை அடிப்படையில் உருவாகும் வணிக உண்டியலைப் பற்றி முன்பு பார்த்தோம். இனி, பணச் சந்தையில் இன்னொரு முக்கியமான செலாவணியாக விளங்குகின்ற கருவூல உண்டியலைப் பற்றிப் பார்ப்போம்.

தமது வரவு செலவுத் திட்டத்தில் ஏற்படும் பற்றுக்குறையை ஈடுகட்டவும், போர் நெருக்கடி போன்ற அவசர காலச் செலவுகளை ஈடுகட்டவும் மத்திய அரசும் மாநில அரசுகளும் பத்திரங்களை வெளியிட்டுப் பொது மக்களிடமிருந்து கடன் திரட்டுவது வழக்கம். அப் பத்திரங்களில் கருவூல உண்டியல் என்பது பணச் சந்தையில் ஒரு முக்கியமான அங்கம் வகிப்பதாகும். இதைச் சாதாரணமாக ஓர் அரசாங்கத்தின் கடன் வாக்குறுதிச் சீட்டு (Government Pro-Note) என்றழைப்பது வழக்கம்.

இக் கருவூல உண்டியலின் பேரில் கடன் கொடுப்போர் பொது மக்களாகவும், கடன் பெறுவோர் அவர்களுடைய அரசாங்கமாகவும் இருப்பதனால், இதில் கடனாளியின் (அரசாங்கத்தின்) நாணயம், வகையுடைமை ஆகியவை பற்றிய ஐயத்திற்கெல்லாம் இடமில்லை. அத்தோடு, இவ் வுண்டியலில், கடனாளியாகிய அரசாங்கத்தின் முத்திரையும் அதன் வாக்குறுதியும் பொறிக்கப் படுவதன் மூலம், கடன் கொடுப்பவராகிய பொதுமக்களின் பெயர் குறிக்கப் படுவதில்லை. எனவே, ஒரு கருவூல உண்டியல், அதன் கால முதிர்வு நாளில் யாருடைய கையில் உள்ளதோ அவர் அதை அருகிலுள்ள ஓர் அரசாங்கக் கருவூலத்திலோ, ஸ்டேட் வங்கிக் கிளையிலோ கொடுத்துப் பணமாக்கிக் கொள்ளலாம்.

கருவூல உண்டியல்களின் விற்பனை மத்திய அரசுக்குத் தனது குறுங்கால நிதித் தேவைகளை நிறைவு செய்துகொள்ள உதவுவதோடு அவ்வப்போது பணச் சந்தையில் மிகையாக மீறும் நிதியைத் தன் வசதிக்காக ஈர்த்துக் கொள்ளும் வாய்ப்பையும் அளிக்கிறது. மாநில அரசுகள் 1950ஆம் ஆண்டுக்குப் பின் கருவூல உண்டியல்களை வெளியிடுவது நின்றுவிட்டது.

1965ஆம் ஆண்டு வரை கருவூல உண்டியல்கள் வாரந்தோறும் அளிப்புமுனைவு (Tender) மூலம் (அல்லது பொது ஏலத்தின் மூலம்) பொது மக்களுக்கு விற்கப்பட்டன. அவ்வாறு விற்கப்பட்ட உண்டியல்களின் செலாவணிக் காலம் 91 நாட்கள். இவை தவிர அதே செலாவணிக் கால அளவு கொண்ட 'இடைநிலைக் கருவூல உண்டியல்களும்' சில ஆண்டுகளாக விற்கப்பட்டன. இவ்விடை நிலை உண்டியல்கள் ரிசர்வு வங்கி நிர்ணயித்த விலை வீதத்தில் ஒரு வாரத்தில் ஏலம் முடிந்த மறு நாளிலிருந்து அடுத்தவார ஏல நாளுக்கு முதல் நாள் வரை விற்கப்பட்டன. 1965 ஜூலை 12ஆம் தேதியிலிருந்து பொதுமக்களுக்கு உண்டியல் விற்பனையில் ஒரு மாற்றம் கொண்டு வரப்பட்டது. அதாவது ஒவ்வொரு வாரமும், 'அளிப்பு முனைவு' (Tender) முறையில் விலை கோரி ஒரு குறிப்பிட்ட நாளில் குறிப்பிட்ட தொகைக்கு விற்பதற்குப் பதிலாக வாரத்தில் எல்லா நாட்களிலும் ரிசர்வு வங்கி அவ்வப்போது அறிவிக்கும் விலைகளில் உண்டியல்கள் பொதுமக்களுக்கு விற்கப்பட்டன. இம் மாற்றம் முக்கியமாக வணிக வங்கிகள் தமது உபரியை உடனுக்குடன் இம்மாதிரி உண்டியல்களில் முதலீடு செய்ய வாய்ப்பளிப்பதற்காகத்தான் செய்யப்பட்டது. இவ் வுண்டியல்களுக்குத் தள்ளுபடி வீதம் (Discount Rate) தொடக்கத்திலிருந்து இறுதி ஏல நாள் வரை 3·5 சதவீதமாக இருந்தது. 1968 மார்ச்சு மாதம் வங்கி வீதம் குறைக்கப்பட்டதால் தள்ளுபடி வீதமும் 3 சதவீதமாகக் குறைக்கப்பட்டது. இந்த வீதம் சென்ற ஆண்டு (1974) வரை நீடித்தது. இப்பொழுது 4 சதவீதமாக உயர்த்தப்பட்டுள்ளது.

இந்தியாவில் கருவூல உண்டியல் சந்தை மிகவும் குறுகியதாக உள்ளதால் அவை அவ்வளவு முக்கியத்துவம் பெறவில்லை. அவற்றை வாங்குவோர் பெரும்பாலும் வணிக வங்கிகளே (Commercial Banks): அதுவும், குறிப்பாக, வணிக மந்தப் பருவங்களில் தங்களிடம் மிகைப் பணம் உள்ளபோது அவற்றை அதிகமாக வாங்கிச் சேர்த்துக் கொண்டு, வணிக மும்முரப் பருவங்களில் அவற்றை ரிசர்வு வங்கியிடம் அளித்துக் கழிவு செய்து தங்கள் நீர்மை (Liquidity) வளத்தைப் பெருக்கிக் கொள்ளலாம் என்ற நோக்கத்துடனயே இவ் வுண்டியல்களை வாங்குகின்றன. மாநில அரசுகளும் தங்கள் குறுங்கால நிதித்

தேவைகளை நிறைவு செய்து கொள்வதோடு தங்கள் செலவு போக மீறும் தாற்காலிக மிகைத் தொகைகளை இவ் வுண்டியல்களை வாங்குவதில் முதலீடு செய்வதை விரும்புகின்றன. இதற்காகவே, பொது மக்களுக்கு வார ஏலத்தின் மூலம் விற்கப்பட்ட உண்டியல்களைத் தவிர மாநில அரசுகள், அரசுப் போன்மைத் துறைகள் (Quasi Government Departments), அந்நிய நாட்டு மையவங்கிகள் (Foreign Central Banks) ஆகியவை வாங்குவதற்கென்றே அட்ஹாக் கருவூல உண்டியல்கள் (Adhoc Treasury Bills) வழங்கப்படுகின்றன. இவ் வுண்டியல்களும் 91 நாள் செலாவணியுடையனவே. ஏலத்தில் வாடிக்கையான முதலீட்டாளர்களுடன் மாநில அரசுகளும் மேற் கூறப்பட்ட பிறரும் போட்டியிடக்கூடாது என்பதற்காகவும், அவை வார ஏலத்திற்காகக் காத்திருப்பதோ, உண்டியல்களின் அளவான அளிப்பினால் (Limited supplies) சந்தையில் ஏற்படும் விரும்பத்தகாத ஏற்ற இறக்கங்களினால் (undesirable fluctuations) பாதிக்கப்படுவதோ கூடாது என்பதற்காகவும் இவ்வழி ஏற்பாடு செய்யப்பட்டது. இந்த அட்ஹாக் உண்டியல்கள் (Adhoc bills) பொது ஏலத்திற்கு முன் இருந்த அளிப்பு முனைவு விலையைக் காட்டிலும் (tender rate) ரூ. 0·016 கூடுதலான விலைக்கு விற்கப் பட்டன. தற்போது பொது ஏலமுறை இல்லையாகையால் பொது மக்களுக்கு விற்கப்படுகின்ற அதே விலையிலேயே மாநில அரசுகள் முதலான நிலையங்களுக்கும் விற்கப்படுகின்றன. கருவூல உண்டியல்கள் மாநில அரசுகளுக்காகவும், வங்கிகளுக்காகவும், பிற ஏற்றுக் கொள்ளப்பட்ட நிறுவனங்களுக்காகவும் (approved bodies) ரிசர்வு வங்கியால் மறு தள்ளுபடி செய்யப்படுகின்றன.

## 5. பிணையீட்டுக்கடன் சந்தை (Collateral Loan Market)

இது பணச் சந்தையில் ஒரு முக்கியமான அங்கமாகும். பட்டியலில் சேர்ந்த வங்கிகளின் சொத்துகளில் பாதிக்கு மேல் இப் பிணையீட்டுக் கடன்களாகும்.

சாதாரணமாக வங்கிகள் தம் வாடிக்கையருக்குக் கீழ்க்கண்ட சில முறைகளைப் பின்பற்றிக் கடன் வசதியளிக்கின்றன.

1. பெயர் பெற்ற வணிக நிறுவனங்களுக்கும், நாணயமுள்ள தனிப்பட்ட நபர்களுக்கும் வெறும் நாணயத்தை மட்டும் நம்பித் தரப் படும் கடன்கள் பிணையிலாக் கடன்கள் (Clean advance or unsecured loan) எனப்படும்.

2. வாடிக்கையாளர்களின் சொத்து, தங்கம், அரசுப் பத்திரங்கள், விளை பொருள், செய் பொருள்கள் ஆகியவற்றை ஈடுகளாகப்

பெற்றுக் கொண்டு வழங்கப்படும் கடன்கள் பிணையீட்டுக் கடன்கள் (collateral loan) எனப்படும்.

3. சில சமயங்களில் வாடிக்கையரின் தொழில், வணிக உடனடித் தேவைகளுக்காக, அவரது நடப்புக் கணக்கில் இருக்கும் தொகைக்கு மேல் ஒரு குறிப்பிட்ட தொகையைக் கடனாக வழங்குவது அதிகப் பற்றுக்கடன் (overdraft) எனப்படும். இவ் வகையில் தொழிலகங்களும் வணிக நிறுவனங்களும் சாதாரணமாகத் தங்கள் விற்பனைப் பொருள்களை ஈடாகக் காட்டுவது வழக்கம். இவ்வாறு வசதி செய்யப்பட்ட கடன் தொகையில் வாடிக்கையர் பயன்படுத்திய அளவுக்கு மட்டும் வட்டி வசூலிக்கப்படும்.

4. இன்னும் சில சமயங்களில், ஒரு குறிப்பிட்ட கால அளவிற்கு ஒரு குறிப்பிட்ட தொகையை வாடிக்கையரின் கணக்கில் வரவு வைத்து அதை அவர் பயன்படுத்திக் கொள்ள வசதி செய்வது ரொக்கக் கடன் (cash credit) எனப்படும். இதை மீண்டும் மீண்டும் புதுப்பித்துக் கொள்ளலாம். ஆனால், இதில் வாடிக்கையாளர் பயன் படுத்திய அளவுக்குமட்டும் வட்டி வசூலிக்கப்படுவதில்லை; மாறாக அவர் கணக்கில், வரவு வைக்கப்பட்ட முழுக் கடன் தொகைக்கும் அவர் கேட்டுக் கொண்ட காலக் கெடு முழுமைக்கும் வட்டி வசூலிக்கப்படும்.

இவற்றில் கடைசி மூன்றும் பிணையீட்டுக்கடன் சந்தையின் முக்கிய அங்கங்களாகும். இரண்டாவதாகக் கூறப்பட்ட பிணையீட்டுக் கடன் வாங்க, வங்கியில் ஒருவருக்கு நடப்புக்கணக்கு (Current Account) தேவையில்லை. ஆனால், பின் இரண்டும், அதாவது, அதிகப் பற்றும், ரொக்கப் பற்றும் பெறுவதற்கு வங்கியில் நடப்புக் கணக்கு இருக்க வேண்டும். எளிதில் விற்பனையாகக் கூடியவையும், விலை ஏற்றத் தாழ்வினால் பாதிக்கப்படாதவையுமான அரசுப் பத்திரங்கள், முதல்தர நிறுவனங்களின் பங்குகள், விளைபொருள்கள் அல்லது செய் பொருள்கள் (Manufactured goods) ஆகியவை பிணையீடுகளாக ஏற்றுக் கொள்ளப்படுகின்றன. சாதாரணமாகத் தொழிலகங்களுக்கு அவற்றின் பருவகாலத் தேவைகளைப் பூர்த்தி செய்ய அவற்றினுடைய நிலை முதல்களையே (Block Capital) ஈடாகக் கொண்டு இவ் வகைக் கடன்கள் வழங்கப்படும். ஆனால் இவற்றின் பேரில் கொடுக்கப்படும் கடன்களுக்கும், இவற்றின் சந்தை மதிப்பிற்கும் தக்க இடைவெளி யிருத்தல் வேண்டும். அரசுப் பத்திரங்களுக்கு 10 முதல் 20 சதவீதமும், விளைபொருள், செய்பொருள்களுக்கு 30 முதல் 50 சதவீதமும் குறைத்துக் கொண்டு கடன் வழங்கப்படும். இவ் வகைக் கடன் பெரும்பாலும் நெடுங்காலக் கடனாகும்.

ஏனைய ரொக்கப்பற்றும், அதிகப்பற்றும் குறுங்காலக் கடன்களாகும். நெடுங்காலக் கடன்களில், முழுத் தொகைக்கும் கெடுவுக் காலம் முடியும் வரையும் வட்டி வசூலிக்கப்படுவதோடு வட்டிவீதமும் அதிகமாகையால், வணிகர்கள் அதிகமாக ரொக்கப் பற்றையும் அதிகப்பற்றையுமே விரும்புகின்றனர். வங்கிகள் அதிகப்பற்றைக் காட்டிலும் ரொக்கப் பற்றுக்கு அதிகமான வட்டி வசூலிக்கின்றன. காரணம், அதற்கு ஈடாகப் பெறப்படும் விற்பனைப் பொருள்களை அரசுப் பத்திரங்களைப் போன்றோ முதல்தரப்பங்குகளைப் போன்றோ உடனடியாக விற்பனை செய்து முதலை ஈட்ட முடியாது. ரொக்கப் பற்றின் மீது வசூலிக்கப்படும் வீதம் எப்பொழுதும் வங்கி வீதத்தை விட 2-லிருந்து 3 சதவீதம் அதிகமாகவே இருக்கும்.

### 6. அந்நியச் செலாவணிச் சந்தை (Foreign Exchange)

வெளிநாட்டு உண்டியல்களை வாங்குவதற்கும் விற்பதற்கும் நிதி உதவி செய்து அதன் மூலம் அந்நியச் செலாவணி மாற்று நடவடிக்கைகளில் ஈடுபடும் வங்கிகள் செலாவணி மாற்று வங்கிகள் எனப்படும். 1935 வரை இந்திய இம்பீரியல் வங்கி (Imperial Bank of India—State Bank of India) இந்தியாவிற்கு வெளியில் வசூலிக்கப்பட வேண்டிய மாற்று உண்டியல் பேரங்களில் ஈடுபடக்கூடாது என்றும், அதனுடைய வாடிக்கையரின் தனிப்பட்ட தேவைக்கு மட்டும் வெளி நாடுகளில் (இந்தியாவிற்கு வெளியே) பணம் செலுத்திக் கொள்ளலாமென்றும், சட்டப்படி தடுக்கப்பட்டிருந்தது. அரசாங்கத்தின் இந்தச் செயல் அந்நியச் செலாவணி மாற்றுவேலை இந்தியாவிற்கு வெளியில் இணைக்கப்பட்ட, ஆனால் இந்தியாவில் கிளைகளைப் பெற்றிருந்த ஒரு சில குறிப்பிட்ட வங்கிகளிடையே தேங்க வாய்ப்பளித்தது. ஏனைய இந்தியக் கூட்டுப் பங்கு வங்கிகள் இந்தப் பேரங்களில் ஈடுபடுவது சட்டப்படி தடுக்கப்படவில்லையென்றாலும், மற்ற நடவடிக்கைகளில் போலவே, இதிலும் அவை இம்பீரியல் வங்கியையே பின்பற்றின. இந்திய விடுதலையின் வரை, இச் செலாவணி மாற்றுத் தொழில், முழுக்க முழுக்க அந்நிய மாற்று வங்கிகளின் (Foreign Exchange Banks) ஏகபோக உரிமையாக இருந்தது. இப்பொழுதும், அத் துறையில் அவற்றின் பங்கு அதிகமாகவே உள்ளது. இவ் வங்கிகள், இலண்டன் தள்ளுபடிச் சந்தையில் (London Discount Market) மிகக் குறைந்த வட்டி வீதத்தில் நிதிபெற வாய்ப்பிருந்தாலும், ஏற்கெனவே நல்ல மூலதனவளம் பெற்றிருப்பதாலும் இந்திய வங்கிகள் இவற்றுடன் போட்டியிட முடியாமல் தவிக்கின்றன. அத்துடன், முக்கியமான வெளிநாட்டு வணிக மையங்களுல் (Important Foreign Centres) இந்திய வங்கிகளுக்குக் கிளைகள் இல்லாமையால், நேரடியாகச் செலாவணி மாற்று நடவடிக்கைகளில் ஈடுபட முடியவில்லை.

கீழ்க்காணும் சில காரணங்களினால் இந்திய வங்கிகள் வெளி மையங்களில் (Foreign Centres) கிளைகள் தொடங்க முடியாமல் உள்ளன.

1. அவ்வப் பணச் சந்தைகளில் (Foreign money markets) கடன் கொடுத்து வாங்கும் அளவுக்கு அவற்றிற்கு நிறைய மூலதன வளம் இருக்க வேண்டும்.

2. நிறைய நடை மூலதனம் (Floating resourses) கைவசமிருந்தால்தான் அவற்றின் மொத்த வணிகம் கணிசமாக இருக்கும்.

3. அக் கிளைகள், தம் நிலையில் உறுதிப்படுகிறவரை ஒரு குறிப்பிட்ட காலத்திற்கு அவை நட்டத்தில் இயங்க வேண்டியிருக்கும்.

4. ஆரம்பத்தில் சர்வதேசச் செலாவணி மாற்றுத் தொழிலில் நல்ல பயிற்சி பெற்ற நம்பிக்கைக்குகந்த பணியாளர்கள் அவற்றிற்குக் கிடைக்க வேண்டும்.

5. வெளி மையங்களில், ஓர் இந்திய வங்கி, அங்குள்ள மக்களின் வைப்பீடுகளைக் கவருவது என்பது அவ்வளவு எளிதானதன்று.

6. அவை அந்நிய வங்கிகளின் எதிர்ப்பைச் சமாளிக்க வேண்டியிருக்கும்.

7. அவற்றின் தலைமை அலுவலகம், இலண்டன் போன்ற உலக நிதி மையங்களில் இல்லாமல் இந்தியாவில் இருப்பதனால், சர்வதேச நிதி நிலைமைகளுடன் அப்போதைக்கப்போது நெருங்கிய தொரு தொடர்பு வைத்துக் கொள்ள முடிவதில்லை.

அந்நியச் செலாவணி வங்கிகளும் இந்திய ரிஸர்வு வங்கியால் அனுமதிக்கப் பெற்ற இந்திய வங்கிகளும் இந்திய வெளிநாட்டு வாணிபத்திற்கு நிதியீடு செய்வது கீழ்க்கண்ட இருவகை நடவடிக்கைகளிலாகும்.

1. இந்தியத் துறைமுகங்களிலிருந்து வெளி நாட்டுத் துறைமுகங்களுக்கும், அதே போல் அங்கிருந்து இங்கும் நடைபெறுகின்ற சரக்குப் போக்கு வரத்துகளின் பேரில் நிதியளிப்பது.

2. உள்நாட்டு விநியோக அல்லது கொள்முதல் மையங்களுக்கும், இந்தியத் துறைமுகங்களுக்குச் செல்லும் பொருள்களுக்

கும் அல்லது அங்கிருந்து வரும் பொருள்களுக்கும் நிதி யளிப்பது.

கீழ்க்காணும் முறைகளில் இந்திய வெளிநாட்டு வாணிபத்தில் தனியார் துறையில் வழக்கமாக நிதியீடு செய்யப்படுகிறது.

**1. பத்திரங்கள் சேர்ந்த உண்டியல் முறை (Documentary Bills Method)**

இந்த முறையில், ஏற்றுமதியாளர் சரக்கைக் கப்பலில் ஏற்றி, வெளிநாட்டு இறக்குமதியாளர் பேரில் அவருடன் செய்து கொண்ட ஒப்பந்தப்படி ஓர் உண்டியல் வரைகிறார். கப்பல் ரசீது (Bill o) lading) காப்புறுதிச் சீட்டு (Insurance policy) வணிக இடாப்பு (Commercial Invoice) தோற்றுவாய்ச் சான்று (Certificate of originf ஆகியன வணிக உண்டியலுடன் இணைக்கப்பட்டு ஏற்றுமதியாள ருடைய வங்கிக்கு வசூலுக்காக அனுப்பப்படுகின்றன. சாதாரண மாக, இறக்குமதியாளருடைய நாட்டில், வங்கியின் கிளைமுகவரால் இத் தொகை வசூலிக்கப்படுகிறது. வங்கி முகவர் உண்டியலை இறக்கு மதியர் அல்லது பெயரவர் (Drawee) அதில் குறிப்பிட்டுள்ள தொகை யைக் கொடுத்தாலோ அல்லது அதற்கு ஈடாக ஓர் ஏற்புக் கடன் உண்டியல் (acceptance usance bill) வரைந்து கொடுக்க ஒப்புக் கொண்டாலோ பத்திரங்களை அவரிடம் கொடுப்பார். ஒப்பந்தம், ஏற்பின் மேல் பத்திரங்கள் (Documentary against acceptance) என்று குறித்திருந்தால் உண்டியலை, இறக்குமதியர் ஏற்றதும் பத்திரங்களை அவரிடம் கொடுத்து விடவேண்டும். ஏற்புக் கடன் பத்திரங்கள் சாதாரணமாக 60 அல்லது 90 நாள்கள் கெடுவுடையதாக இருக்கும். ஏற்றுமதியர் அவ்வளவு நாள்கள் காத்திருக்க வேண்டு மென்பதில்லை. அவர் தமது வங்கியிடம் அந்த உண்டியலைக் கொடுத்துத் தள்ளுபடி செய்து கொள்ளலாம். அந்த வங்கி, அவ் வுண்டியல் தொகையில் தன் தள்ளுபடித் தொகை போக மீதியை அளிக்கிறது. பற்றுக்குறை நிதி வளமுடைய வாடிக்கையாளர்கள் இத் தள்ளுபடி வசதியைப் பயன் படுத்திக் கொள்ள முடியாது. ஏற்றுமதி அபாயத் தவிர்ப்புக் காப்புறுதிக் கூட்டு (Export Risks Insurance Corporation) நிறுவப்பட்டதன் பின் சிறிய ஏற்றுமதி யர்க்கு இருந்து வந்த சில அசௌகரியங்கள் நீங்கி விட்டன.

**2. உண்டியலுடன் பத்திரங்கள் சேர்ந்த கடன் முறை (The method of Documentary Credit with Bills)**

இம் முறையில், பத்திர உண்டியலுடன் (Documentary Bill) வணிக உறுதிக் கடிதமும் சேர்த்து அனுப்பப்படுகிறது. இறக்கு

மதியர் தமது வங்கியிடம், ஒப்புக் கொள்ளப்பட்ட சில நிபந்தனைகளின்படி, ஏற்றுமதியருக்கு ஒரு வகை உறுதிக் கடிதம் வழங்கும்படி கேட்டுக் கொள்கிறார். அதன்படி, அவ் வங்கி ஏற்றுமதியருடைய நாட்டு வங்கியருக்கு இறக்குமதியருக்காக ஏற்றுமதியர் பேரில் ஒரு பத்திரக் கடன் (documentry credit) தொடங்குமாறு வேண்டுகிறார். அதன்படி அவ் வங்கியர், வணிகக் கடிதம் வழங்கிய வங்கியர் வைத்த நிதிக்கு ஈடாகவோ அல்லது இறக்குமதியர் வங்கிக்கு அளித்த பத்திரக் கடிதத்தின் அடிப்படையிலோ ஒரு பத்திரக் கடன் கணக்கு தொடங்குகிறார். பத்திரங்கள் சேர்ந்த உண்டியலைப் போலவே, ஏற்றுமதியர், கப்பலில் சரக்குகளை ஏற்றியபின் வணிக உண்டியலையும் பிற பத்திரங்களையும் சம்பந்தப்பட்ட வங்கியிடம் சமர்ப்பிக்கிறார். அவ் வங்கி, வணிகக் கடிதத்தில் குறிப்பிட்ட நிபந்தனைகளின் படி தனக்குரிய தள்ளுபடித் தொகையை எடுத்துக் கொண்டு மீதியை ஏற்றுமதியருக்கு அளிக்கிறது. இதற்குள் ஏற்றுமதியருடைய வங்கி பத்திரங்களைக் கடிதம் வழங்கிய (இறக்குமதியர்) வங்கிக்கு அனுப்புகிறது. அது, அப் பத்திரங்களையும், உண்டியலையும் இறக்குமதியருக்குச் சமர்ப்பிக்கிறது. இறக்குமதியர் பத்திரங்களின் உதவியால் சரக்குகளைப் பெற்றுக் கொள்ளுவார். வணிகக் கடிதம் பெரும்பாலும் இரத்து செய்ய முடியாதது. சில விஷயங்களில், குறிப்பாக, ஐரோப்பாவிலிருந்து ஏனைய நாடுகளுக்கு இறக்குமதி செய்யப்படும்போது, கடிதம் வழங்கும் வங்கி ஏற்றுமதியர் நாட்டு வங்கியிடம் தனது ஒப்புறுதியைத் தருமாறு கேட்டுப் பெற்றுக் கொண்டு அதன் பின்னர் வழங்குகிறது. இவ் வகைக் கடன், உறுதி செய்யப்பட்ட கடன் எனப்படும் (Confirmed Credit). இந்த உறுதி செய்யும் விஷயத்தில் வங்கி கடிதத்தில் தனது உத்திரவாதத்தைச் சேர்த்து அதற்கென்று பிரத்தியேக உறுதிக் கட்டணம் (Confirmation Charge) என்று வசூலித்துக் கொள்கிறது.

3. **உண்டியல் இல்லாது இரத்து செய்யக் கூடிய அல்லது இரத்து செய்ய முடியாத உறுதி செய்யப்பட்ட அல்லது உறுதி செய்யப்படாத பத்திரக் கடன் முறை: (The method of Documentary Credit, irrevocable or revocable and confirmed or unconfirmed without a bill of exchange)**

இம் முறையில் ஏற்கெனவே ஒப்புக் கொண்ட நிபந்தனைகளின்படி சரக்கைக் கப்பலேற்றிவிட்டு, கப்பல் ரசீது முதலான பத்திரங்களுடன் கடிதம் வழங்கிய வங்கி மேல் வரையப் பெற்ற ஒரு பண விடையுடன் எல்லாவற்றையும் வங்கியிடம் சமர்ப்பிக்கிறார். மற்ற முறைகள் எல்லாம் ஏற்கெனவே விவரிக்கப்பட்டவை போல்தாம். இவ்வகைக் கடன் பார்வைக் கடன் (sight) அல்லது ஏற்புக் கடனாக இருக்கும்.

**பார்வைக் கடன்**

இதில், ஏற்றுமதியர், கடிதம் வழங்கிய வங்கி மேல் வரையப் பெற்ற பணவிடையைப் பார்த்த மாத்திரத்திலேயே, அதுவோ, அதன் பதிலாளோ (Agent) அப் பணவிடைத் தொகையைக் கொடுத்துத் தீரவேண்டும்.

**ஏற்புக் கடன்**

இதில் ஏற்றுமதியர் கடிதம் வழங்கிய வங்கி மேலோ, அதன் பதிலால் மேலோ பணவிடை தேதியிலிருந்து அல்லது அதைப் பார்த்த நாளிலிருந்து பணம் செலுத்துவதற்கு 30, 60, 90 அல்லது 120 நாள்கள் தவணை கொடுத்து வரையப் படுவதாகும்.

**வணிக உறுதிக் கடிதம் (Letter of Credit)**

இது, இறக்குமதியருடைய நாட்டிலுள்ள ஒரு வங்கியினால், ஏற்றுமதியர் பேருக்கு வழங்கப் படுவதாகும். இது, ஏற்றுமதியர் இறக்குமதியரின் பேரில் ஒரு குறிப்பிட்ட தொகைக்கு மாற்று உண்டியல் வரையவும் அப்படி வரையப்பட்ட உண்டியல் வசூலுக்கு அனுப்பப் படும்போது அத் தொகைக்குத்தான் பொறுப்பேற்றுக் கொள்வதாகவும் வங்கி தன் ஒப்புதலை அளிப்பதாகும். இது ஒரு நாட்டு வங்கியால் இன்னொரு நாட்டு வங்கிக்கு எழுதப்படுவதாகும்;

வங்கி அகராதி (Dictionary of Banking) அதைக் கீழ்க் கண்டவாறு விளக்குகிறது.

'வணிக உறுதிக் கடிதம் என்பது ஒரு பத்திரம். அது ஒரு வங்கியால் இன்னொரு வங்கிக்கு எழுதப்படுகிறது. அதில் குறிப்பிட்ட நபருக்குக் குறிப்பிட்ட தொகையைக் கொடுக்குமாறு கோரப்பட்டிருக்கும்'

இக் கடிதத்தில், இக் கடன் பற்று எத்தனை நாள்கள் வரை செல்லுபடியாகும் என்று குறிப்பிடப்பட்டிருக்கும். வணிக உறுதிக் கடிதம் ஒன்று கொடுத்தவுடன், 'வணிக உறுதிக் கடிதங்கள் கணக்கில்' பற்று வைக்கப்படும். கடிதம் கொடுப்பவர், 'வழங்குவோரா'கவும், பெறுபவர் 'வழங்கப்படுவோரா'கவும் அழைக்கப் பெறுவர். யார் பெயரில் வழங்கப் பெறுகிறதோ அவர் பற்றுத் தொடக்கர் (Opener of Credit) என்றும், எந்த வங்கியின் பேரில் எழுதப் பெறுகிறதோ அது இடைநிலை வங்கி எனவும் அழைக்கப் பெறும்.

**வணிக உறுதிக் கடிதங்களின் வகைகள்**

**1. நிபந்தனையில்லாக் கடிதம் (Clean letter of Credit)**

இதில் வணிக உண்டியலை ஏற்பது பற்றியோ, அதன் தொகையைச் செலுத்துவது பற்றியோ எந்த விதமான நிபந்தனை

களும் இணைக்கப்பட்டிருக்க மாட்டா. நிபந்தனைகள் ஏதுமின்றிக் கடிதத்தில் கண்டபடி உண்டியலை ஏற்றுக்கொள்ள ஒரு வங்கி ஒப்புதல் தெரிவித்தால் அது நிபந்தனையில்லாப் பற்றுக் கடிதம் என வழங்கப் பெறுகிறது.

2. பத்திரங்கள் சேர்ந்த பற்றுக் கடிதம் (Documentary letter of Credit)

இதன்படி அனுப்பப்படும் சரக்குகளின் பேரிலான (Documents of title to goods) உரிமைப் பத்திரங்களையும் உண்டியலுடன் சேர்த்து அனுப்ப வேண்டும். சாதாரணமாகக் கப்பலேற்றப்படும் சரக்குகளின் பேரில் உண்டியல் வரையப்படும் போது, கீழ்க் காணும் சரக்குரிமைப் பத்திரங்களும் (Documents of title to goods) உண்டியலுடன் சேர்த்தே அனுப்பப்படுவது வழக்கம்.

1. கப்பல் ரசீது (Bill of lading)
2. இடாப்பு (Invoice)
3. காப்புறுதிச் சீட்டுகள் (Insurance Policies etc)

முதலியன.

இக் கடிதம் கொடுக்கும் வங்கியர், ஏற்றுமதியர் ஒரு குறிப்பிட்ட தொகைக்குத் தம் பேரில் உண்டியல் வரைய அனுமதிப்பதோடு, சரக்குரிமைப் பத்திரங்களையும் (Documents of title to goods) உண்டியலுடன் சேர்த்து அனுப்பினால்தான் அதை ஏற்றுக் கொண்டு பணம் தர முடியும் என்று தெரிவிக்கின்றன.

3. இரத்தாகக் கூடிய பற்றுக் கடிதம் (Revocable letter of Credit)

இதன்படி, அளிக்கப் பெற்ற கடன் வசதி, கடிதம் கொடுத்த வங்கியரின் விருப்பம் போல், ஏற்றுமதியரின் ஒப்புதலின்றியே இரத்து செய்யப்படும். இந்த இரத்து, சரக்கைக் கப்பலில் ஏற்றுவதற்கு முன்னரே அறிவிக்கப்படும்.

4. இரத்தாகாத பற்றுக் கடிதம் (Irrevocable letter of Credit)

இதன்படி, ஏற்றுமதியரின் ஒப்புதலின்றி அளிக்கப் பெற்று கடன் வசதியை இரத்து செய்ய முடியாது. இது உறுதி செய்யப் பெற்ற கடன் (Confirmed Credit) என்றும் அழைக்கப் பெறும். இதில் ஒரு சிறப்பு என்னவென்றால், சரக்கு வாங்குவோர் அதாவது இறக்குமதியரே இதை வேண்டாமென்றாலும், ஏற்றுமதியரின் ஒப்புதலின்றி இரத்து செய்ய முடியாது.

இரத்து செய்ய முடியாத கடன் வசதியில் அதை வழங்கிய வங்கியர் வழங்கிய கடனை இரத்துச்செய்யவும் முடியாது; ஏற்கெனவே

ஒப்புக்கொள்ளப்பட்ட நிபந்தனைகளில் எதையும் அது சம்பந்தப் பட்ட ஏற்றுமதியர், இறக்குமதியர் ஆகியவர்களுடைய ஒப்புதலின்றி மாற்றவும் முடியாது. இக் கடன் வசதி செய்யும் வங்கி இதைத் தொடங்கும் போதே உண்மையில் குறிப்பாகக் கடிதத்தில் கண்ட நிபந்தனைகளைக் காப்பாற்றவும் மதிக்கவும் தனது வாக்குறுதியை அளிக்கிறது. எனவே, இதனடிப்படையில் வரையப்படும் உண்டியலோ, ஆவணமோ இரத்துச் செய்ய முடியாத ஒன்றாகி விடுகிறது.

ஓர் உறுதி செய்யப்பட்ட வணிகக் கடன் கடிதம், அதை வழங்கும் வங்கியர், அக் கடிதத்தில் கண்ட நிபந்தனைகளின்படி, அது சம்பந்தப்பட்ட எல்லாப் பத்திரங்களையும் மதித்து ஏற்றுக் கொள்வதாகத் தமது வாக்குறுதியைத் தெரிவிப்பதாகத் தெளிவான இரத்துகளில் வரையப்படுகிறது. இதன் இரத்து செய்ய முடியாத தன்மையினால், அது செல்லுபடியாகும் கால வரம்பு, அது காலாவதியாகும் தேதி ஆகியவை அதன்மேல் மிகத் துல்லியமாகத் தெரியும்படி வரையப்படுகிறது.

வணிகக் கடன் கடிதங்களை, இன்னொருவருக்கு மாற்றவோ, வேறொன்றுக்கு ஈடாகக் காட்டவோ முடியாது. எனவே, அது வழங்கப் பெறுவோர் (Beneficiary) தவிர வேறு எவரும், அதை வழங்கிய வங்கியரின் மேல் உரிமை கொண்டாட முடியாது.

இடைநிலை வங்கி (அதாவது, ஏற்றுமதியர் வரைந்த உண்டியல்களைப் பட்டுவாடாவுக்கு ஏற்கும் வங்கி) இது சம்பந்தமான பத்திரங்கள் சமர்ப்பிக்கப்படும் போது மிகவும் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். மொத்தப் பற்று (withdrawals) அனுமதிக்கப் பெற்ற தொகைக்கு மிகக் கூடாது. காசோலைகளில் காணும் கையொப்பங்கள், ஏற்கெனவே வாங்கி வைக்கப் பெற்றுள்ள மாதிரிக் கையொப்பங்களை ஒத்திருக்கின்றனவா என்று பார்க்க வேண்டும். உண்டியலை ஏற்பதற்கு முன் அதில் குறிக்கப்பெற்ற பெயர் முதலியனவற்றையும் ஏனைய நிபந்தனைகள் சரியாகக் கடைப் பிடிக்கப்பட்டுள்ளனவா என்பதையும் பார்த்துக் கொள்ளவேண்டும்.

இடைநிலை வங்கியர் (Negotiating Banker) மேற்குறிப்பிட்டவற்றையெல்லாம் முன்னெச்சரிக்கையுடன் கவனிக்கத் தவறினால், கடிதம் வழங்கிய வங்கியர் மேல் இழப்பீடு (damage) கேட்க எந்தவித உரிமையும் இல்லை.

**பொற்சந்தை (Bullion Market)**

இந்தியப் பொருளாதாரத்தில் தங்கத்தில் முதலீடு செய்வது நெடுங்காலமாகப் பேரிடத்தை வகித்து வந்துள்ளது. இதற்கு முக்கியமான நோக்கமென்ன?

நகைகளின் மீது தணியாத மோகமா, பாதுகாப்பான மதிப்புச் சேமிப்பின் மீது ஒரு பற்ரு என்று தீர்மானிப்பது மிகவும் சிரமமான ஒன்ருகும்.

இந்தியப் பொருளாதாரச் சூழ்நிலையில், காலம் காலமாகத் தங்கத்தைச் சேர்த்துவைப்பது பாதுகாப்பான மதிப்புச் சேமிப்பாகக் கருதப்பட்டு வந்துள்ளது. ஆனல், நன்கு தொழில் வளர்ச்சியுற்ற நாடுகளில், தங்கத்தைச் சேர்ப்பதற்குப் பதில் மக்கள் தமக்கெனச் சொந்த வீடுகள் கட்டிக் கொள்வதையே விரும்புகின்றனர். இது அவர்களுக்கு ஒரு சமூக மதிப்பையும் பாதுகாப்பையும் அளிப்பதோடு உபரி வருவாய்க்கும் வகை செய்கிறது. அண்மைக் காலம் வரை, கிராமங்கள் நிறைந்த இந்தியாவில் மிகக் குறைந்த வருமானத் திஞல், இவ்வகையில் மக்கள் முதலீடு செய்ய வாய்ப்பேற்படவில்லை. இங்கிலாந்து, அமெரிக்கா போன்ற வளர்ச்சியடைந்த நாடுகளில் அவற்றின் தேசியச் சேமிப்பில் பாதியளவு வீடு கட்டும் திட்டங்களில் செலவிடப்படுகின்றது. இந்தியாவில் எழுத்தறிவின்மை, அறியாமை, பாதுகாப்பின்மை ஆகியவை தங்கச் சேமிப்பை மிகுதிப்படுத்தி யிருக்கலாம். ஆனல், முக்கியமான காரணம் என்னவென்ருல், சேமிப்புக்கு வேறு மாற்று வசதியில்லாமையேயாகும். மிக அண்மைக் காலமாக இத் தங்கச்சேமிப்புக்குறைந்து மற்ற வகையான முதலீடுகள் பெருகிவருகின்றன. சாதாரண காலங்களில் தங்கம் வெள்ளி வாங்குவது குறையவில்லையென்ருலும், மொத்த முதலீடு களைப் பார்க்கின்ற போது இவ் வுலோகங்களில் முதலீடு செய்யும் விகிதம் பெரிதும் குறைந்து விட்டது. தங்கத்தில் முதலீடு செய் வதற்கும், அதை மாற்றுவதற்கும், இதுவரை சமூகக் காரணங்கள் தாம் மிகைப்படுத்திப் பேசப்பட்டனவேயொழிய, பொருளாதாரக் காரணங்களும் விளைவுகளும் சரியாக ஆராயப்படவில்லை. என்ருலும் அறுவடைப் பொருள் விற்பனைப்பருவம், திருமண திருவிழாக் காலங் களில் தங்கத்திற்கு அதிகமான கிராக்கி ஏற்படத்தான் செய்கிறது; வணிகர்கள் நல்ல இலாபம் சம்பாதிக்கத்தான் செய்கின்றனர். ஆனல் இதன் மூலம் பொருளாதார விளைவுகளை உண்டாக்கும் நாணயமாற்று வீதம் எவ்வாறு மாறுதலடையும் என்பதைக் கருத்தில் கொள்வோர் சிலரே.

நம் நாட்டின் பணவியல் முறைபோல் ஒரு முறையைக் கடைப் பிடிக்கும் நாட்டில், மாற்று விகிதம் உயர்ந்துவிட்டால், உடனடியாகப் பொன்விலை குறைகிறது. அதனல் தங்களிடமிருக்கும் மற்ற முதலீடு களையும், சொத்தையும் பொன், வெள்ளியாக மாற்றிக் கொள்கி ருர்கள். தங்கள் அன்ருடத் தேவைகளைக் கூடக் குறைத்துக் கொண்டு பொன், வெள்ளி முதலியவைகளை வாங்குவதில் நாட்டம்

செலுத்தி வருகிறார்கள். ஆகவே இவ் வுலோகங்களின் இறக்குமதியின் அளவு கூடுகிறது. இதன் விளைவாக ஏற்படும் அந்நியச் செலாவணிப் பாக்கியிருப்பைச் சரிக்கட்ட இறக்குமதி செய்யும் நாடு, ஏற்றுமதி செய்யும் நாடுகளுக்கு முன்னைவிட இப்போது அதிக ஏற்றுமதி செய்ய நேரிடும். 1923—26 ஆண்டுகளில் நம் நாட்டின் பணமதிப்புக் கூடுதலானபோது, நாம் வழக்கமாக இறக்குமதி செய்யும் பொருள்களின் மதிப்பு அதிகமானால்கூட ஏற்றுமதிகளின் மதிப்பு விளக்கம் கூற முடியாத அளவு ஏறியது. அதாவது, ஒரு நாட்டின் பணத்தின் மதிப்பு கூடுதலானால் ஏற்படும் தீங்கு இறக்குமதி உயர்வில் தெளிவாகத் தெரியாது. அதேபோல், ஏற்றுமதியின் குறைவையும் உடனடியாகக் காண முடியாது. பொன் உலோகத்தில் வீணாகப் பயனற்ற முறையில் முதலீடு செய்வதைத் தூண்டுவதாகவும் அதே நேரத்தில், அவ் வுலோகத்தை அயல் நாடுகளிலிருந்து தருவித்துக் கொள்வதற்குத் தேவையற்ற ஏற்றுமதிகளும் செய்ய வேண்டி நேரிடுகிறது.

நாணயமாற்று விகிதத்தில் 'மதிப்புக் குறைப்பு' ஏற்படின், அது பொன்விலையை அதிகமாக்கும். நம் நாட்டு வரலாற்றில் இரு வேறுபட்ட நிகழ்ச்சிகள் காணப்படுகின்றன.

நாணயமாற்று விகிதத்தில் 1871-லிருந்து 1893 ஆம் ஆண்டுவரை 'தொடர்பு சரிவு' (prolonged fall) ஏற்பட்டது ஒரு குறிப்பிடத்தக்க நிகழ்ச்சியாகும். தங்கத்தின் விலை உயர்வினால் அந்த உலோகத்தின் இறக்குமதி கணிசமாகக் குறைந்தது. இவ் வகையில் சேமிக்கப்பட்ட தொகையில் ஒரு பகுதி மக்களின் அன்றாடக் குடும்பத் தேவைகளுக்கு உபயோகப்படுத்தப் பட்டிருக்கலாம். ஆனால் சேமிக்கப்பட்ட தொகையில் பெரும் பகுதி வெள்ளி ரூபாய் நாணயங்களாக மாற்றப்பட்டன. நம் நாட்டுப் பணத்திட்டத்தின் அடிப்படை அமைப்பு வெள்ளியாக இருந்ததால், பொன்விலை ஏறியிருந்தாலும் வெள்ளியின் விலையில் மாற்றமேதுமில்லாமலிருந்தது. அதன் தேவை (demand) அதிகரித்தது. இக் காலக் கட்டத்தில் இறக்குமதி செய்யப்பட்ட வெள்ளியின் அளவில் மிகப் பெரும் பகுதி அரசின் நாணய உற்பத்தியகத்திற்குச் (Mint) சென்றது. இருப்பினும், சந்தையில் புழக்குவிக்கப்பட்ட வெள்ளி நாணய அளவில் பெரும் பகுதி பொது மக்களிடம் முடங்கி விட்டது. ஒரு சிறிதுதான் செலாவணியாக உலவிற்று.

தங்கக்காப்பு இருப்பு (Gold Reserve) மைய வங்கியின் நாணய வெளியீட்டுக்கு அடிப்படையாக (cover) அமைகிறது. அந்நியச் செலாவணி நிலுவைகளைத் (Balance of Payment) தீர்வு செய்வதிலும் பொன் ஒரு முக்கிய அங்கம் வகிக்கிறது.

'தங்கக்காப்பு இருப்பு' வைத்திருப்பதன் நோக்கம், மக்களுக்கு நாணயத்தின் மீது ஒரு நம்பிக்கை ஏற்படுத்துவதுதான். ஒரு மைய வங்கியின் இருப்பு நிலைக்குறிப்பில் (Balance Sheet), தங்க இருப்பையும், அந்நியச் சொத்துகளின் விவரங்களையும் ஆண்டுதோறும் வெளியிடுவதும், நாணயத்தின் மீதான மக்களின் நம்பிக்கையைப் பலப்படுத்துவதற்காகத்தான்.

1939 செப்டம்பர் மாதத்திலிருந்து ரிசர்வு வங்கியின் முன் அனுமதி (Licence) பெற்றுத் தங்கம் இறக்குமதி செய்ய வேண்டுமென்று விதிக்கப்பட்டது. இதனால் இந்தியப் பொற்சந்தை, ஏனைய பொற்சந்தைகளிலிருந்து ஒதுக்கப்பட்ட நிலையையடைந்தது. ஆனால், ஏற்கனவே பொதுமக்களின் வசம் தேக்கிவைக்கப்பட்டிருந்த தங்கம் இந்தியர்களிடையே பரம்பரையாக ஊறி வந்த பழக்கங்களாகிய நகை விருப்பமும், பொற்பாதுகாப்புச் சேமிப்பு விருப்பமும் சந்தையில் பொன் வணிகத்திற்குத் தடையில்லாத ஒரு நிலையை உருவாக்கித் தந்தன.

அண்மைக்காலமாகக் கோலார் தங்கவயலில் தயாரிக்கப்பட்ட தங்கமும், மறைமுகமாக வெளிநாடுகளிலிருந்து கடத்தி வரப்பட்ட தங்கமும் இந்தியப் பொற்சந்தைக்கு ஊட்டம் கொடுத்தன. 'இன்றைய தங்க உலகம்' என்ற நூலில் டிமோத்திகிரின் (Timothy Green) என்பவர் '750 மில்லியன் டாலர் மதிப்புடைய தங்கம், கள்ளக்கடத்தல் மூலமாகப் பலநாடுகளைச் சென்றடைகிறது; இது உலகத் தங்க உற்பத்தியில் ஏறக்குறையப் பாதியளவாகும்' என்று கூறுகிறார். இக் கடத்தல் தங்கத்திற்கு இந்தியாவும் ஒரு நல்ல சந்தையாகும்; இன்னும் சொல்லப் போனால் இந்தியா கடத்தல் மன்னர்களின் சொர்க்கம் என்றே கூடக் கூறலாம். இந்தியாவில் கடத்தல் தங்கத்தைத் தள்ளிவிட்டு, அதற்குப் பதிலாக வெள்ளியையும், பன்னாட்டு வாணிபத்தில் மதிப்பு மிகுந்த அந்நியச் செலாவணி நாணயங்களையும் இங்கிருந்து கடத்திச் செல்கின்றனர்.

பல்வேறு வசதி வாய்ப்புகளை முன்னிட்டு இந்தியப் பொற்சந்தை 1923-லிருந்து 'பம்பாய் பொன் மாற்றுச் சந்தை' (Bombay Bullion Exchange) என்ற பெயரில் இயங்கிவருகிறது. பொற்சந்தையில் பொன், வெள்ளி ஆகிய இரு உலோகங்களிலும் வணிகம் நடைபெறுகிறது. இவற்றினுடைய விலைகள் தடையில்லாச் சந்தையில் (Free Market) அவ்வப்போதைய சர்வதேச வணிக, பொருளாதார நிலைகளைப் பொறுத்து அமைகின்றன. தடைச் சந்தையில் (controlled Market) அவ்வந்நாட்டு அரசு விதிக்கின்ற விலைகளிலே நிலவுகின்றன.

தற்போது, இந்திய ரிசர்வு வங்கியிடம் 10 கிராம்களுக்கு ரூ 84-39 என்ற விலை வீதத்தில் ரூ. 182-53 கோடி மதிப்புள்ள தங்கம் காப்பு இருப்பாக (Reserve) உள்ளது. ஆனால் ஒவ்வொரு நாளும் அறிவிக்கப்படும் பம்பாய் பொற்சந்தையின் விலை ஒரு கிராமுக்கு ரூ. 55/- ஆகும். இந்த விலை மதிப்பில் பார்த்தால், காப்பு இருப்பில் உள்ள தங்கத்தின் மதிப்பு ஆறு மடங்காகிறது.

இந்திய ரிசர்வு வங்கியின் தங்கக் காப்பு இருப்பின் விலை வீதம் 1956-க்கு முன் 10 கிராமுக்கு ரூ. 18-21 ஆக இருந்தது. 1956 அக்டோபர் 5ஆம் தேதி ரூ. 53·58ஆக உயர்த்தப்பட்டது. 1969 அக்டோபர் 31ஆம் தேதி ரூ. 84·39ஆக உயர்த்தப்பட்டது.

பொற்சந்தை மூலதனச் சந்தையின் ஓர் அங்கமாகக் கருதப் படுவதுண்டு. எனவே பணச் சந்தையில் அதைப் பற்றி விரிவாக ஆராயத் தேவையில்லை.

# 6. உண்டியல் சந்தைத் திட்டம்

## (Bill Market Scheme)

மைய வங்கி ஆய்வுக்குழு 1931 (Central Banking Enquiry Committee-1931) நாட்டில் ஓர் உண்டியல் சந்தை செயல்படவில்லையென்றால் வங்கி நடைமுறை முழுமையுடையதாகாது என்று கருதியது. எனவே, உண்டியல் சந்தையொன்றை உருவாக்கி வளர்த்து விடவேண்டிய அவசியத்தை அது வலியுறுத்தியது, அதை வளர்ப்பதற்கான சில பரிந்துரைகளையும் வழங்கிற்று. ரிசர்வ் வங்கி நிறுவப் பெற்றதன் பின்னரும் உண்டியல் சந்தை உருவாகவில்லை. காரணம், அதன் தோற்றத்திற்கு அடிப்படைத் தடைகளான சில இடர்ப்பாடுகள் நீக்கப் படாமல் இருந்தன. உண்டியல் சந்தை என்ற ஒன்று இந்தியாவில் 1952 ஆம் ஆண்டு வரை கிடையாது. இக் குறையை நீக்க 1951-ல் ரிசர்வ் வங்கி முயற்சி எடுத்துக் கொண்டது. அதற்குமுன் இந்தியச் செலாவணி மாற்று வங்கிகள் (Exchange Banks) இலண்டன் தள்ளுபடிச் சந்தையைச் சார்ந்து இருந்தன, மற்ற வணிக வங்கிகளும், தாங்கள் தள்ளுபடிக்கு வாங்கிய உண்டியல்களைத் தங்களுக்குப் பணம் தேவைப்பட்டால், இலண்டன் தள்ளுபடிச் சந்தையில் மறு தள்ளுபடி செய்ய வேண்டிய நிலை இருந்தது. அவ்வாறு பணம் தேவைப்படா விட்டால் முதிர்வுக் காலம் வரை தங்கள் வசமே வைத்துக் கொண்டிருக்கும். இந்திய உண்டியல் சந்தை ஒன்று இல்லாத காரணத்தால் இந்திய ஏற்றுமதி இறக்குமதி வாயிலாகத் தோன்றும் வணிக உண்டியல்களை இந்திய நாணயத்தில் எழுத முடியவில்லை.

1951 இறுதியில் வணிக வங்கிகளின் பருவக் காலத் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்கு அரசு ஆவணங்களைத்தான் வாங்கப்போவதில்லை என்று ரிசர்வு வங்கி அறிவித்தது. வணிக உண்டியல்கள் இல்லாமையால் ரிசர்வு வங்கியின் வங்கி வீதம் (Bank rate) வணிக வங்கிகளுக்கு நேரிடையாக ரிசர்வு வங்கி அரசு ஆவணங்களின் மீது கடன் தொகை வழங்கும் அளவை நிர்ணயித்தது. ஜனவரி 1952-ல்

ரிசர்வு வங்கி உண்டியல் சந்தைத் திட்டம் (Bill Market Scheme) ஒன்றை அமலுக்குக் கொண்டு வந்தது. பருவக் காலங்களின் தேவைகளைப் பூர்த்தி செய்ய வணிக வங்கிகள் தங்கள் வசம் இருக்கும் அரசு ஆவணங்களையும், வணிக உண்டியல்களையும் மறு தள்ளுபடி செய்வதற்கு இத் திட்டம் வகை செய்தது. இந்திய ரிசர்வு வங்கி உண்டியல் சந்தையொன்றை வளர்ப்பதற்கென்று கீழ்க் கண்ட சில விதி முறைகளை அறிவித்தது.

1. இந்திய ரிசர்வு வங்கிச் சட்டம் 17 (4) (c) வது ஷரத்து, மாமூல் தவணைக்கடனுறுதிச் சீட்டுகள் (Usance Pro-notes) 90 நாள் தவணைக்குட்பட்ட உண்டியல்கள் ஆகியவற்றைப் பிணை ஈடு களாகப் பெற்றுக் கொண்டு பட்டியல் வங்கிகளுக்கு (Scheduled-Banks) முன் பணம் வழங்க ரிசர்வு வங்கிக்கு அதிகாரமளிக்கிறது. இதற்கு அவ் வங்கிகள் தங்கள் வாடிக்கையாளர்களிடமிருந்து, கடன், அதிகப்பற்று, ரொக்கக் கடன் பற்று ஆகிய இனங்களுக்காகப் பெற்றுக்கொண்ட வாக்கு நிதிப் பத்திரங்களை (Pro-Notes) 90 நாள் தவணைக்குட்பட்ட மாமூல் தவணைக் கடன்களாக மாற்றிக்கொள்ள வேண்டியிருக்கும். தேவைப்பட்டால், அவ் வங்கிகள் தங்கள் கடன் களில் பாதியைக் கேட்புக் கடனுறுதிச் சீட்டுகளாகவும் (Demand Pro-Notes) மீதியை 90 நாள் தவணைக்குட்பட்ட மாமூல் தவணைக் கடன்களாகவும் மாற்றிக் கொள்ளலாம்.

2. ரிசர்வு வங்கி, அங்கீகரிக்கப்பட்ட உண்டியல்களையே ஏற்றுக் கொள்ள அதிகாரம் பெற்றுள்ளதாகையால் பட்டியலில் சேர்ந்த வங்கிகள் தாங்கள் அதனிடம் மறுதள்ளுபடிக்காகச் (rediscount) சமர்ப்பிக்கும். உண்டியல்கள் உரிய நிபந்தனைகளை நிறைவு செய்யுமா என்று உறுதிப் படுத்திக் கொள்ளவேண்டும்.

3. ரிசர்வு வங்கி, பட்டியலில் சேர்ந்த வங்கிகளுக்குக் கடன் வழங்க முற்படும்போது, அவை தன்னிடம் சமர்ப்பிக்கப்படும் உண்டியல்களின் தன்மைகளை மட்டுமல்லாது, அவ் வங்கிகளின் வணிக நடவடிக்கை முறைகளையும் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளும். ஒரு வங்கி. தன்னிடமுள்ள உண்டியல்களைப் பணமாக மாற்றிக் கொள் வதற்குமுன், தன்னால் சமர்ப்பிக்கப்படும் எந்த வணிகத்தாளையும் ரிசர்வு வங்கி ஏற்றுக்கொள்ளுமா என்பதை உறுதி செய்து கொள்ள வேண்டும்.

4. இந்தியாவில் ஓர் உண்டியல் சந்தை விரைவாக வளர்ச்சி யடைய ஊக்கமளிப்பதற்காக வங்கி வீதத்திற்கு ½% குறைந்த வீதத் திலேயே வங்கிகளுக்கு முன்னளிப்புகள் (Advances) வழங்கப்படும். (இவ் வீதத்தை உயர்த்துவது ரிசர்வு வங்கியின் விருப்பத்தைப் பொறுத்தது.)

5. வங்கிகள், உண்டியல் சந்தையை நன்கு பயன்படுத்திக் கொள்ள அவற்றிற்கு மேலும் ஒரு சலுகையளிக்கவும் தீர்மானிக்கப் பட்டது. அதாவது, கேட்பு உண்டியல்களை (Demand Bills) காலக் கெடுவு (Time Bills) உண்டியல்களாக மாற்றுகின்ற பொழுது ஏற்படும் முத்திரை வரிச் செலவில் பாதியை ரிசர்வு வங்கி ஏற்றுக் கொள்ளும்.

6. ஒரு வங்கி, ஒரு சமயத்தில் ரிசர்வு வங்கியிடமிருந்து பெற்றுக் கொள்ளும் முன்பணத்திற்குக் குறைந்த அளவு (minimum-limit) ரூ.25 லட்சம். அதே போல், பட்டியல் வங்கிகள் ரிசர்வு வங்கியிடம் சமர்ப்பிக்கின்ற ஒவ்வோர் உண்டியலும் ரூ. 1 லட்சத்திற்குக் குறையாது இருக்க வேண்டும்.

இத் திட்டம், அமல்படுத்தப்பட்ட முதலாண்டில் ரூ.10 லட்சமும் அதற்கு மேலும் வைப்புத் தொகைகள் கொண்ட பட்டியல் வங்கிகளுக்கு மட்டுமே வசதியாக்கப்பட்டது. 1953 ஜூன் மாதத்தில் எல்லாப் பட்டியல் வங்கிகளின் வசதிக்கும் விரிவு படுத்தப்பட்டது. 1954 ஜூலையில் ரிசர்வு வங்கி முன்னளிப்பு எச்சவரம்பை ரூ.10 லட்சமாகக் குறைத்து, உண்டியலின் எச்ச அளவையும் ரூ 50,000 ஆகக் குறைத்தது. 1956 மார்ச்சு முதல் தேதி இத் திட்டம் திருத்தப்பட்டு, அத் தேதியிலிருந்து 3½ சதவீதம் வட்டி வீதத்திற்கு முன் பணங்கள் வழங்கப் பெற்றன. முத்திரை வரிச்சலுகை நீக்கப்பட்டது. 1956 நவம்பர் 21ஆம் தேதி வட்டி விகிதம் 3¾ சதவீதத்திற்கு உயர்த்தப் பட்டது. 1957 பிப்ரவரி முதல் தேதியிலிருந்து அரசாங்கம் மாமூல் தவணைக் கடன்களுக்குரிய முத்திரை வரியை உயர்த்தியதால் இவ் விகிதம் மேலும் ½ சதவீதம் உயர்ந்தது. 1957 மே 16ஆம் தேதியிலிருந்து வங்கி விகிதம் உயர்ந்த அதே சமயத்தில் முத்திரை வரிக் குறைக்கப்பட்டது. எனவே நிகர வட்டி வீதம் 4½ சதவீதம் ஆயிற்று.

பட்டியல் வங்கிகள் தாராளமாக ஏற்றுமதி வாணிபத்திலும் நிதியீடு ஏதுவாக இருக்கும் பொருட்டு, ஏற்றுமதி உண்டியல்களின் பேரிலும் முன்பணம் வழங்க ரிசர்வு வங்கி இத் திட்டத்தை மேலும் விரிவாக்கியுள்ளது. இந்திய அரசு நாட்டின் ஏற்றுமதி வர்த்தகத்தை ஊக்குவிப்பதற்காக எடுத்துக் கொள்ளும் பல்வேறு முயற்சிகளில் இதுவும் ஒன்றாகும். சிற்றளவு ஏற்றுமதி வர்த்தகர்களும் இதனால் பயனடையும் பொருட்டு, ஒரு வங்கி எச்சவரம்பாக ரூ 2 லட்சம் கடன் வழங்கலாமென்றும் கடனுறுதிச் சீட்டின் தொகை ரூ.20,000 இருக்கலாமென்றும் வசதி செய்யப்பட்டுள்ளது. ரிசர்வு வங்கி அதனிடம் ஒப்படைக்கப்படுகின்ற கடனுறுதிச் சீட்டுக்காகும் முத்திரை வரியில் பாதியைத் தானே ஏற்றுக் கொள்ளும். இதனால்,

இத் திட்டத்தின் கீழ் ஏனைய முன் பணங்களுக்கு 4·20 சதவீதமும், இங்குக் குறிப்பிட்ட சலுகைத் திட்டத்தின்படி வழங்கப்படும் முன் பணங்களுக்கு 4·10 சதவீதமும் வட்டி வீதம் அமையும்.

## இத் திட்டத்தின் முன்னேற்றம்

உண்டியல் சந்தைத் திட்டம் படிப்படியாக விரிவாக்கப்பட்டது. இவ் வசதியைப் பயன்படுத்திக் கொண்ட வங்கிகளின் எண்ணிக்கை இரட்டிப்பாக்கி 1958-ல் 51 ஆகி நின்றது. பணச் சந்தையில் ஓர் இறுக்கமான (நெருக்கடியான) பருவம் ஏற்பட்ட பொழுது, மிக அதிகமான வங்கிகள் இத் திட்டத்தில் பங்கு பெற்றன. எப் பருவத்திலும், எல்லா வங்கிகளும் இவ் வசதி வாய்ப்புக்காக விண்ணப்பித்த பொழுது அவையவை சமர்ப்பித்த வாடிக்கையாளர் உண்டியல்களின் தராதரங்களைப் பொறுத்து எச்ச வரம்புகளுக்குட் பட்டு முன் பணங்கள் வழங்கப்பட்டன. பெரும்பாலான வங்கிகள் ஏதாகிலும் ஒரு பருவத்தில் தங்களுக்குரிய குறைந்த, உச்ச எல்லை வாய்ப்புகளைப் பயன்படுத்திக் கொண்டன. இத் திட்டத்தின் கீழ், வங்கிகள் கடன் பெறுவது ஒவ்வொரு மும்முரப் பருவத்திலும் சிறிது சிறிதாக அதிகரித்துக் கொண்டே வந்தது. இத் தொகை 1952 மார்ச்சு மாதம் ரூ. 56·07 கோடியாக இருந்தது. 1957 மார்ச்சில் ரூ. 103·16 கோடியாக உயர்ந்தது. நாளுக்கு நாள், வங்கிகள் உண்டியல்களை வைத்துக் கடன் பெறுவதை அதிகம் விரும்பின. இதனால், உண்டியல் ஈட்டின் பேரில் வழங்கப் பெற்ற கடன் மட்டிலும், முன்பின் இல்லா உச்சநிலையாகிய ரூ 73 79 கோடியை எட்டியது. 1957 மே மாதம் வங்கி விகிதம் உயர்த்தப்பட்டதால் உண்டியல் ஈட்டின் பேரில் கடன் வாங்குவது அதிகச் செலவாகியும் கூட, இந்த வளர்ச்சிப்போக்குத் தடைபடவில்லை.

இத் திட்டத்தைப் பற்றிய எல்லா நுணுக்கங்களையும் புரிந்து கொள்ள வங்கிகளுக்குக் கொஞ்சம் காலம் பிடித்தது. வங்கிகள் 1952-ல் சிறிய தொகைக்கே கடன் வசதி பெற்றன. இத் திட்டத்தில் அப்போதைக்கப்போது பல்வேறு திருத்தங்கள் செய்யவே, இது மேலும் பிரபலம் அடைந்து, வங்கிகள் 1954 முதல் 1957 வரை அதிக தொகையைக் கடன்களாகப் பெற்றன. இதைக் கண்ட அதிகாரிகள், இத் திட்டம் அமோக வெற்றிப் பெற்று விட்டதாகக் கூறிக் கொண்டனர். ஆனால் 1958-ல் நெல், கோதுமை, சர்க்கரை, எண்ணெய் வித்துகள் முதலான பண்டங் களின் மேல் கடன் வழங்குவதை ரிசர்வு வங்கி கட்டுப்படுத்தியதும், இத் திட்டத்தின் கீழ்க்கடன் வாங்குவது 1958, 1959-ல் திடீரென்று குறைந்து விட்டது.

1960-ல் வங்கிகள், ரிசர்வு வங்கியிடமிருந்து கடன் பெறுவதற்குப் பங்களவு (quotas) நிருணயிக்கப்பட்டது. பங்களவுக்கு மிஞ்சிய தொகைகளின் மேல் தண்ட வட்டியும் (Penal Interest) வசூலிக்கப்பட்டது. தனிப்பட்ட வங்கிகளுக்கு இத் திட்டத்தின் கீழ்க் கடன் வழங்குதலும் நிறுத்தி வைக்கப்பட்டது. 1965 நவம்பர் 22 ஆம் தேதி ரிசர்வு வங்கி இத் திட்டத்தை மீண்டும் தொடங்கியது. அது தொடங்கியதன் நோக்கம், நாட்டின் மூன்று முக்கியமான துறைகளாகிய பாதுகாப்பு, ஏற்றுமதி, உணவு ஆகியவற்றிற்கு வங்கிக் கடன் வசதி கிடைக்க வேண்டுமென்பதுதான். தனது நீர்மைநிலையைக் (liquidity) கூடக் கருதாமல் ஒரு வங்கி இத் துறைகளுக்குக் கடன் வழங்கலாம். ரூபாய் ஏற்றுமதி உண்டியல் திட்டமும், இந்தியத் தொழில் வளர்ச்சி வங்கி மறு நிதியீட்டுத் திட்டமும் இத்துடன் தொடர்ந்து அமலில் இருக்கும்.

இத் திட்டம் பலவிதமாக விமர்சிக்கப்பட்டது. விமர்சகர்கள், இது சரியான உண்டியல் சந்தையின் வளர்ச்சிக்கு உகந்ததன்று என்றனர். இது, உண்மையான வணிக உண்டியல்களை அடிப்படையாகக் கொள்ளாமல், வங்கிகள், தங்கள் கடன்களையும், முன்னளிப்புக் கடன்களையும் மாமூல் தவணைக் கடன்களாக மாற்றிக் கொள்ளவே வசதி செய்கிறது. இத் திட்டத்தின் கீழ் உருவாகிற ஓர் உண்டியல், ஒரு செலாவணிப் பத்திரமாக மாற வழியில்லை. ரிசர்வு வங்கி அதனை மறு கழிவு செய்ய ஏற்றுக் கொள்ளாமல் அது பட்டியல் வங்கிகளுக்கு வழங்கிய கடன்களுக்கு ஈடாகவே அதனை ஏற்றுக் கொள்கிறது. இத் திட்டம் குறித்த பருவத்தில் வங்கிகளுக்குக் கடன் வழங்குவதற்கு விரிவாக்கப்பட்ட ஒன்றாகவே தோன்றுகிறது. அத்துடன் இத் திட்டம், நாட்டு வங்கியரைத் தொடுகின்ற முறையில் தீட்டப்படவில்லை. நாட்டு வங்கியர்தாம் பணச் சந்தையின் ஒழுங்கமைவற்ற பிரிவாக, நாட்டுப்புறங்களிலும், சிறு நகர்ப்புறங்களிலும் பெருவாரியான கடனை வழங்கியுள்ளனர். (1954) ஷராப் குழு, ரிசர்வு வங்கியுடன் நாட்டு வங்கியருக்கு ஒரு நேரடித் தொடர்பை உருவாக்குவதற்கு முன், நாட்டு வங்கியரின் மாமூல் தவணை உண்டியல்களைப் பட்டியல் வங்கிகளின் மூலமாகப் பெற்று ரிசர்வு வங்கி மறு தள்ளுபடி செய்யும் திட்டத்தை ஊக்குவிக்க வேண்டும் என்று பரிந்துரைத்தது. இப் பரிந்துரையின் பின்னரும் நாட்டு வங்கியரின் உண்டியல்கள் (Hundis) இத் திட்டத்திற்குள் சேர்க்கப்படவில்லை. நாட்டு வங்கியரை முழுமையாக ரிசர்வு வங்கியின் கட்டுப் பாட்டிற்கு உட்படுத்தாத வரையில் இத் திட்டம் அரைகுறை வெற்றியடைந்ததாகவே அமையும்.

சில விமர்சகர்கள், இத் திட்டம், பட்டியல் வங்கிகளுக்குப் பாடு மிகுந்ததும் செலவு மிகுந்ததுமாக அமைந்து விட்டதாகக் குறிப்பிட்

டுள்ளனர். இத் திட்டத்தில் பங்கு பெறும் வங்கிகள், தங்கள் கேட்புக் கடன்களை (Demand Pro-Notes) மாமூல் தவணை உண்டியல் யல்களாக (Usance Bill) மாற்றி இதைப் பற்றிய எல்லா விவரங் களையும் ரிசர்வு வங்கிக்குத் தெரிவிக்க வேண்டியுள்ளது. இது அசௌகரியமும் அதிகச் செலவும் உடையதாக இருக்கிறது. முதல் சில ஆண்டுகளில் வழங்கப்பட்ட வட்டிவீதச் சலுகையும், முத்திரை வரிச் சலுகையும் இந்த அசௌகரியங்களை ஈடுகட்ட முடியவில்லை. 1956 மார்ச்சு 1 ஆம் தேதி முதல் இந்தச் சலுகைகளிலும் பாதி நிறுத்தப்பட்டு, வங்கி வட்டி வீதமும் அதிகமானவுடன் இத் திட்டத்தின் கீழ்க் கடன் வாங்குவதென்பது வங்கிகளுக்குக் கட்டுப் படியாகாத ஒன்றாகி விட்டது.

இத் திட்டத்தின் கீழ், ரிசர்வு வங்கி, வங்கிகளுக்குக் கடன் வழங்கும் பொழுது ஈடுகாட்டப்படும் ஆவணங்களின் தன்மைகளை மட்டுமல்லாது வங்கிகளின் நடைமுறை ஒழுங்கையும் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்வதால் வங்கிகளுக்கு இது பாடு மிகுந்ததாகத்தான் முடிந்தது.

### 1970-ல் உருவாக்கப்பட்ட புதுத் திட்டம்

மேற்கூறிய காரணங்களால் மாற்று உண்டியல் வணிகத்தில் இன்னும் சில நெகிழ்வுக் கூறுகளைச் சேர்க்க நினைத்த ரிசர்வு வங்கி, 1970 ஆம் ஆண்டு பிப்ரவரி மாதத்தில் ஒரு குழுவை அமைத்தது. அக் குழு தனது அறிக்கையை ஜூன் மாதத்தில் சமர்ப்பித்தது. அவ் வறிக்கையின்படி, ரிசர்வு வங்கிச் சட்டம் 17 (2) (a) யின் கீழ், கீழ்க்கண்ட விதிமுறைகள் வகுக்கப்பட்டன. இவ் விதி முறைகளின் சிறப்புக்கூறு என்னவென்றால் வங்கிகளுக்கு, மாற்று உண்டியல்களை மறு தள்ளுபடி'செய்து கொள்ள வசதியளிப்பதேயாகும்.

1. மாற்று உண்டியல் சரக்கு விற்பனைக்காக வணிக அடிப் படையில் எழுதப் பெற்றதாய் இருக்க வேண்டும்.
2. சரக்குரிமை ஆவணங்கள் (Document of title to goods) மாற்று உண்டியலிலேயே தெளிவாகக் குறிக்கப் பெற்றிருக்க வேண்டும்.
3. மாற்று உண்டியலின் முழு ஆயுள் 120 நாள்களாகவும், அது ரிசர்வு வங்கியிடம் மறுகழிவுக்கு வரும் பொழுது இன்னும் அதன் தவணை முடிவுக்கு 90 நாள்களுக்குள் உடையதாகவும் இருக்க வேண்டும்.
4. மாற்று உண்டியலில் இரு நல்ல பொறுப்புறுதிக் கையொப்பங்கள் (Two good signatures) இருக்க வேண்டும்.

அவற்றில் ஒன்று பட்டியலில் சேர்ந்த வங்கியினுடைய தாகவும் (scheduled Bank) இருக்க வேண்டும்.

5. ஓர் உண்டியலின் தொகை குறைந்தது ரூ. 500 ஆகவும் ஒரு சமயத்தில் மறு தள்ளுபடிக்குச் சமர்ப்பிக்கப்படும் உண்டியல்களின் மொத்தத் தொகை ரூ. 50,000 ஆகவும் இருக்க வேண்டும். (இது பின்னர் மேலும் தளர்த்தப் பட்டது)

6. உண்டியலில் சலுகை நாள் ஏதும் இடம் பெற்றிருக்கக் கூடாது. அப்படிச் சலுகை நாள் தேவையென்றால் அந் நாள்கள் உண்டியலின் முதிர்வு இறுதி நாளுக்கு முன் கூட்டியே அமைய வேண்டும்.

மேற்கூறப்பட்ட விதிகளின்படி, ஒரு மாற்று உண்டியல், சரக்கு வாங்குபவர்மீது எழுதப்பெற்று, அவரால் ஏற்கப்பட்டு, அதன் மேல் உரிமைபெற்ற பட்டியல் வங்கியொன்று தவணை முதிர்வுக்கு மூன்று நாட்களுக்கு முன்னதாகப் பணம் செலுத்தப்படும் என்று உறுதியொப்பம் அளிக்கப்பெற்றதாக அமைகிறது; இவ்வகையில் உருவான மாற்று உண்டியல்களுக்கே ரிசர்வு வங்கி மறு தள்ளுபடி (Re-discount) வசதியளிக்கிறது. இவ்வகையில் அமையாத உண்டியல் களுக்கும், வேறு சிலவகை உண்டியல்களுக்கும் ரிசர்வு வங்கி மறு தள்ளுபடி வசதியளிப்பதில்லை. அதாவது, (1) வெற்றுநிலை மாற்று உண்டியல்கள் (Clean Bills of Exchange) (2) வாடகைக் கொள்முறை (Hire purchase Scheme) போன்ற திட்டங்களில் எழுதப்பெற்ற உண்டியல்கள் (3) அரசினர்க்கு விற்கப்பட்ட சரக்குகளின் பேரில் எழுதப்பெற்ற உண்டியல்கள் (4) ரிசர்வு வங்கி ஏற்றுக் கொள்ளாத சரக்குகளின் (un-approved commodities) விற்பனையை அடிப்படை யாகக் கொண்ட மாற்று உண்டியல்கள் ஆகிய இவற்றை ரிசர்வு வங்கி மறுகழிவுக்கு ஏற்றுக் கொள்வதில்லை.

### திட்டத்தின் நன்மைகள்

மேற்கண்ட விதிகளைச் செயல்படுத்துவதன் மூலம், பல தவறான, முறை கேடான நாணயமற்ற வணிக நடவடிக்கைகளுக்கு இட மளித்து வந்த சரக்கைப் பிணைகாட்டிக் கடன்பெறும் முறை நீங்கி முறையான, நாணயமாக வணிக நடவடிக்கையின் அடிப்படையில் உருவாகும் மாற்று உண்டியல்களைக் கொண்டு கடன் பெறும் முறை வளர்ந்து பரவ வாய்ப்பேற்படுகிறது. அத்துடன் வங்கிகளின் முக்கியத்துவமும், உயர்நிலையும் (அந்தஸ்தும்) வாணிபச் சூழலில் மேலும் உயர்வடைகிறது. வங்கிகளும், தங்களது தாற்காலிகத் தேவைகளுக்கு அழைப்புப் பணச் சந்தையைப் (Call Money Market)

பயன்படுத்திக் கொண்டு, வேறு வழியில்லை என்ற சமயங்களிலேயே கடைநிலை உதவுவோனுக (Lender of last-resort) ரிசர்வு வங்கியை அணுக வேண்டிய நிலை ஏற்படுகிறது. மேலும், வங்கிகளே, தமது மிகைப் பணத்தைக் கொண்டு உண்டியல்களைத் தள்ளுபடி செய்யவும். அல்லது தமக்குத் தேவையான சமயங்களில் மிகைப் பணம் கொண்டுள்ள பிற வங்கிகளை அணுகி உண்டியல்களை மறு கழிவு செய்து கொள்ளவும், எங்கும் முடியாத நிலையிலேயே ரிசர்வு வங்கியை அணுகும் பழக்கமும் உருவாக வாய்ப்பேற்படுகிறது.

தள்ளுபடி விகிதம் (Discount Rate) எப்பொழுதுமே கடன் விகிதத்தை விடக் குறைவாகத்தான் இருக்கும். இதனுல், விற்பனையாளருக்குச் செலவு குறைகிறது. எனவே, வணிகர்கள் தயங்காமல் பொருள்களைக் கடனில் விற்பனை செய்து மாற்று உண்டியலின் மூலம் தங்கள் வரவுகளைப் பெருக்கிக் கொள்ளும் வாய்ப்பு நாளடைவில் சாதாரணமாகிவிடும். இந் நிலையைத்தான் ரிசர்வு வங்கி எதிர் பார்க்கிறது. இதனுல் நாட்டின் தொழில், வாணிபம், பொருளாதாரத் துறைகளில் தடையின்றி விரைவான வளர்ச்சியைக் காண முடியும் என்று ரிசர்வு வங்கி நம்புகிறது.

மற்றும், வளர்ந்துவரும் பொருளாதாரத் தேவைகளுக்கு ஏற்ப, மறு தள்ளுபடி செய்யப் பெற்ற உண்டியல்களை அடிப்படையாகக் கொள்ளும் வாய்ப்பும், பணப் புழக்கத்தைக் கட்டுப்படுத்தப் பயன் படுத்தப் பெறும் கருவியான வங்கி விகிதத்தைக் (Bank Rate) திறனுடன் செயலாற்றும் வாய்ப்பும் இத் திட்டத்தின் மூலம் காலக் கட்டத்தில் ரிசர்வு வங்கிக்குக் கிடைக்கக் கூடிய ஆதாயங்களாகும்.

**உண்டியல் சந்தையின் எதிர்காலம்**

வங்கிமுறை நன்கு வளர்ந்த நாடுகளில் கூட வணிக உண்டியல்களின் எண்ணிக்கை அண்மைக் காலமாகக் குறைந்து வருகிறது. உண்டியல் சந்தையின் பிறப்பிடமாகிய இலண்டனில் கூட சில சாதகமற்ற சூழ்நிலைகளினுல் உண்டியல்களின் எண்ணிக்கை நாளுக்கு நாள் குறைந்து வருகிறது, மிகப் பரவலான ரொக்கக் கடன் (Cash Credit) வசதி, அதிகப் பற்று (Over draft) வசதி, தந்தி மூல மாற்றல் (Telegraphic transfers) வசதி, ஆகியன பெருகி விட்ட படியால் உண்டியல் நிதியீட்டுத் தொழில் (Bill Financing Trade) மந்தமாகி வருகிறது. இலண்டன் தள்ளுபடிச் சந்தை (London Discount Market) ஒரு காலத்தில் பெரும் உண்டியல் சந்தையாக இருந்தது. இன்று ஏறக்குறைய, கருவூல உண்டியல்களையும் (Treasury Bills) அரசு ஆவணங்களையுமே (Govt. Securities) தனது தொழில் ஆதாரமாகக் கொண்டுள்ளது.

இந்தியாவிலும் நல்ல உண்டியல் சந்தை வளர்ச்சிக்குச் சாதக மான சூழ்நிலைகள் இருப்பதாகக் கூற முடியாது. இங்கும் ரொக்கக் கடன்களும் (Cash Credit) அதிகப் பற்றுகளுமே (Over drafts)பெரிதும் வசதியானவையாகிக் கொண்டு வருகின்றன. நாட்டு வங்கியரின் உண்டிகளோ (Hundies) 'வணிக' உண்டியலா, 'நிதிய' உண்டியலா என்று நிர்ணயிப்பதே சிரமமான இயல்பை உடையன. நாட்டு வங்கியரும் ரிசர்வு வங்கியுடன் தொடர்பு வைத்துக் கொள்ள விருப்பமே இல்லாதவர்கள். இக் காரணத்தினால், அவ் வுண்டிகள் சந்தையில் தள்ளுபடி செய்யப்படுவதும் மிக அரிதாகவே உள்ளது. நாட்டுப் புறங்களில் வட்டித் தொழிலரும் நாட்டு வங்கியரும் பேரா திக்கம் செலுத்துவதாலும், அங்கங்கு வங்கி வசதியும் பண்டக வசதி யும் (Ware Housing facilities) இல்லாததாலும் வாணிக உண்டியல் கள் தோன்ற வசதியில்லை. அத்துடன் இந்திய விடுதலைக்குப் பின் நெடுங்காலம் வரையில் கூட நமது வெளிநாட்டு வாணிபத்தில் பெரும்பகுதியை நாணயமாற்று வங்கிகள் (Exchange Banks) செய்து வந்தன. அவை இந்திய வணிக உண்டியல்களை ஸ்டெர்லிங் மதிப்பில் வரையப் பெற்று அயல் நாட்டுச் சந்தைகளில் தள்ளுபடி செய்து கொண்டிருந்தன. கடந்த சில ஆண்டுகளாகத்தாம் நமது நாட்டுப் பெரிய வங்கிகள் (அதாவது பட்டியல் வங்கிகள்) அயல் நாட்டு வாணிபத்தில் ஈடுபட்டுள்ளன.

துறை வல்லார் (Experts) இந்தியாவிற்கு ஓர் உண்டியல் சந்தை தேவையென்று பரிந்துரைத்தபோது வணிக வங்கிகள் தற்பொழுது பெற்றிருக்கின்ற அளவுக்கு அரசு ஆவணங்களை (Govt. Securities) பெற்றிருக்கவில்லை; குறுங்கால அரசு ஆவணச் சந்தையும் இவ்வளவு வளர்ச்சி பெற்றிருக்கவில்லை. வணிக வங்கிகள் தற்பொழுது மிக அதிகமான அரசு ஆவணங்களைத் தம் வசம் வைத்திருப்பதால், தமக்குத் தேவை ஏற்படும்போது, அவற்றையே பிணையீடுகளாக (Collateral Securities) காட்டி, ரிசர்வு வங்கியிடமிருந்து முன்னளிப் புகளும் கடன்களும் பெற்றுக் கொள்ள முடியும். மேலும் வணிகத் தாளின் (Commercial Paper) சுயநீர்மை நிலைக் கொள்கை (Theory of Self-Liquidity) இடப் பெயர்வு கொள்கைக்கு (Theory of Shiftability) இடமளித்து அகன்றுவிட்டது. தற்போதைய நிலையில் மைய வங்கியிட மிருந்து வாங்கும் கடன்களுக்கு, அரசு ஆவணங்களையே பிணையீடு களாக (Collateral Securties) காட்டி, வங்கிகள் எச் சமயத்திலும் தங்கள் நீர்மை நிலையைக் காப்பாற்றிக் கொள்ள முடியும்.

எனவே, மேற்கூறிய காரணங்களால் உண்டியல் சந்தையின் அவசரத் தேவை முன்னால் இருந்ததைக் காட்டிலும் இப்பொழுது மிகக் குறைந்து விட்டது என்பதும், வணிக உண்டியல்கள் உருவா

வதற்கான சூழ்நிலைகளும் அவ்வளவாக அமையவில்லை யென்பதும் நன்கு தெளிவாகின்றன. என்றாலும், இந்தியாவிற்கு ஒரு நல்ல வளர்ச்சியுற்ற உண்டியல் சந்தை தேவையா என்றால் நிச்சயம் தேவை என்றுதான் கூற வேண்டும். காரணம், இந்தியாவின் பல்வேறு பெயர்களில் செயல்படும் நாட்டு வங்கியரும் வட்டித் தொழிலரும் தமது பாரம்பரியமான முறைகளிலேயே உண்டிகளை (Hundis) வரைந்து கொண்டும், சிற்றளவுத் தொழில்களைத் (Small Scale Industries) தொடங்கி நடத்துவோர், வேளாண்மைப் பொருள் வணிகர்கள் (Merchants in Agricultural Commodities) முதலியோருக்குத் தம் விருப்பம்போல் கடன்களை வழங்கித் தம் விருப்பம்போல் கடும் வட்டி வசூலித்துக் கொண்டும், சிறு நகர்ப்புறங்களிலும், நாட்டுப் புறங்களிலும் இன்னும் ஏகபோக ஆட்சி செலுத்திக் கொண்டுதாம் வருகின்றனர். அவர்களை எத்தனையோ விதங்களில் எத்தனையோ சட்டதிட்டங்களில் ரிசர்வு வங்கி கட்டுப்பாடுகளுக்குள் கொண்டு வர முயன்றும் இன்றும் முழு வெற்றி கண்டபாடில்லை. அவர்களுடைய அரண்களைத் தகர்க்க வேண்டுமென்றால் சிறு நகரங்களிலும் நகர்ப்புறங்களிலும் ஸ்டேட் வங்கியும், பட்டியல் வங்கிகளும் (Scheduled Banks) பிற சிறு வங்கிகளும் தங்கள் கிளைகளை அதிகமான அளவில் பரவலாகத் தோற்றுவித்து அங்கங்குத் தோன்றி வளரும் சிற்றளவுத் தொழில் நிறுவனங்களின் உற்பத்திப் பொருள்களின் விற்பனைக்கும், அந்தந்தப் பிரதேச வேளாண்மைப் பொருள்களின் விற்பனைக்கும், அந்தந்தப் பிரதேச வணிகர்களுக்குப் பேருதவி செய்வதற்காகவே இவ் வுண்டியல் சந்தை இன்னும் அதிகமாகவே ஊக்குவிக்கப்பட வேண்டும். இதனால் மற்றுமொரு பெரிய ஆதாயம் என்னவென்றால், பொது மக்களுக்கும் சிறிய, பெரிய வணிகர்களுக்கும் தற்கால வங்கி முறைகளில் (Modern Banking Systems) நல்ல பழக்கம் ஏற்படுவதோடு, மறைமுகப் பேரங்களும் வணிக நடவடிக்கைகளும் நாளடைவில் மறைந்து வெளிப்படையான நாணயத்தில் ஐயமேற்படாத வணிக மரபுகளும் பழக்கங்களும் (Conventions and habits) ஏற்படும் வாய்ப்புண்டு. அப்படி வளர்ந்த உண்டியல் சந்தைதான் ஒரு நாட்டுக் கடன் அமைப்புகளில் நெகிழ்வு நிலைக்கு உத்தரவாதமளிக்கிறது.

# 7. பணச் சந்தையின் பிரிவுகள்

இந்தியப் பணச் சந்தை இரு பிரிவுகளைக் கொண்டது. ஒன்று ஒழுங்கமைதி பெற்றது (organised). மற்றொன்று ஒழுங்கமைதி யற்றது (unorganised). ஒழுங்கமைதி பெற்ற பிரிவு மேலை நாடுகளின் பாணியில் நடத்தப் பெறுகிறது. கீழ்க்கண்டவை அதன் கூறுக ளாகும்.

(அ) இந்திய ரிசர்வு வங்கி: இதுவே இந்தியாவின் மைய வங்கி யாகவும், இந்தியப் பணச் சந்தையின் காப்பாளராகவும் திகழ்கிறது.

(ஆ) ஸ்டேட் வங்கியும் அதன் கிளைகளும் உள்ளிட்ட வணிக வங்கிகள்; அதாவது நாட்டுடைமையாக்கப்பட்ட பட்டியலில் சேர்ந்த 14 வங்கிகளும், பட்டியலில் சேர்ந்த பிற தனியார் வங்கிகளும்.

(இ) பட்டியலில் சேராத வணிக வங்கிகள்

(ஈ) செலாவணி மாற்று வங்கிகள் என அழைக்கப் பெறும் அயல் நாட்டு வங்கிகள். அவை (நேஷனல் அண்டு) கிரிண்ட்லேஸ் பாங்க் (National and Grindlays Bank), சார்ட்டர்ட் பாங்க் (Chartered Bank), பர்ஸ்ட் நேஷனல் சிடி பாங்க் (First National City Bank), பாங்க் ஆஃப் டோக்யோ முதலான இந்தியாவிற்கு வெளியே தலைமையகங்களைப் பெற்றிருக்கும் வங்கிகள்.

ஒழுங்கமைதி பெற்ற இப் பிரிவைமையப்பிரிவு (Central Part) என்றும், ஒழுங்கமைதி பெறாத பிரிவை அங்காடிப் பிரிவு (Bazaar Part) என்றும் கூறுகின்றனர்.

மாநில மற்றும் மத்தியக் கூட்டுறவு வங்கிகள், (State, Central Cooperative Banks), நகரக் கூட்டுறவு வங்கிகள் (Urban Cooperative Banks), தொழிற் கூட்டுறவு வங்கிகள் (Industiral Cooperative Banks)

கூட்டுறவு நாணயச் சங்கங்கள் (Cooperative Credit Societies) நிலவள வங்கிகள் (Land Development Banks) அஞ்சல்துறைச் சேமிப்பு வங்கிகள் ((Postal Savings Banks).

அஞ்சல்துறைச் சேமிப்பு வங்கிகளைத் தவிர மற்றவை அவையவை இயங்கும் மாநிலங்களின் சட்ட விதிகளின் கீழ்ப் பதிவு செய்யப் பெற்றுச் செயல்படுகின்றன. இவை ஒழுங்கமைவுற்ற சந்தைக்கும் ஒழுங்கமைவற்ற சந்தைக்கும் இடையே ஒருவித இடைப்பட்ட நிலையை (Middle Part) வகிக்கின்றன என்று சில நூலாசிரியர்கள் கருத்துத் தெரிவிக்கின்றனர்.

ஒழுங்கமைவற்ற பிரிவு, நாட்டு வங்கியர் செயல்படுவதாகும். இந்த நாட்டு வங்கியர் எனப்படுவோர் வட்டிக்கடைக்காரர்கள் (Money Lenders) ஷராப்புகள் (shroffs), சேட்டுகள் (Seths), சவுக்கார்கள் (Sowcars) மஹாஜனங்கள் (Mahajans), பனியாக்கள் (Banias) கத்ரிகள் (Katris) ஆகியோராவர். இவர்களைத் தவிர வேறு சில நிதி நிறுவனங்களாகிய சீட்டுக் கம்பெனிகள் (Chit funds) நிதிகள் (Nidhis) கடன் அலுவலகங்கள் (Loan Offices) முதலியோராவர். இவர்கள் இந்தியப் பொருளாதாரத்தில் ஒரு முக்கியமான இடத்தை வகிக்கிறுர்கள். நாட்டுப்புறக் கடன்களில் 70 சதவீதம் இவர்கள் ஆதிக்கத்தின் கீழ் உள்ளன.

எனவே இந்தியப் பணச் சந்தையென்பது ஏறக்குறைய வேறு வேறு இயல்புகளையுடைய இரண்டு பிரிகளையுடையதாக இருக் கின்றது. ஒழுங்கமைதி பெற்ற பகுதி நவீன வணிக வங்கித் துறை யைச் சார்ந்து இயல்கிறது. ஒழுங்கமைதியற்றது பல நூற்றுண்டு களாகப் பாரம்பரியமான முறைகளில் நடந்து வரும் நாட்டு வங்கி களைச் சார்ந்து இயல்கிறது.

இந்தியப் பணச் சந்தையின் இரண்டாவது தனித்தன்மை என்ன வென்ருல் ஒழுங்கிணைப்பற்ற அளவிறந்த நாட்டு வங்கிகள். சிற்றளவுக் கூட்டுப் பங்கு வங்கிகள், கூட்டுறவு வங்கிகள் ஆகியவற்றை அடி நிலையிலும், நன்கு ஒழுங்கு பெற்ற நாட்டுடைமையான வணிக வங்கிகள், பட்டியலில் சேர்ந்த (Scheduled) தனியார் வங்கிகள், அயல்நாட்டு வங்கிகள் ஆகியவற்றை இடைநிலையிலும், ரிசர்வு வங்கியை எல்லாவற்றிற்கும் சிகரமாகவும் கொண்டு அமைந்திருப்ப தாகும்.

மேற்குறிப்பிட்ட அமைப்பில் நாட்டுடைமையான வங்கிகள், அவற்றின் சாதாரண வணிக நடவடிக்கைகளுடன் கூட்டுறவு நிலையங்கள், வேளாண்மை, சிறு தொழில்கள் ஏற்றுமதி ஆகியவற்

றிற்குக் கடன் வழங்கும் பொறுப்பையும் ஏற்கின்றன. தனியார் கூட்டுப் பங்கு வங்கிகள், சாதாரணமாக, வணிக வங்கித் தொழிலையே செய்கின்றன. அயல்நாட்டு வங்கிகள், இந்திய வெளிநாட்டு வாணிபத்திற்கு நிதியுதவுதலை முழுவதாகத் தாமே பெற்றிருந்த காலம் ஒன்று உண்டு. தற்போது ஸ்டேட் வங்கியும் நாட்டுடமை யான பிறவங்கிகளும் அயல்நாட்டு வாணிபத்திற்கு நிதியுதவி செய் கின்றன. அத்துடன் சாதாரண வங்கித் தொழிலையும் உள்நாட்டுத் தொழில்களுக்கு நிதியுதவுதலையும் கூடச் செய்து வருகின்றன. கூட்டுறவு வங்கிகளும், நிலவள வங்கிகளும் முக்கியமாக நாட்டுப் புறத்தில் வங்கித் தொழில் செய்கின்றன. ஆனால், நாட்டு வங்கியில், எந்த விதமான குறிப்பிட்ட வங்கி வணிகத்தையும் செய்வதில்லை. அவர்கள் தங்கள் விருப்பப்படி தங்கள் தொழிலை நடத்துகிறார்கள். மிக அதிகமான வட்டி விகிதம் வசூலிக்கிறார்கள்; ரிசர்வு வங்கியின் நேரடிக் கட்டுப்பாட்டுக்குள் வரப் பெரிதும் தயங்குகிறார்கள். அவர்கள் பிரச்சினை, ரிசர்வு வங்கிக்கு ஓயாத தலைவலியாக இருக்கிறது.

1963ஆம் ஆண்டு வங்கிச் சட்டத்தின் உதிரி ஷரத்துகளின் படி (Banking Laws-Miscellanious Provisions Act - 1963) வங்கிகளும் ஏனைய கடன் வழங்கு நிறுவனங்களும், 1964ஆம் ஆண்டு ஜூன்மாத முதல் அவரவர்கள் பொதுமக்களிடமிருந்து ஏற்றுக் கொள்ளும் வைப்புத் தொகைகளைக் குறித்த கணக்கை ஒழுங்காகச் சமர்ப்பிக்க வேண்டும். ஆனால் இந் நாட்டு வங்கியராகிய வட்டித் தொழிலர் சரியாகக் கணக்குக் காட்டுவதேயில்லை. இதனால் நாட்டில் மொத்த மாகக் கடன் கட்டுப்பாட்டைச் செல்படுத்துவது மிக மிகச் சிரமப் படுகிறது. இந்த இரு பிரிவுகளையும் (ஒழுங்கமைவுற்ற, ஒழுங்கமை வற்ற பணச் சந்தைகள்) ஒருங்கிணைப்பது இந்தியாவில் பழுதற்ற பணக் கொள்கை உருவாகுவதற்கு ஒரு பெரிய முக்கியத்துவம் வாய்ந்ததாக இருக்கிறது

இவ்விரு பிரிவுகளிலும், பல வங்கிகள், அரசுப் போன்மைக் கழகங்கள் (Quasi Government bodies), தனியார் முதலீட்டு நிறுவனங்கள், மற்றும் இந்திய ஆயுள் காப்பீட்டுக் கூட்டுரு (Life Insurance Corporation of India) போன்றவைகளும் பணச் சந்தையில் கடன் வழங்குவோராகப் பங்காற்றியும் கூட, நாட்டின் கடன் தேவையை முழுவதாகப் பூர்த்தி செய்ய முடியவில்லை. இந்தியாவில், சராசரி 40,000 மக்களுக்கு ஒரு வங்கி செயல்படுகிறது. ஆனால் இங்கிலாந்தில் சராசரி 4800 பேருக்கு ஒரு வங்கி செயல்படுகிறது. இந்தியாவின் தனிமனித வைப்புத் தொகையும் (ரூ. 60) மிக மிகக் குறைவானது.

இந்தியாவில் வங்கி நடவடிக்கைகள் பெரும்பாலும் நகரங்களுக்குள்ளேயும், மாநகரங்களுக்குள்ளேயுமே அடங்கியிருந்தன. இதனால், நாட்டுப்புற மக்களுக்கு வங்கி வாய்ப்புகளின் பயன்களை கிடைக்காமல் இருந்தது. ஸ்டேட் பாங்க் ஆஃப் இந்தியாவும் மற்ற வங்கிகளும் நாட்டுப்புறங்களில் தங்கள் கிளைகளைத் தொடங்க அண்மைக் காலமாக எத்தனையோ முயற்சிகள் எடுத்துக் கொண்டுள்ளன. ஆனால் இதுவரை அவை எல்லைப் புறங்களைத்தாம் கைபற்றியுள்ளன; இன்னும் கிராமங்களுக்குள் ஊடுருவ முடியவில்லை.

இந்தியப் பணச் சந்தையின் இவ் விரு பிரிவுகளில் நிலவும் வட்டி விகிதம் எக் காலத்திலும் ஒரே விதமாக இருந்ததில்லை.

நல்ல உண்டியல் சந்தையொன்று இருந்ததென்றால், அது ஒழுங்கான பணச் சந்தைக்கு ஓர் அறிகுறியாகும். இந்தியாவில் அப்படியோர் உண்டியல் சந்தை இல்லை. ரிசர்வு வங்கி, ஓர் உண்டியல் சந்தையை உருவாக்க முயன்றது. ஆனால் இம் முயற்சியில் அதற்குப் பாதி வெற்றிதான் கிட்டியது. காரணம், ஒழுங்கமைவற்ற பிரிவின் ஒத்துழையாமைப் போக்குதான்.

இந்தியப் பணச் சந்தையின் பிரிவுகள் நல்ல ஒழுங்கு பட்டமையப் பணச் சந்தை யொன்றை உருவாக்குவதற்கு ஒருங்கிணைந்து செயல்பட இயலாதவையாக உள்ளன. பம்பாய், கல்கத்தா போன்ற நகரங்களில்தாம் ஓரளவு மையநிலையை உருவாக்க முடிந்தது. இரு பிரிவுகளாய்ச் செயல்படுவதோடு மட்டுமல்லாது, ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்துக்குப் பணப் போக்குவரத்திலும் கூடப் பெரிய தடையாகவும் இருக்கிறது. நாட்டின் பல்வேறு பாகங்களிலும் பல்வேறு வட்டி வீதங்கள் நிலவுவதற்கு இதுவும் ஒரு காரணமாகும்.

இந்தியப் பணச் சந்தையில் உண்டியல் புழக்கம் சரியானபடி இல்லாத காரணத்தால் வணிக வங்கிகளிடம் மறுதள்ளுபடி செய்வதற்கேதுவான குறுங்காலச் சொத்துகள் அதிகமாக இல்லை. இதனால் ரிசர்வு வங்கியிடம் மறுதள்ளுபடி செய்து கொள்வதற்கான உண்டியல்களை உருவாக்கவும் வணிக வங்கிகள் ஆற்றலற்றவையாக உள்ளன.

**பணச் சந்தையில் பங்கு பெறும் நிறுவனங்கள்**

1. ரிசர்வு வங்கி (Reserve Bank of India)

இது இந்தியப் பணச் சந்தையின் காப்பாளராகவும், இந்திய வங்கிமுறைகளுக்கெல்லாம் ஆதார மையமாகவும் திகழ்கிறது. இது

நாட்டின் நாணயச் செலாவணியையும் கடனளவையும் கட்டுப் படுத்துகிறது. இதுவே நிதிவிஷயங்களில் அரசுக்கு ஆலோசகராக இருக்கிறது. இந்திய ரூபாய் மதிப்பை வெளிநாடுகளில் குறையாமல் காப்பாற்றி வருவதும், நாட்டு வளர்ச்சிக்குரிய பிற நடவடிக்கை களின் பொறுப்பை ஆற்றி வருவதும் இதுவே.

## 2. ஸ்டேட் வங்கி (State Bank of India)

இது நாட்டின் மிகப் பெரிய வணிக வங்கியாகச் செயல்படுகிறது. வணிகம், தொழில் முதலியவற்றிற்குக் கடன் வழங்குகிறது. இவற்றுடன், நாட்டுப்புறக் கடன் திட்டத்திற்கு இதுவே சிகர நிலைய மாகத் திகழ்கிறது. வெளிநாட்டு வாணிபத்திற்கும் ஓரளவு தொண்டாற்றுகிறது. ரிசர்வு வங்கியின் கிளைகள் இல்லாத இடங் களில், இதுவே அதற்கு முகவராகச் (Agent) செயல்படுகிறது.

## 3. வணிக வங்கிகள் (Commercial Banks)

இவை பெரும்பாலும், குறுங்கால வைப்புத் தொகைகளைப் பெற்று, அவற்றைக் குறுங்காலக் கடன்களாகவும், முன்பணங்களா கவும், முதலீடு செய்கின்றன. இவற்றின் இதர வேலைகள் உண்டியல் களைத் தள்ளுபடி செய்வது, காசோலைகளை வசூலிப்பது, பங்கு களையும் பங்குத் தொகுப்புகளையும் வாங்குவது, விற்பது, அந்நிய நாணயச் செலாவணிக்கு உதவுவது, பற்றுக் கடிதகங்கள் வழங்கு வது, விலைமதிப்புள்ள பொருள்களைப் பாதுகாப்புப் பெட்டகங் களில் (safety locker) வைத்துக் காப்பாற்றுவது, நிறைவேற்றுள ராகவும் (Executors), காப்பாளராகவும் (Trustees) செயல்படுவது முதலியவை யாகும். இவற்றின் செயல் முறைகளை வேளாண்மை, சிறு தொழில் வளர்ச்சி, வெளிநாட்டு வாணிபம் ஆகியவற்றிற்கு உதவும்படியாகத் திருத்தியமைக்க வேண்டி, 14 பெரும் வணிக வங்கிகள் ஜுலை 19, 1969 அன்று நாட்டுடைமை யாக்கப்பட்டன.

## 4. நாணயமாற்று வங்கிகள் (Exchange Banks)

வணிக வங்கிகளைப் போலவே இதையும், வைப்புத் தொகை களைப் பெற்று, கடன்களும் முன்னளிப்புகளும் அளிக்கின்றன. ஆனால் இவற்றின் சிறப்புக்கூறு என்னவென்றால், இவையெல்லாமே வெளிநாட்டு வங்கிகளாக ஒரு காலத்தில் இருந்தன. ஆனால் நாடு விடுதலை அடைந்த பிறகு வெளிநாட்டு வங்கிகளின் ஆதிக்கம் தளர்ந்து ஏற்றுமதி இறக்குமதி வாணிபத்திற்கு நிதி வழங்கும் துறை யில் இந்திய வங்கிகளும் பெரும் பங்கு எடுத்துக் கொண்டு வருகின்றன.

5. கூட்டுறவு வங்கிகள் (Cooperative Banks)

இவைகள் வைப்புத் தொகைகளைப் பெற்று விவசாயிகளுக்கும், தொழிலாளிகளுக்கும் உற்பத்தி பெருக்க நோக்கோடு, குறைந்த வட்டி வீதத்தில் கடன்களும் முன்னளிப்புகளும் வழங்குகின்றன. இவற்றினுடைய முக்கியமான குறிக்கோள் ஏழை உழவர்களையும், தொழிலாளர்களையும் அவர்களுடைய குருதியை உறிஞ்சிக் குடிக்கும் வட்டித் தொழிலரின் பிடியிலிருந்து விடுவித்து அவர்களது துன்பத்தைப் போக்கி நல்வாழ்வளிப்பதே யாகும்.

6. நிலவள வங்கிகள் (Land Development Banks)

இவை நில அடமானத்தின் விவசாயிகளுக்கு நெடுங்காலக் கடன்கள் வழங்குகின்றன. இதன் நோக்கம் என்னவென்றால் விவசாயிகளை உள்ளூர் வட்டிக்கடைக்காரர்களிடம் பட்ட கடன்களிலிருந்து விடுவிக்கவும், ஏற்கனவே இருக்கின்ற நிலங்களைச் சீர் திருத்தவும், புது நிலங்கள் வாங்கவும் தேவையான நிதியுதவி செய்வதே யாகும். எனவே, இவ் வங்கிகள், கடனில் பிறந்து, கடனில் வாழ்ந்து கடனிலேயே மடியும் ஏழை உழவர்களின் நிலையை உயர்த்துவதற்கு முயன்று வருகிறது.

7. நாணயச் சங்கங்கள் (Credit Societies)

இவைகள் கிராம மக்களும், சிறு நகர மக்களும் அவ்வப்போது எளிதில் உதவி பெறுவதற்காக நிறுவப் பட்ட வங்கிகளாகும். இவை சாதாரண வங்கி வேலைகளைச் செய்கின்றன. ஒரு சமயம், இவை குடிசைத் தொழில், சிறு தொழில் வளர்ச்சிக்குக் கணிசமான உதவி செய்தன. மேற்கு வங்காளம், அஸ்ஸாம் மாநிலங்களில் தேயிலைத் தோட்டத் தொழில்கள், இக் கடன் நிறுவனங்களுக்குப் பெரிதும் கடமைப்பட்டனவாகும். ஆனால் அவை குறுங்கால வைப்புத் தொகைகளில் நெடுங்கால முதலீடு செய்தமையாலும், நிலைச் சொத்துகளில் (Immovable properties) அதிகமான நிதியைத் தேக்கி விட்டமையாலும், சில சரியாக நிருவகிக்கப்படாமையாலும் இக் கடன்கள் யாவும் கலைப்புக் (liquidation)குள்ளாயின.

8. நாட்டு வங்கியர் (Indigenous Bankers)

இவர்கள் தங்கள் விருப்பப்படி விதிகளை அமைத்துக் கொண்டு பரம்பரையாக வங்கித் தொழில் செய்பவராவார். இவர்கள் மூவகையினர்.

(அ) முறையாக வங்கித் தொழில் செய்பவர்.

(ஆ) தங்கள் முதன்மையான தொழிலாக வணிகத்தை வைத்துக் கொண்டு, அதில் கிட்டும் மிகைப் பணத்தைக் கொண்டு, வங்கித் தொழில் செய்பவர்.

(இ) வணிகம், வங்கித் தொழில் இரண்டையுமே முதன்மை யாகச் செய்பவர். இவர்கள் இரண்டிலும் எதை முதன்மை யாகக் கருதிச் செய்கிறார்கள் என்று அவ்வளவு எளிதாகக் கூறிவிட முடியாது. இவ் வங்கியர், வட்டித் தொழிலர், சவுக்கார், ஷராப்புகள், சேட்டுகள், நிதிகள், நாட்டுக் கோட்டைச் செட்டியார்கள், கத்ரிகள் என்று ஒவ்வொரு பிரதேசத்திலும் ஒவ்வொரு விதமாக அழைக்கப் பெறுகிறார்கள். இவர்களது முக்கியமான வேலை தங்க நகைகளையும், அரசாங்கப் பத்திரங்களையும் ஈடாகப் பெற்றுக் கொண்டு கடன் வழங்குவதாகும். விவசாயப் பயிர்களின் பேரில் உண்டியல்கள் வரைந்து அவற்றிற்கு நிதி உதவி செய்வதும், அவ் வுண்டியல்களைத் தள்ளுபடி செய்வதும் இவர்கள் செய்யும் பிற செயல்களாகும்.

இவர்கள் நடத்தும் தொழிலுக்குத் தேவையான மூலதனத்தை இவர்களே பெரும்பாலும் தேடிக் கொள்கிறார்கள். கணிசமான அளவில் வைப்புத் தொகைகளை மக்களிடமிருந்து வணிக வங்கிகள் போல் பெற்றுக்கொள்ளவில்லை என்றாலும், ஓரளவு வைப்புத் தொகைகள் இவர்களை நாடி வருகின்றன. தேவைப்பட்டவர் களுக்கு இவர்கள் கடன் வழங்கும் முறை எவ்வித சிக்கலுமின்றி மிக எளிதாக இருந்தாலும் அவர்கள் வசூலிக்கும் வட்டி கடுமை யானது. வணிக வங்கி முறை (Banking system) நாட்டில் பரவலாகக் காணப்படாததால் நிதித் தேவைப்படுவோர் விவசாயத்தில் ஈடுபட்டிருந்தாலும், தொழிலில் ஈடுபட்டிருந்தாலும் அல்லது மற்றத் துறைகளில் பணியாற்றினாலும் இவர்களைச் சார்ந்து இருக்க நேரிட்டது. எந் நேரத்திலும் இவர்களை அணுகிக் கடன் பெறலாம். எவ்வித ஈடுமின்றிக் கடன் கொடுக்க நாட்டு வங்கியர்கள் முன் வந்தாலும் இவர்கள் செய்யும் தொழிலில் கடன் பெறுவோருக்குப் பாதகமாக இருக்கும் சில பேரங்களைக் காணலாம்.

நாட்டு வங்கியர்களைத் தவிர வட்டிக்குக் கடன் கொடுக்கும் பணியினைத் தொழிலாகக் கொண்டு வருவாய் ஈட்டும் ஒரு வகை வட்டிக்கடைக்காரர்களும் (Private Money Lenders) இருக்கிறார்கள். இவர்களுடைய பரம்பரைத் தொழில் வட்டித்தொழில் அன்று. இவர்களுக்குத் தேவைப்படும் முதலை இவர்களே ஏற்பாடு செய்து

கொள்கிருர்கள். நகை, வெள்ளிப் பாத்திரங்கள் மற்றும் உயர்ந்த மதிப்புள்ள பொருள்களின் ஈட்டின் பேரில் கடும் வட்டிக்குக் குறுகிய காலத்திற்குக் கடன் அளிக்கிருர்கள். பொதுமக்களிடமிருந்து பணத்தை வைப்பாகப் பெறுவதுமில்லே. இவர்கள் தொழிலில் காசோலேயைப் பயன்படுத்த வேண்டிய அவசியமும் இல்லே. இவர்கள் தொழில் நடத்த அப்போதைக்கப்போது கூடுதலான பண வசதி பெற நகை ஈட்டின் பேரில் வணிக வங்கிகளிடமிருந்து கடன் பெறுவதும் உண்டு.

ஐந்து இலட்சத்திற்கு மேலான சிற்றூர்கள் (Villages) கொண்ட இந்தியாவில் விளேபொருள்களேக் கிராமத்திலிருந்து அருகாமையி லிருக்கும் நகரத்திற்கு எடுத்துச் சென்று விற்பனே செய்து ரொக்கம் பெறப்போக்குவரத்துவசதியும், மற்றவசதிகளும் தேவையாகின்றன. இதற்கு நிதி தேவைப்படுகிறது. இதே போல் ஒவ்வொரு நேரத்திலும் வேளாண்மை, கிராமத் தொழில் முதலானவைகளில் ஈடுபட் டிருக்கும் பல இலட்கக் கணக்கான மக்களுக்குக் கோடிக் கணக்கில் பணம் தேவைப்படுகிறது. அகில இந்திய கிராமப்புற நாணயக் கடன் ஆய்வுக்குழு (All India Rural Credit Survey Committee) 1952-ல் விவசாயிகளின் கடன் தேவை ஆண்டு ஒன்றுக்கு 800 கோடி ரூபாய் என்று கணக்கிட்டது. ஆனுல் கடந்த 23, 24 ஆண்டுகளாக அவர்களின் நிதி தேவை ஆண்டொன்றுக்கு 2,200 கோடி ரூபாய்க்கு மேல் இருக்கலாம் என்று கூறப்படுகிறது. இந்த அளவு கடன் வசதி செய்து கொடுக்கக் கிராமப் புறங்களில் கூட்டுறவு முறையில் நாணய வங்கிகள் இயங்கினுல் கூட அவைகளின் செல்வ வளம் (Resources) மொத்தத் தேவைகளில் 10 சதவீதம் கூட நிறைவு செய்ய முடியாத வகையில் உள்ளது.

1961 ஆம் ஆண்டு ரிசர்வு வங்கியினுல் நியமிக்கப்பட்ட அகில இந்திய கிராமீயக் கடன் மற்றும் முதலீடு ஆய்வுக் குழுவினுடைய (All India Rural Debt and Investment Survey) அறிக்கையின்படி விவசாயிகளின் கடன் தேவைகளில் கூட்டுறவு அமைப்புகளும் அரசாங்கமும் 15·4 சதவீதம் அளித்தன. வட்டிக்கடை வைத்திருப் போர் மற்றும் நாட்டு வங்கியர்கள் விவசாயிகளின் மொத்தக் கடன் தேவைகளில் 62 சதவீதம் வரை அளித்து வருகிருர்கள். இவற்றில் வணிக வங்கியின் பங்கு 4 சதவீதமாக இருந்தது.

நாட்டுப் புறங்களில் உள்ள விவசாயிகள் பரம்பரை வட்டித் தொழிலர்களிடம் அதிகமாகக் கடன்பட்டு அவர்களுடைய ஆதிக்கத்தின் கீழ் அவதி யுறுகின்றனர். நாட்டு வங்கியர், வட்டி தொழிலர் இவர்களின் ஆதிக்கத்தை முறியடித்து விவசாயிகளே வறுமைப்பிடியிலிருந்து விடுவிப்பதற்கு இந்திய அரசு தீவிரமாக

முயன்று வருகிறது. அதற்கு முதல் முயற்சியாகக் கூட்டுறவு நாணயச் சங்கங்களை ஒவ்வொரு சிற்றூரிலும் தொடங்கி எளிய முறையிலும், குறைந்த வட்டி வீதத்திலும் விவசாயிகளுக்குக் கடன்கள் வழங்க ஏற்பாடு செய்கிறது. மேலும் அங்கங்கே வணிக வங்கிகளின் கிளைகளைத் தொடங்கி விவசாயிகளுக்கு நிதி வசதி வாய்ப்பைப் பெருக்கி வருகிறது. விவசாயத் திட்டங்களுக்குக் கூட்டுறவுத் துறையின் மூலம் வழங்கப்படும் குறுங்கால, நெடுங்காலக் கடன்களைப் பற்றி மற்றோர் அதிகாரத்தில் காண்போம்.

## 9. சீட்டுக் கம்பெனிகள் (Chit Funds)

வணிக வங்கிகள் முழுவதாகப் பொதுமக்களின் கடன் தேவையை நிறைவு செய்ய முடியவில்லை யாகையால், சீட்டு நிறுவனங்கள் (Chit Funds), நிதி நிறுவனங்கள் (Finance Companies) போன்ற நிதி இடை நிலையர்களை (Financial Intermediaries) அணுகுகின்றனர். ஓரளவு பயனையும் அடைகிறார்கள். இத் துறையில் பல பேர் போலிப் பெயர்களை அங்கத்தினர்களாகக் காட்டுவது, பொய்யான வாக்குறுதிகளைக் கூறி ஆதரவு தேடுவது, அனுமதியற்ற சீட்டுக் குலுக்கல்களை நடத்துவது போன்ற முறைகேடான நடவடிக்கைகளில் ஈடுபடுகின்றனர். இது முற்றிலும் விரும்பத் தகாத சமூக விரோதப் போக்காகும். எனவே, இந் நிறுவனங்களைச் சட்டப் பூர்வமான கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வரவேண்டியது மிகவும் அவசியமாகிறது. எல்லா மாநிலங்களுக்கும் பொதுவான விதிகளைக் கொண்ட 'அகில இந்தியச் சீட்டு நிதி நிறுவனங்கள் கட்டுப் பாட்டுச் சட்டம்' என்ற ஒன்றை நிறைவேற்றலாம். இச் சட்டம் அகில இந்தியச் சட்டமாக இல்லை யென்றால் ஒரு மாநிலத்தைச் சேர்ந்த ஒருவர், கட்டுப்பாடு விதிக்கப்படாத மாநிலத்தில் சென்று இத் தொழிலைச் செய்யலாம். எனவே இதற்குச் சரியான ஒரே வழி என்னவென்றால், அரசியல் சட்டத்தில் இவ்வகை நிறுவனங்களின் நடவடிக்கைகளைக் குறித்த விதிகளை, மைய அரசுப் பகுதிக்கு (Union list) மாற்றி, மாநில அரசுக் கண்காணிப்புக்கும் (Concurrent list) வழிவகுப்பதேயாகும். இந் நிறுவனங்களின் நடவடிக்கைகள், ரிசர்வு வங்கிக் கட்டுப்பாட்டுக்குள் வராதவரையில் வலிவற்ற இரு முனைக்கட்டுப்பாடும், பணக்கொள்கையில் ஓர் உறுதியற்ற நிலையும் இருந்து கொண்டேதாம் இருக்கும். மத்திய அரசு, தன்னால் ஓர் அகில இந்தியச் சட்டத்தை நிறைமேற்ற முடியாத பட்சத்தில் எல்லா மாநில அரசுகளுக்கும் ஒரே விதமான விதிமுறைகளை வகுத்துக் கொடுத்துச் சட்டமாக்கச் செய்யலாம். அவ் விதி முறைகளைக் கொண்ட மாதிரிச் சட்டம் இந் நிறுவனங்கள் இடர்த் துணிவுச் சொத்துகளின் மேல் (risk assets) முதலீடு செய்வதைக் கட்டுப் படுத்தவும் தொடக்கருக்கும் அவரது உறவினருக்கும் கடன் வழங்கு

வதைத் தடுக்கவும் வகை செய்ய வேண்டும். பொது நிறுவனங்களும் (Public Companies), இந்தியக் கம்பெனிச் சட்டத்தின் கீழ்ப் பதிவு செய்யப் பெற்ற நிறுவனங்களுமே பெரிய அளவில் சீட்டுகள் நடத்த அனுமதிக்கப்படவேண்டும்.

இச் சீட்டுக் கம்பெனிகள், நடுத்தர வர்க்கத்தினர்க்கு மட்டுமே, நுகர் பொருள் (Consumer goods) வாங்கலில் உதவி செய்வதாகவும், வணிகர்களுக்குத் தங்கள் கள்ளப் பணத்தைக் (Black money) கணக்கில் காட்டிக் கொள்ளப் பேருதவி செய்வதாகவும், உண்மையாக நிதிதேவையுள்ள ஏழைகளுக்கு இவை சரியாக உதவுவதில்லை என்றும் குறை கூறப்படுகிறது.

மேற்கூறிய நிறுவனங்களைத் தவிர நிதிகளும் (Nidhis), தவணை முறை விற்பனை நிறுவனங்களும் நீண்டகால நுகர்பொருள்கள் விற்பனைத் துறையில் உண்மையிலேயே ஓரளவு உதவி செய்துள்ளன.

வங்கியரற்ற ஆனால் வங்கி நடவடிக்கையில் ஈடுபட்டிருக்கும் நிறுவனங்களை நெறிப்படுத்துவதற்கு மத்திய அரசு வல்லுநர் குழு (Expert Committee) ஒன்றை நியமித்திருக்கிறது. அதன் அறிக்கை அரசுக்குக் கிடைத்த பிறகு அதன் பரிந்துரைகளை அரசு ஆராய்ந்து தக்க நடவடிக்கைகள் எடுக்கும் என்று மத்திய நிதியமைச்சர் கூறியிருக்கிறார். நிறுவனங்கள் பல மக்களிடமிருந்து வைப்புத் தொகைகளைத் திரட்டும் போக்கை நிறுத்த வேண்டும் என்று அரசு கருதுவதாகக் கூறியிருக்கிறார். அவ்வாறு செய்யப்பட்டால் ரிசர்வு வங்கியின் கடன் கட்டுப்பாடு செய்யும் திட்டம் நல்ல முறையில் செயல்பட முடியும்.

# 8. இந்திய ரிசர்வு வங்கி

ஒரு நாட்டை முன்னேற்றப் பாதையில் அழைத்துச் செல்ல ஒரு நல்ல தலைவன் தேவை. அதுபோல, ஒரு நாட்டின் பணச் சந்தையை வளர்க்கவும், காப்பாற்றவும் ஒரு மைய வங்கி தேவையாகும். பேராசிரியர் எஸ். என். சென் அவர்கள், 'வளர்ச்சியுறுப் பணச் சந்தையில் மைய வங்கி' என்ற தம் நூலில் ஒரு நாட்டின் நிதி, வங்கியியல்களைச் சட்ட ரீதியாகவும், நடைமுறை ரீதியாகவும் (De Jure and De Facto) நிருவகிக்க,ஒரு மைய வங்கி இன்றியமையாததாகும்' என்கிறார்.

இந்திய ரிசர்வு வங்கி தோற்றுவிக்கப்படும் முன் இந்தியப் பணச் சந்தை முறையான வளர்ச்சியின்றி, குழப்பம் மிக்கதாகவும், ஒழுங்கீனங்கள் மலிந்ததாகவும் இருந்தது. 1935 வரை, காகித நாணய வெளியீடு அரசின் பொறுப்பிலும், கடன் கட்டுப்பாடு, வங்கிமுறைக் கண்காணிப்பு ஆகியவை இம்பீரியல் வங்கியின் பொறுப்பிலும் இருந்து வந்தன. இம்பீரியல் வங்கிதான் இந்தியாவின் மைய வங்கி போல் செயலாற்றி வந்தது. 1926-இல் வங்கி ஆய்வுக் குழுவினர் (ஹில்டன் யங் கமிஷன்) அளித்த அறிக்கையில் 'நாணய வெளியீடு ஓரிடத்திலும் கடன் கட்டுப்பாடு மற்றோரிடத்திலும் இருப்பது சரியன்று; இரு பொறுப்புகளையும் ஒரு சேரக் கவனித்துக் கொள்ள ஒரு மைய வங்கி இன்றியமையாததாகும்' என்று பரிந்துரைத்தனர், இப் பரிந்துரை 1934ஆம் ஆண்டு இந்திய ரிசர்வு வங்கிச் சட்டத்தின் மூலம்தான் நடைமுறைக்குக் கொணரப்பட்டது. 1935 ஏப்ரல் மாதத்திலிருந்து இந்திய ரிசர்வு வங்கி செயல்படத் தொடங்கியது. அதனுடைய நோக்க விளக்கம் (Preamble) கீழ்க் கண்டவாறு கூறுகிறது:

'வங்கித்தாள்களின் (Bank Notes) வெளியீட்டை நெறிப்படுத்துதல்; இந்திய நிதி நிலையில் உறுதிப்பாட்டைக் காப்பாற்ற வங்கிகளின் ரொக்க இருப்புகளை வைத்துப் பராமரித்தல்; பொதுவாக நாணயப் புழக்கத்தையும் கடன் கட்டுப்பாட்டையும் நாட்டின் நலனுக் கேற்பக் கண்காணித்து இயக்குதல்.'

மேற்குறிப்பிட்ட நோக்கங்களை நிறைவேற்றுவதில் ரிசர்வு வங்கி இதுவரை பல வெற்றிகளைக் கண்டுள்ளது அதனுடைய வெற்றிகளி லெல்லாம் தலையாயது இந்தியாவில் இந் நூற்றுண்டின் முற்பகுதியில் நிகழ்ந்த வங்கி முறைகளைப் பெருவாரியாகக் குறைத்து, சிறிது சிறிதாக இந்திய வங்கிகளைத் தனது கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வந்த அருஞ்செயலாகும்.

சுதேசி இயக்கத்தின் உந்தலாலும் முதல் உலகப் போர் அளித்த வாய்ப்புகளாலும் இந்தியாவின் பல பாகங்களில் பல வகைப்பட்ட தொழில், வணிக, நிறுவனங்கள் தோன்றின. இவற்றுடன் இவற்றின் நடவடிக்கைகளுக்குத் துணை செய்யும் நோக்குடன் பல வங்கிகளும் தோன்றின. அவற்றில் பெரும்பாலானவை, போதிய நிதிவளத் துடனும், தொழில் நுணுக்கத் திறனுடனும் தொடங்கப் படாத தால், தொடங்கிய சில ஆண்டுகளிலேயே வலி விழந்து நலிவுற்று முறிவுற்றன. இவ்வகை வங்கி முறிவுகள் அடிக்கடி நிகழ்ந்தன. (86ஆம் பக்கத்தில் அட்டவணை I), மக்களுக்கு, அதுவும், தன்னம்பிக் கையும் சுயமுயற்சியும் இழந்திருந்த இந்திய சமுதாயத்தில், நவீன வங்கியியலின்மீது நம்பிக்கை வளர்வதற்குப் பதில் அவநம்பிக்கையே வளர்ந்தது. சாதாரணமாக, வங்கி முறிவு என்பது ஒரு தொற்று நோய்க்குச் சமமாகும்; மிக எளிதில் பரவக் கூடியது. வலுவற்ற ஒரு சிறுவங்கியின் முறிவு, வலுவான, வளமான வங்கிகளையும் கூடப் பாதிக்கும். பேராசிரியர் ஜி. பி, குப்தா அவர்கள், ‘முறிவுற்ற ஒரு வங்கியில் தங்களது சேமிப்புகளை இழந்த பொது மக்களே வங்கியியல் வளர்ச்சிக்குப் பெரிய எதிரிகளாவர். அவர்கள், வங்கியியலின் உறுதி யற்ற தன்மைக்கு நடை விளம்பரங்கள் ஆகின்றனர்’ என்கிறுர். ஆனுல், ஒரு வங்கி முறிவுறும் நிலையில் இருக்கும்போது ஏனைய வங்கிகள் தங்கள் உபரிநிதிகளிலிருந்து ஒன்று சேர்ந்து உதவினுல் அம் முறிவை எளிதாகத் தவிர்க்கலாம். அல்லது, ஓர் ஆற்றல் மிக்க மைய வங்கி செயல்பட்டதென்ருல், அது வங்கிகளுக்கு உற்றுழி உதவு வோனுகையால், அம் முறிவைத் தவிர்ப்பதற்கு எல்லாவிதமான உதவிகளையும் அளித்து அம் முறிவைத் தவிர்க்கும்; அல்லது குறைந்த பட்சம் அவ் வங்கியின் பொறுப்புகளையும் சொத்துகளையும் நன்கு நடைபெறும் இன்னெரு வகிகியுடன் இணைத்து அம் முறிவைத் தவிர்த்துப் பொதுமக்களைக் காப்பாற்றும். இச் சமயங்களில்தாம் ஒரு மைய வங்கியின் தேவையும் முக்கியத்துவமும் அதிகமாக உணரப் படுகின்றன.

இந்தியாவில் ரிசர்வு வங்கி மைய வங்கியாகச் செயல்படத் தொடங்கிய பின் இவ் வங்கி முறிவுகளைத் தவிர்த்து நாட்டில் வங்கி யியலைச் சீரிய முறையில் வளர்ப்பதற்காகச் சட்ட பூர்வமான பல

அதிகாரங்களைப் பெற்றது. அதுவும், குறிப்பாக, 1949-ல் ரிசர்வு வங்கி நாட்டுடைமையாக்கப்பட்டவுடன், நாட்டின் வங்கியியலை நெறிப்படுத்துவதற்கென்றே நிறைவேற்றப்பட்ட வங்கி நிறுவனச் சட்டத்தின் (Banking Companies Act) மூலம் அதற்கு மேலும் பல அதிகாரங்கள் வழங்கப் பெற்றன. (86, 87ஆம் பக்கங்களில் காணும் அட்டவணைகள் II & III-ல் 1949-க்குப்பின் ரிசர்வு வங்கி, வங்கி முறிவுகளைக் குறைத்து வங்கிகளை ஒருங்கிணைத்து எண்ணிக்கைகளைக் குறைத்துள்ளதற்கான புள்ளி விவரங்களைக் காண்க).

ரிசர்வு வங்கி தொடங்கப் பெற்ற ஆரம்ப காலத்தில் அதன் கட்டுப்பாடுகளை விரும்பாத வங்கிகள், தங்கள் விருப்பத்திற்கு மாறாக, அரசாங்கத்தால் தங்கள் தலையில் சுமத்தப் பெற்ற (Super imposed) ஒன்றாகவே அதைக் கருதின. எனவே, இங்கிலாந்தில் பாங்க் ஆப் இங்கிலாந்து (Bank of England) அந் நாட்டு வங்கிகளால் மதிக்கப் பட்டது போல், ரிசர்வு வங்கி, இந்திய வங்கிகளால் மதிக்கப்பட வில்லை. ஆனால் ஆண்டுகள் செல்லச் செல்ல, அது ஆற்றிவரும் பணி களையும் தங்களுக்கு அவ்வப்போது அது செய்து வரும் உதவிகளையும் கண்டு வங்கிகள் அதனுடைய இன்றியமையாமையை உணரத் தொடங்கிவிட்டன.

வங்கி முறிவுகளின் மூலம் பொது மக்களின் வைப்புகளுக்கு இழப்பு நேராவண்ணம் காக்க, 'வைப்புக் காப்பீட்டுக் கூட்டுரு' (Deposit Insurance Corporation) ஒன்றைத் தோற்றுவித்து ரூ 1500 வரையிலான வைப்புத் தொகைகளைக் காப்புறுதி செய்து கொள்ள (Insure) வசதி செய்து கொடுத்தது. இவ் வரம்பு தற்போது ரூ 10,000 வரை உயர்த்தப்பட்டுள்ளது வங்கி முறிவுகளைத் தவிர்க்க. புதிய வங் கித் தொடக்கர்களுக்குப் பல்வேறு நிபந்தனைகளை விதித்து, அவற்றில் நிறைவு கண்டாலே அனுமதி (Licence) வழங்கி வருகிறது. அத்துடன் ஏற்கனவே செயல்பட்டு வந்த வங்கிகளில் எவையேனும் வளம் குறைந்து வலுவிழந்து காணப்பட்டால், அதை உடனே கண்டறிந்து அவற்றை ஒன்றோடொன்று இணைத்து வலுவான வங்கியாக்கிச் செயல்படச் செய்கிறது. இவ் வகையில், பஞ்சாப் நேஷனல் பாங்க் குடன், பாரத் பாங்க்கும், இந்தோ கமர்ஷியல் பாங்க்கும் இணைக்கப் பட்டமை ஒரு சிறந்த எடுத்துக் காட்டாகும். (அட்டவணை III காண்க).

வங்கிகள் தங்கள் பொறுப்புகளில் (Liabilities) குறைந்தளவு 30% க்கு ரொக்கமாகவோ, தங்கமாகவோ, வில்லங்க மில்லாப் பிணையீடுகளாகவோ (unencumbered securities) சொத்து வைத் திருக்க வேண்டும்; தங்கள் மொத்த வைப்புகளில் 3% லிருந்து

15% வரை ரிசர்வு வங்கியிடம் செலுத்தியிருக்க வேண்டும், என்ற சிறப்பு விதிகள் எல்லாம் வங்கி முறிவுகளைத் தவிர்ப்பதற்காகவே விதிக்கப்பட்டவையாகும்.

இன்னும், பொதுமக்கள் நலன் கருதி எந்த வங்கியிடமும் எந்த விதத் தகவலையும் கேட்டுப் பெறவும், அதன் கணக்குகளை ஆய்வு செய்து குறைகளைத் திருத்திக் கொள்ளும்படி அறிவுரை வழங்கவும், சமயத்தில், பொது மக்கள் நலன் பாதிக்கப்படும் என்று தெரிந்தால் உடனே அதைச் செய்தித் தாள்கள் மூலம் தெரிவிக்கவும் ரிசர்வு வங்கிக்கு முழு அதிகாரம் வழங்கப் பெற்றுள்ளது. மேலும் வங்கிகள், தாங்கள் பெறும் வைப்புகளுக்கு வழங்கும் வட்டி வீதம், தாங்கள் வழங்கும் கடன்களின் மீது வசூலிக்கும் வட்டி வீதம் ஆகியவற்றை ஆணையிட்டு நெறிப்படுத்தவும் ரிசர்வு வங்கிக்கு அதிகாரமுண்டு. இவற்றிலெல்லாம் ஓரளவு நல்ல வெற்றி கண்டுள்ள ரிசர்வு வங்கி, பரம்பரை வட்டித் தொழிலரையும், நாட்டு வங்கியரையும், தன் கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவர எத்தனையோ முயற்சிகள் செய்தும் இன்னும் அதற்கு முழு வெற்றி கிட்டவில்லை.

நாட்டு வங்கியரைத் தன் கட்டுப் பாட்டிற்குள் கொண்டுவரும் நோக்குடன் 1937ஆம் ஆண்டு, பட்டியலிலிட்ட வங்கிகளுக்கும் ஷராப் சங்கங்களுக்கும் ஓர் அறிக்கை அனுப்பி அவற்றின் கருத்துகளைத் தெரிவிக்குமாறு கேட்டிருந்தது. அவ் வறிக்கையில், நாட்டு வங்கியருடன் தான் நேரடித் தொடர்பு கொள்ள முடியாதென்றும், பட்டியலிலிட்ட வங்கிகளின் மூலமே தொடர்பு வைத்துக் கொள்ள முடியுமென்றும், இன்னும் சில நிபந்தனைகளுக்குட்பட்டால் அவர்கள் தன்னிடம் நேரடியாக மறு தள்ளுபடி வசதியும் அரசாங்க ஆவணங்கள் மீது கடன் வசதியும் பெறலாம் என்றும் தெரிவித்திருந்தது. நாட்டு வங்கியர், அந் நிபந்தனைகள் மிக்க திட்டத்தை ஏற்க மறுத்து விட்டனர். அத் திட்டப்படி அவர்களுக்குத் தனிச் சலுகை இல்லையாகையாலும், பழக்கமற்ற தொழில்களை மேற்கொள்ளவும் பழகிய தொழிலைக் கைவிடவும் அவர்களுக்கு விருப்பமில்லையாகையாலும் நாட்டு வங்கியர் ரிசர்வு வங்கியின் அவ் வழைப்பை ஏற்க மறுத்து விட்டனர்.

மறுபடியும். 1941-ல் முதலில் வெளியிட்ட திட்டத்தைச் சிறிது மாற்றியமைத்து நாட்டு வங்கியர்க்கு அழைப்பு விடுக்கப் பட்டது. அதையும் அவர்கள் ஏற்றுக்கொள்ளவில்லை. காரணம், ரிசர்வு வங்கி, அவர்களின் நடவடிக்கைகளைக் கண்காணிப்பதையும், அவர்கள் கணக்குகளைத் தணிக்கை செய்வதையும் அவர்கள் விரும்ப வில்லை.

நாட்டு வங்கியரைக் கட்டுப்படுத்த எடுத்துக் கொண்ட முயற்சிகள் எல்லாம் வெற்றியளிக்கவில்லை யாதலால் அவர்களது கோட்டைகளாகத் திகழும் நாட்டுப் புறங்களில் அவர்களது செல்வாக்கையும், ஆதிக்கத்தையும் முறியடிக்க, வலுவான எதிரணி ஒன்றை உருவாக்கும் நோக்குடன், அண்மைக் காலமாக, ரிசர்வு வங்கி, கூட்டுறவு வங்கிகளையும், ஸ்டேட் வங்கியையும், வணிக வங்கிகளையும், விவசாயிகளுக்கும், கைத்தொழில் சிறுரகத் தொழில்களில் ஈடுபடுவோர்க்கும் மிக எளிய முறைகளில் கடன் வசதியளிக்கும் படியும் அங்கங்கே நிறையத் தங்கள் கிளைகளைத் தொடங்கும்படியும் முடுக்கி வருகிறது.

1954-க்குப் பின் நெடுங்காலமாக அவ்வம்மாநிலங்களின் பொறுப்பில் இருந்து வந்த கூட்டுறவு வங்கிகளின் மூலம் தானும் நேரடியாக வேளாண்மைத் துறைக்குக் கடன் வசதியளிக்கத் தொடங்கி, அதை மேலும் மேலும் விரிவாக்கி வருகிறது. அதற்கென்று தனது அலுவலகத்தில் ஒரு திறன் மிக்க குழுவையும், அக் குழுவின் கீழ் இயங்கும் அலுவலகங்களையும், அதிகாரிகளையும் ஏற்படுத்தியுள்ளது. (இதன் விரிவைத் தனித்தனித் தலைப்புகளில் காண்க) வேளாண்மைத் துறைக்கு உதவியது போலவே, தொழில் துறைக்கும் குடிசைத் தொழிலிலிருந்து பெரிய கனரகத் தொழில்கள் வரை நிதி வசதியளித்து வருகிறது. (தனித்தனித் தலைப்புகளில் விவரம் காண்க).

வேளாண்மை, தொழில்துறைகளுக்குத் தனது நேரடி உதவிகளை விரிவாக்கியது போலவே இந்திய உள்நாட்டு வெளிநாட்டு வணிகத்தின் வளர்ச்சிக்கும் உதவும் வகையில் 1951-ல் உண்டியல் சந்தைத் திட்டமொன்றை வெளியிட்டது. 1970-ல் அத் திட்டத்தில் சில சீர் திருத்தங்களைச் செய்து மேலும் விரிவாக்கியது. (உண்டியல் சந்தைத் திட்டம் என்ற தலைப்பில் காண்க).

சாதாரணமாக மக்கள் தங்கள் கடன் தேவைகளுக்கு வங்கிகளை அணுக வேண்டும்; வங்கிகள் தங்கள் கடன் தேவைகளுக்கு மைய வங்கியை அணுக வேண்டும். ஒரு வளர்ச்சியுற்ற பணச் சந்தையில் இந்த நிலைமைதான் நிலவும். இந் நிலைமை சீராக நிலவினால்தான், மைய வங்கி, தனது முக்கியமான கடமைகளாகிய நிதி, கடன், செலாவணிக் கட்டுப்பாடுகளை ஒழுங்காகச் செயல்படுத்த முடியும். தனது வட்டி வீதத்தை ஒரு சரியான ஆற்றல் மிக்க கருவியாகப் பயன்படுத்திப் பணச் சந்தையின் துணைச் சந்தைகளைக் கட்டுப்படுத்த முடியும். நாட்டின் பொருளாதாரம் பாதிக்கப்படாமலும் காப்பாற்ற முடியும். இந்தியாவில் இந் நிலைமை இன்னும் உருவாகவில்லை. இந்தியப் பணச் சந்தை இன்னும் பல குறைகள்

மலிந்ததாகவே காணப்படுகிறது. (இதன் விரிவை, 'இந்தியப் பணச் சந்தையின் குறைகளும் அவற்றை நீக்கும் வழிகளும்' என்ற தலைப்பில் காண்க.)

இந்தியா அண்மையில் தான் அந்நிய ஆதிக்கத்திலிருந்து விடுதலை பெற்று, ஐந்தாண்டு திட்டங்களின் மூலம் பொருளாதார வளர்ச்சிக் குப் போராடிக் கொண்டுள்ள நாடாகும். திட்ட வளர்ச்சிப் பணி களுக்குப் போதிய கடன் வசதியளிக்க வேண்டியது இன்றியமையாத தாகும். ஆனால் இக் கடன்கள் பண வீக்கத்தை உண்டுபண்ணி விடா மலும், ரூபாயின் மதிப்பு உள் நாட்டிலும் வெளிநாட்டிலும் பாதிக்கப் படாமலும் காக்க வேண்டிய பொறுப்பு ரிசர்வு வங்கியினுடைய தாகும். திட்ட கால நிதி நிருவாகத்தைப் பொறுத்த வரையில் ரிசர்வு வங்கி 'கட்டுப் படுத்தப்பட்ட பணப் பெருக்கக்' கொள்கை யையே மேற்கொண்டு வருகிறது என்று கூறலாம் அதாவது பொருளாதார வளர்ச்சிக்குப் போதுமான நிதி வசதி செய்வதோடு அதனால் விலைவாசி உயர்ந்து விடாமல் பார்த்துக் கொள்ள வேண்டிய பொறுப்பையும் ரிசர்வு வங்கி மேற்கொள்ள வேண்டியுள்ளது. விரைவான பொருளாதார வளர்ச்சிக்குப் புதிய திட்டங்களில் முதலீடு செய்வதற்குத் தேவைப்படும் நிதியை நாணயப் பெருக்கத்தின் மூல மும் கடன் பெருக்கத்தின் மூலமும் திரட்டிக் கொடுக்க வேண்டும். இந் நிலையில் கடன் பெருக்கமும் பண அளிப்பும் நாட்டில் பண வீக்கத்தை உருவாக்கி, பொருளாதார, நிதி நிலைத்தன்மைகளுக்கு (FinancialStability) ஊறு விளைவித்து விடாமல் பார்த்துக் கொள்ள வேண்டிய பொறுப்பும் ரிசர்வு வங்கிக்கு உண்டு. இந்தியப் பொருளா தாரம் ஏற்கனவே ஓரளவு பணவீக்கக் கோளாறுகளுடனேயே இயங்கி வருகிறது. எனவே இதைச் சரிக்கட்டும்படியான நிதிக் கொள்கை நிச்சயம் கடன் கட்டுப்பாட்டை உள்ளடக்கியதாகவும் அதே சமயத் தில் உற்பத்தித் திட்டங்களைப் பாதிக்காத வகையிலும் அமைய வேண்டும்: நடைமுறையில் இக் 'கட்டுப்படுத்தப்பட்ட பணப் பெருக்கக்' கொள்கையைக் கடைப் பிடிப்பதும் செயல்படுத்துவதும் உண்மையில் மிகவும் கடினமான ஒன்றாகும். ஆனால் இந்திய ரிசர்வு வங்கி இதை ஓரளவு திறமையாகக் கடைப்பிடித்துச் செயல்படுத்தி வருகிறது.

பேராசிரியர்கள் ஜாதரும் பெரியும் ரிசர்வு வங்கியின் நடை முறை இந்தியாவின் நிதி நிலையில் 'ஒரு புதிய சகாப்தத்தைத் தொடங்கியுள்ளது; வங்கியியலைச் சீர்படுத்தியுள்ளது; இந்தியப் பணச் சந்தையைப் புனரமைத்து விரிவாக்கியுள்ளது' என்ற கூற்றை மெய்ப்பிக்கின்றனவாயுள்ளது என்று கூறுகின்றனர்.

## அட்டவணை I

வங்கி முறிவுகள்

| ஆண்டு | முறிவுற்ற வங்கிகளின் எண்ணிக்கை |
|---|---|
| 1935 | 51 |
| 1936 | 88 |
| 1937 | 65 |
| 1938 | 73 |
| 1939 | 117 |
| 1940 | 107 |
| 1941 | 94 |
| 1942 | 50 |
| 1943 | 59 |
| 1944 | 28 |
| 1945 | 27 |
| 1946 | 27 |
| 1947 | 37 |
| 1948 | 45 |
| 1949 | 53 |

## அட்டவணை II

வங்கி முறிவுகள்

| ஆண்டு | தன் விருப்பக் கலப்பு | கட்டாயக் கலப்பு | பணியை நிறுத்திக் கொண்ட வங்கிகள் |
|---|---|---|---|
| 1950 | 13 | 19 | 11 |
| 1951 | 13 | 10 | 85 |
| 1952 | 13 | 8 | 46 |
| 1953 | 16 | 18 | 6 |
| 1954 | 14 | 6 | 17 |
| 1955 | 11 | 6 | 11 |
| 1956 | 16 | 6 | 6 |
| 1957 | 18 | 3 | 11 |
| 1958 | 9 | 5 | 14 |
| 1959 | 7 | 7 | 24 |
| 1960 | 4 | 5 | 17 |
| 1961 | 5 | 3 | 39 |

## அட்டவணை III

### இணைப்பின் மூலம் வங்கிகளின் எண்ணிக்கைக் குறைவு

| வங்கிகளின் விபரம் | 1951-ல் | 1956-ல் | 1961-ல் | 1965-ல் |
|---|---|---|---|---|
| 1. பட்டியலிலிட்ட வங்கிகளின் எண்ணிக்கை | 92 | 89 | 82 | 76 |
| 2. பட்டியலிலில்லா வங்கிகளின் எண்ணிக்கை | 474 | 333 | 210 | 33 |
| 3. மொத்தம் (1+2) | 566 | 422 | 292 | 109 |

# 9. வேளாண்மை நிதி

ஒரு நாட்டின் வேளாண்மையின் முன்னேற்றம் அத் துறைக்குக் கிடைக்கும் நிதி வசதியைப் பொறுத்துள்ளது. இந்திய வேளாண்மை வளர்ச்சியடையாததற்கு, போதுமான நிதி வசதி இல்லாததும் மும் கிடைக்கும் வசதியும் அதிக செலவு கொண்டதாக உள்ளதும் ஆகும். வேளாண்மை நிதி வசதியின் அளவு பருவ காலங்களைப் பொறுத்து அமைகிறது. விவசாயிகள் தக்க பருவங்களில் தங்களுடைய நடவடிக்கைகளைப் பூர்த்திச் செய்வதற்குத் தங்களுக்குத் தேவையான கடன்களைப் பல வழிகளில் பெறுகிறார்கள். அவர்களுக்குத் தேவைப்படும் நிதி வசதிகளைத் தேவைப்படும் கால நேரத்திற்குத் தகுந்தாற் போல் மூன்று பிரிவுகளாகப் பிரிக்கலாம்:

1. குறுகிய காலக் கடன் (Short term loan)
2. மத்திம காலக் கடன் (Medium term loan)
3. நெடுங்காலக் கடன் (Long term loan)

குறுங்காலக் கடன் அன்றாடம் எழும் செயல்களைச் செய்வதற்கு, குறிப்பாக உரம், விதை, கால்நடைகளுக்கு உணவு முதலியவைகளை வாங்குவதற்கும், பணிபுரியும் நபர்களுக்குச் சம்பளப்பட்டுவாடா செய்வதற்கும் தேவைப்படுகிறது. சாதாரணமாகக் குறுகிய காலக் கடன்களை அறுவடை முடிந்த பிறகு சில நாள்களுக்குள் விவசாயிகள் திருப்பிக் கொடுத்து விடுகிறார்கள்.

மத்திம காலக்கடன் மூன்று முதல் ஐந்து ஆண்டுகளுக்குள் திருப்பிக் கொடுக்கப்படுகின்றன. கால் நடைகள் வாங்குவதற்கும் இன்றியமையாத சில விவசாயக் கருவிகள் பெறுவதற்கும் நிலத்தில் சிறு வளர்ச்சித் திட்டங்களைச் செயல்படுத்துவதற்கும் மத்திம காலக் கடன் பயன் படுத்தப்படுகிறது.

வேளாண்மையில் ஈடுபடுவோர்க்குத் தேவைப்படும் நெடுங் காலக் கடன் நிலம் வாங்குவதற்கும், பெரும் வளர்ச்சித் திட்டங்

களைச் செயல்படுத்துவதற்கும், விலையுயர்ந்த வேளாண்மைக் கருவிகளைப் பெறுவதற்கும் பயன்படுத்தப்படுகிறது. 15 ஆண்டுகளிலிருந்து 20 ஆண்டுகள் வரை விவசாயிகள் கடன் தொகையைத் திருப்பிச் செலுத்தியாக வேண்டும்.

குறுங்கால, மத்திம காலக் கடன்கள், வட்டிக் கடைக்காரர்களாலும், கூட்டுறவு நிதி நாணய நிலையங்கள் மூலமாகவும், மாநில அரசு மூலமாகவும் வழங்கப்படுகின்றன. தனியார் துறையில் இயங்கும் வட்டிக் கடைக்காரர்கள் நம் நாட்டின் வேளாண்மைத் தேவையில் 70 விழுக்காடுகள் (சதவீதம்) அளிப்பதனுல், அவர்கள் மிக முக்கியத் தோற்றுவாயாக (Source of funds) விளங்குகிருர்கள். ஆனுல், இம் முறையில் பல குறைபாடுகள் காணப்படுகின்றன. அதிக வட்டி வீதமும், நாணயமற்ற நடவடிக்கைகளும் வட்டிக் கடைக்காரர்களை நாட்டுப்புறத்தில் நிலவும் தீராத, தீர்க்க முடியாத கடன் தொல்லைகளுக்குக் காரணமாகக் காட்டுகிறது

1904ஆம் ஆண்டு முதன் முதலாக விவசாய நாணயச் சங்கங்கள் ஏற்பட்ட போது, அச் சங்கங்கள் மொத்தக் கடன் தேவைகளில் குறைந்தது 3 சதவீதம் விவசாயக் கடன் அளிக்கும் என்று கணக்கிடப் பட்டது. ஆனுல் கூட்டுறவுச் சங்கங்களின் வளர்ச்சி நாடு முழுதிலும் பரவவில்லை. மேலும் சங்கங்கள் செயல்படும் சில மாநிலங்களிலும் அவைகள் வேரூன்றி அமையவில்லை. கிராமப்புறங்களில் மக்களின் நிதி வசதிகள் இன்றும் தனியார் வட்டிக்கடைக்காரர்களால்தாம் பெரும்பாலும் பூர்த்தி செய்யப்பட்டு வருகின்றன. அரசின் ஆதரவும் உதவியும் இருந்தும்கூட சங்கங்கள் சரியாக வளரவில்லை. வளர்ந்த சங்கங்களும் நல்ல உறுதியான முன்னேற்றத்தை அடைய முடியாத நிலையில் இருக்கின்றன. அதற்குப் பல காரணங்கள் உண்டு.

நாணயச் சங்கங்கள் கிராமப் புறங்களில் செயல்பட்டால் கூட நிதி வசதி தேவைப்படும் எல்லாக் கிராமவாசிகளுக்கும் கடன் வசதி செய்து கொடுக்க முடியவில்லை. போதுமான அளவு செய்து கொடுப்பதும் அரிது. உறுப்பினர்களாகிய சிலருக்குக் கடன் வசதி அளிக்கின்றன. கடன் வசதி பெறுவதற்குக் கையாளப்படும் முறைகளும் பல உள்ளன. அம் முறைகளைக் கையாண்டால்தாம் சங்கங்களிலிருந்து கடன் பெற முடியும். வழங்கப்பட்டிருக்கும் கடன்களை உரிய காலத்தில் கடன் பெறுவோர்களிடமிருந்து திரும்பிப் பெறுவது என்பது மிகவும் சிரமமாகவுள்ளது. அவசர நிலைகளிலும் துன்ப நிலைகளிலும் கடன்கள் மிக அதிகமாக வழங்கப்படுகின்றன. ஆனுல் ஏதாவது ஒரு காரணத்தினுல் ஓராண்டு விளைச்சல் சரியில்லையென்ருல்

கடன் திரும்பிப் பெறுவது ஒத்தி வைக்கப்படுகின்றது; அல்லது கடன் தவணை நீட்டிக்கப்படுகின்றது.

நில அடைமான வங்கிகளும் முதல் உலகப் போருக்குப் பிறகு நம் நாட்டில் பல இடங்களில் அமைக்கப் பெற்றன. நிலச் சொந்தக் காரர் தம் நிலத்தை இவ் வங்கியிடம் அடைமானம் வைத்து நீண்ட காலக் கடன் பெற்று, தம் குடும்பத்தில் இருக்கும் பாரம்பரியக் கடனைத் தீர்ப்பதற்கோ, திருமணம் மற்றும் பெரிய செலவுகள் செய்வதற்கோ, கூடுதலாக நிலம் வாங்குவதற்கோ பயன் படுத்தலாம். நில அடைமான வங்கியை இப்போது நிலவள வங்கிகள் என்று பெயரிட்டு அழைக்கின்றனர். அவைகள் நிலத்தின் பேரில் வழங்கும் நெடுங்காலக் கடன்களை நில அபிவிருத்திக்காகப் பயன் படுத்த வேண்டும், 20 ஆண்டுத் தவணைகளில் திருப்பிச் செலுத்த வேண்டும் என்ற நிபந்தனைகள் விதிக்கப்பட்டிருக்கின்றன.

இந்தியா விடுதலை பெற்ற பிறகு கூட்டுறவுச் சங்கங்களின் மூலம் நிதி வசதிகள் வழங்கும் முறைகள் சீராக்கப் பெற்று ரிசர்வு வங்கியின் தீவிர நடவடிக்கைகளின் மூலமாகக் கூட்டுறவு நாணயச் சங்கங்கள் ஒருவாறு நன்முறையில் செயல்படத் தொடங்கியிருக்கின்றன. அடி மட்டச் சங்கங்கள் (Pirmary Societies) மூலமாகக் கிராமாந்திரக் கடன்கள் வழங்கப்பட்டு வருகின்றன. ஒரு குறிப்பிட்ட சிறு தொகையைச் சங்கத்திற்குச் செலுத்தி சங்கத்தின் ஒன்று அல்லது இரண்டு பங்குகளை வாங்கி விவசாயப் பெருமக்கள் யாவரும் உறுப் பினர்களாக ஆகலாம்.

உறுப்பினர்களுக்கு எல்லையில்லாக் கடன் பொறுப்பு உண்டு என்றாலும், சங்கக்கடன் முழுமைக்குமே உறுப்பினர்கள் பொறுப்பு என்றாலும், சங்கத்தின் கடன் வழங்கும் நடவடிக்கைகள் மூலம் விளையும் பொறுப்புகள் அதிகமாக இரா. குறுங்காலக் கடன்கள் வழங்கப் பெற்று விவசாயிகளை நன்முறையில் வேளாண்மையில் ஈடு படுத்த வகை செய்கின்றது. தொடக்க நாணயச் சங்கங்களுக்குக் கடன் வசதிகள் அளிக்க மையக் கூட்டுறவு வங்கிகளும் செயல் படுகின்றன. நகர்ப்புறங்களில் கூட்டுறவு முறையில் நகர்ப்புற வங்கி களும் செயலாற்றி வருகின்றன. இந் நகர்ப்புற வங்கிகள் விவசாயம் அல்லாத மற்றத் தொழிலில் ஈடுபட்டு இருப்பவர்களான தச்சர், கருமார், பொற் கொல்லர் போன்றவர்களுக்கும் மற்றவர்களுக்கும் கடன் வழகிகுகிறது. நகர்ப்புறக் கூட்டுறவு வங்கி, சாதாரண வணிக வங்கி இயல்பாகச் செய்யக் கூடிய எல்லாப் பணிகளையுமே செய் கிறது.

கூட்டுறவு மைய வங்கி அடிமட்ட நாணயச் சங்கங்களைக் கொண்ட ஓர் அமைப்பு. ஒரு மாவட்டத்தில் அல்லது அம் மாவட்டத்தின் சில பகுதிகளில் இயங்கி வரும் அடிமட்டச் சங்கங்கள் ஒருங்கிணைந்து ஒரு கூட்டுறவு மைய வங்கி ஏற்பட்டு, அதன் மூலம் அடிமட்டச் சங்கம் கடன் வசதிகள் பெற்றுத் தம் உறுப்பினர்களுக்குக் குறுங்காலக் கடன் வழங்கலாம். மையக் கூட்டுறவு வங்கி ஒன்று கீழ்க்காணும் மூன்று வழிகளில் தன் நிதி வசதிகளைப் பெருக்கிக் கொள்ளலாம்.

1. தன் சொந்தப் பங்கு மூலதனம், காப்புத் தொகை
2. பொது மக்களிடமிருந்து பெறும் வைப்புத் தொகை
3. மாநிலக் கூட்டுறவு வங்கியிடமிருந்து பெறும் கடன்.

மாநிலக் கூட்டுறவு வங்கி அந்தந்த மாநிலங்களில் இயங்கும் கூட்டுறவு நாணயச் சங்கங்களின் அமைப்பிற்குச் சிகரமாக விளங்குகிறது. மாநிலக் கூட்டுறவு வங்கி, கூட்டுறவு மைய வங்கிகளின் நடவடிக்கைகளை ஒழுங்காற்றவும், கண்காணிக்கவும் அவைகளுக்கு நிதி வழங்கவும் செய்கிறது. ஒரு புறம் ரிசர்வ் பாங்க், பணச் சந்தையின் மற்ற அங்கங்கள் இவைகளுடனும் மற்றொரு புறம் மையக் கூட்டுறவுக் கழகங்கள் மற்ற அடிமட்டச் சங்கங்கள் இவைகளுடனும் மாநிலக் கூட்டுறவு வங்கி தொடர்பை ஏபடுத்துகின்றது.

கூட்டுறவு இயக்கம் மிக முக்கியமானதாகக் கருதப்படினும், ஒரு விவசாய நாட்டின் முன்னேற்றத்திற்கு மிகத் தேவையான அளவில் இவ் வியக்கம் வளரவில்லை. அதற்குத் தேவையான மக்கள் ஆதரவும் கிடைக்கப்பெறவில்லை. பல துறைகளில் கூட்டுறவுச் சங்கங்கள் இயங்கப் பெற்றாலும் அரசின் ஆதரவு காரணமாக ஒரு சிறிதளவு வெற்றியடைந்துள்ளது, கூட்டுறவு இயக்கத்தின் வளர்ச்சிக்கு மக்களிடமிருந்து ஊக்கமில்லை. அதே போல் கூட்டுறவுச் சங்கங்களும் உறுப்பினர்களுக்கும் மற்றவர்களுக்கும் புரியும் பணிகள் முழுமையானதாக இல்லை. நம் நாட்டில் கூட்டுறவு இயக்கம் அரசின் ஒரு துறையின் செயலாகவே அமைந்திருக்கிறது. இது ஒரு பெரிய குறைபாடு ஆகும். இயக்கம் மக்களைத் தன்பால் இழுத்துக் கொள்ளவில்லை. இதற்குச் சில அடிப்படைக் காரணங்கள் உண்டு. தொடக்கத்தில் கூட்டுறவு நாணயச் சங்கங்களுக்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டதால் மற்றத் துறைகளில் கூட்டுறவின் வளர்ச்சி பிரதிபலிக்கவில்லை. மேலும், நாணயச் சங்கங்களின் நிர்வாகம் பயன்படும் முறையில் செயல்படுவதில்லை என்ற குற்றச்சாட்டு ஆரம்ப நாள்களிலிருந்தே இருந்து வருகிறது. வசதிபெற்ற விவசாயிகளுக்கு நாணயச் சங்கங்களின் வசதிகள் மிக எளிதாகக் கிட்டுவதாக இருக்

கின்றன. ஆனால் அதே நேரத்தில் கடன் வசதியை நாடிச் செல்லும், எதிர்பார்த்து ஏங்கி நிற்கும் வசதியற்ற விவசாயிகளுக்குக் கூட்டுறவுச் சங்கங்களின் உதவி எட்டுவதில்லை. இச் சூழ்நிலையில் பண ஆதிக்கம் பெற்ற பெரும் விவசாயிகள் மேலும் பண பலம் அடைகிறார்கள். வசதி பெறாத குடியானவர்கள் தொடர்ந்து வசதியற்ற நிலையிலேயே இருந்து வருகிறார்கள். இது சோஷலிசத்திற்கு நேர்மாறான தன்மையை உருவாக்குகின்றது. மேலும், இந்தியக் கூட்டுறவு இயக்கம் நம் நாட்டு விவசாயிகளின் மற்றத் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்கு எவ்வித முயற்சியும் சரியான முறையில் எடுத்துக் கொள்வதில்லை. அவ்வாறு முயற்சி எடுத்துக் கொண்டிருக்கும் சில மாநிலங்களில் நல்ல கூட்டுறவு அமைப்பு ஒன்று ஏற்பட்டிருப்பினும் வேறு பல குறைபாடுகள் காணப்படுகின்றன. கூட்டான முயற்சியில் தன்னலமற்ற அறிவு பெற்ற நாணயமுள்ள தொண்டர்கள் தேவை. இச் சிறப்புடைய நபர்கள் கூட்டுறவு இயக்கத்தில் பங்கு பெற்று இந்திய மண்ணில் அதைப் பரப்புவதற்கு முன் வராத காரணத்தினால் இப்பொழுது இயங்கி வரும் பெரும்பாலான கூட்டுறவுச் சங்கங்களில் நிர்வாக ஊழல் மலிந்து கிடக்கின்றது. நாணயம் குறைந்தவர்கள் கூட்டுறவு நடவடிக்கைகளில் ஈடுபடுவதன் மூலம் தங்கள் சொந்த லாபத்தைப் பெருக்குவதற்கு வாய்ப்பைத் தேடுகிறார்கள். சங்க உறுப்பினர்களின் ஒத்துழைப்பும் சங்க நிர்வாகிகளுக்குக் கிடைப்பதில்லை. மாறாக, சிற்சில இடங்களில் நிர்வாகிகள் நல்ல முறையில் செயல்பட்டால் கூட விவரமறியாத உறுப்பினர்களின் கண்டனத்திற்கு ஆளாகிறார்கள்.

நம் நாட்டில் மக்களிடையே பொதுக் கல்வியறிவு குறைவு. மக்களின் ஒற்றுமையின்மை ஜாதி, மத, மொழி வேறுபாடு காரணமாகச் சீர்குலைந்திருக்கிறது. மேலும், அரசியல் கட்சிகளைச் சார்ந்த நபர்கள் உறுப்பினர்களாகச் சேர்ந்து கட்சி பக்கபலத்தின் காரணமாக நிர்வாகத்திலும் இடம் பெற்று அரசியல் கருத்துகளை அன்றாட நிர்வாகத்தில் பிரதி பலிக்கச் செய்கிறார்கள். நம் நாட்டில் கூட்டுறவு இயக்கத்தில் காணப்படும் பல முக்கியக் குறைபாடுகளில் அரசியலின் ஆதிக்கம் ஒன்று. ஆனால் மக்களால் பெரும்பாலான ஓட்டுகளைப் பெற்றுத் தேர்ந்தெடுக்கப்பட்ட அரசியல் கட்சி அரசை அமைத்து, அவ் வரசு கூட்டுறவு இயக்கத்திற்கு உறுதுணையாக இருந்து ஆதரவு கொடுத்து, நிதி வசதியளித்துத் தேவைப்படும் ஊக்கத்தை அளித்து நடத்தி வருவதால் ஆளும் கட்சியின் கொள்கைகள் கூட்டுறவு இயக்கத்தில் கலந்து வருகின்றன. ஆகவே நன்றாக வளரக் கூடிய இயக்கம் தேக்கமுற்று வளர்ச்சியடையாமல் முடங்கிக் கிடக்கும் நிலையைக் காண்கிறோம்.

கூட்டுறவு இயக்கம் மக்களின் வலிமையைச் சார்ந்து இயங்க வேண்டும். அகில இந்திய கிராமப்புற நாணய விசாரணைக் குழு (1954) வெளியிட்ட அறிக்கையில் கூட்டுறவு இயக்கம் இந்திய விவசாயிகளின் மொத்த நிதித் தேவைகளில் 3 சதவீதந்தான் அளித்திருக்கிறது என்று குறிப்பிட்டிருக்கிறது. இதன் மூலம் தனியார் வட்டிக் கடைகளின் ஆதிக்கம் எந்த அளவிற்குக் கிராமங்களிலும் நகர்ப்புறங்களிலும் வேரூன்றியிருக்கிறது என்பது புலனாகிறது.

### கூட்டுறவு நாணயம் (Co-operative Credit)

1954-ல் 'அகில இந்தியக் கிராமக் கூட்டுறவுக்கடன் ஆய்வுக்குழு' தனது அறிக்கையைச் சமர்ப்பித்த பின் எவ்வளவு தூரம் முன்னேற்றம் ஏற்பட்டுள்ளது என்பதை மறு ஆய்வு செய்ய 1966-ல் இந்திய ரிசர்வு வங்கி மீண்டும் ஓர் 'அகில இந்தியக் கிராமக் கடன் ஆய்வுக்குழு'வை நியமித்துப் பரிந்துரைகள் வழங்குமாறு கேட்டுக்கொண்டது. அக்குழு 1969 ஜூலையில் தனது அறிக்கையைச் சமர்ப்பித்தது. அவ்வறிக்கையில் அக் குழு, 'கூட்டுறவு நாணய முறையில் புனரமைப்புச் செய்து ஒருங்கிணைந்த திட்டத்தைத் தீவிரமாக அமல் செய்வதோடு கூட்டுறவு நாணய முறையில் மட்டுமே முழுக் கவனத்தையும் செலுத்தி விடக்கூடாது. கிராம விவசாயிகளது கடன் பிரச்சினையின் பேரளவைக் காணும்போது, வணிக வங்கிகள், குறிப்பாக நாட்டுடைமையாக்கப்பட்ட வங்கிகள் வேளாண்மைக் கடன் வழங்கும் திட்டத்தில் தீவிர முயற்சி எடுத்துக் கொள்ள வேண்டும் என்ற கருத்தை வலியுறுத்திக் கூறியது. அத்துடன் விவசாயிகளுக்கும் போதுமான அளவிலும், குறித்த காலத்திலும் கடன் கிடைக்கும் முறைகளைக் கூட்டுறவு வங்கிகளும், வணிக வங்கிகளும் கடைப்பிடிக்க வேண்டுமென்று சில முற்போக்கான முறைகளையும் பரிந்துரைத்தது.

ஆய்வுக்குழு, (1) நாட்டுப்புற மின்சாரக் கழகம் (2) சிறு விவசாயிகள் முன்னேற்ற முகவகம் (Agency) என்ற இரு புதிய அமைப்புகளை நிறுவும்படியும் ஆலோசனை கூறியது.

(1) நாட்டுப்புற மின்சாரக் கழகம், மின்வாரியத்தின் மூலமாகவும், கிராம மின்சாரக் கூட்டுறவுச் சங்கங்கள் மூலமாகவும், கிராம மின்சார வசதிக்கு நிதி வசதி செய்ய வேண்டும்.

(2) சிறு விவசாயிகள் முன்னேற்ற முகவகம் சிறு விவசாயிகளுடைய பிரச்சினைகளைத் தெரிந்து, அவர்களுக்குத் தேவையான கடன், விவசாயக் கருவிகள் முதலானவை எல்லாம் அவர்களுக்குக் கிடைக்க வழி செய்ய வேண்டும்.

கூட்டுறவு இயக்கத்தில் ரிசர்வு வங்கி தனது பங்கை இன்னும் அதிகமாக்கிக் கொள்ளவேண்டுமென்று ஆய்வுக் குழு பரிந்துரைத்தது. கூட்டுறவுத் துறைக்கு, ரிசர்வு வங்கி இதுவரையளித்து வந்த உதவி களைப் பாராட்டியதோடு, மேலும் சில விதி முறைகளைத் தளர்த்தி, கூட்டுறவு வங்கிகள் கடைப்பிடித்து வரும் சில முறைகளைத் திருத்த வும் யோசனை கூறியது.

## கூட்டுறவு நாணய அமைப்பை உருவாக்குதல் (Building up of the Co-operative Credit Structure)

கூட்டுறவு இயக்கத்திற்கு இதுவரை தன்மூலம் கிடைத்த வந்த நிதி வாய்ப்புகளை மேலும் விரிவுபடுத்துவதோடு, தான் இதுவரை கடைப்பிடித்து வந்த விரிவான செயல்பாட்டுக்குத் தடையாக இருந்த சில விதிமுறைகளில் உள்ள குறைபாடுகளை நீக்கி ஒரு நல்ல கூட்டுறவு நாணய அமைப்பை உருவாக்கும் பெரும் பொறுப்பை ரிஸர்வு வங்கி ஏற்றுக் கொண்டது. 1951ஆம் ஆண்டு வாக்கில், கிராமக் கடன் திட்டத்தில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டு தனது வரலாற்றில் ஒரு புதிய அத்தியாயத்தைத் தொடங்கிய பொழுது சில மாநிலங்களில் கூட்டுறவு வங்கிகளே இல்லை, சிலவற்றில் கூட்டுறவு வங்கிகள் பெயரளவில் இருந்தனவே தவிரச் சரியாகச் செயல்பட வில்லை. இடை நிலையில் இருந்த பல மத்தியக் கூட்டுறவு வங்கிகள் போதுமான செயல்பாட்டு எல்லைகள் (area of operations) இல்லா மலும் குறைந்த வைப்பீடுகளை உடையனவாகவும் வழங்கிய கடன் களில் பெரும்பகுதி திருப்பிச் செலுத்தப்படாமலும், அவை மிகவும் பலவீனமடைந்திருந்தன. அடிமட்டத்தில் இருந்த பல கூட்டுறவு நாணயச் சங்கங்கள் போதுமான பொருளாதார வளமற்று, வழங்கிய கடன்களில் பெரும் பகுதி திரும்பி வராமலேயே செய லற்றுப் போய்விட்டன. இந் நிலையைச் சீர்திருத்த, ரிஸர்வு வங்கி எடுத்துக் கொண்ட முதல் முயற்சியாக அவ்வம் மாநில அரசுகளைக் கொண்டு மா நிலக் கூட்டுறவு வங்கிகளை ஒருங்கிணைத்து ஒரு பலமான மைய வங்கியை உருவாக்குமாறு மாநில அரசுகளை ஊக்குவித்தது. இதனால் மாவட்டத்தளவில் ஒரு பலமான மைய வங்கி உருவாக ஏதுவாயிற்று. இது தவிர, பல மைய வங்கிகளைச் செயலற்றுப் போகச் செய்திருந்த நீண்ட காலக் கடன் நிலுவைகளை வசூலிப்பதற் காகத் தணிக்கப்பட்ட சில திட்டங்களை வகுத்துக் கொடுத்து அவற் றிற்கு மறு வாழ்வளிப்பதற்காக, வாராக் கடன் காப்பு நிதி உருவாக்கி (bad debts reserve) நல்ல நிருவாக மேற் பார்வைப் பணியாளர்களைக் கொண்டு சுய பலத்துடன் இயங்க வழி வகுத்தது. அத்துடன் சமூகத்தில் பல துறையைச் சேர்ந்தவர்களைக் கொண்டு அமைந்த ஒரு குழு இம் மறு வாழ்வுத் திட்டம் சரியாகச் செயல்படும்

விதத்தை அடிக்கடி கண்காணித்து வரவும் ஏற்பாடு செய்யப் பட்டது.

அடிமட்டச் சங்கங்களைப் பொறுத்த வரையில் அவை முழு நேர ஊழியர்களைப் பணிக்கு அமர்த்தி, ஒரு முறையான அலுவலகத்தை யும் நிருவகிக்கத் தக்கவையாக அமைய வேண்டும். இவ்வகை யில், ஓரளவு வளமும் செயல்பாட்டு வாய்ப்பும் உடைய சங்கங்களை ஒருங்கிணைத்துப் புனரமைப்புச் செய்து அவற்றை இயக்குவிக்கவும், முற்றிலும் செயலற்றுப் போனவற்றைக் கலைத்து விடவும், மாநில அரசுகளுக்கு ரிஸர்வு வங்கி முழுமையாக ஒத்துழைத்து, இச் சீர்திருத்தத் திட்டத்தின் முன்னேற்றத்தையும் அடிக்கடி கவனித்து வந்தது.

கூட்டுறவு வங்கிகளின் செயல் முறைக் கொள்கைகளின் (improvement in the operational policies) சீர்திருத்தத்திற்கு ரிஸர்வு வங்கி முழுமனத்துடன் ஒத்துழைத்தது. இச் செயல்முறைச் சீர்திருத்தங்களில் முக்கியமான ஒன்று, உற்பத்திப் பெருக்கத்திற்குக் கடன் வழங்குதல். ஆரம்ப காலத்தில் சொத்தின் அடிப்படையி லேயே கடன் வழங்கப்பட்டது. இச் சீர்திருத்தத் திட்டப்படி விவசாய உற்பத்திப் பெருக்கத்திற்காக ஒரு சில சாதாரண நிபந்தனை களின் பேரில் தனிநபர்களுக்குக் கடன் வழங்குவதற்கு கூட்டுறவுச் சங்கங்கள் ஊக்குவிக்கப் படுகின்றன. கடன்கள் பெரும்பாலும் பணமாக அல்லாமல் கூடுமானவரை பொருள்களுக்கு வழங்கப்படும். கடன் வசூல் தவணையும் அறுவடைக் காலம், விளைபொருள் விற்பனைக் காலம் ஆகிய பருவங்களை ஒட்டியே விதிக்கப்படும். வசூல், முடிந்தவரை கூட்டுறவு விற்பனைச் சங்கங்கள் மூலமாகவே செய்யப்படும்.

இடைநிலைக் காலக் கடன்களைப் பொறுத்த வரையில், ரிசர்வு வங்கி சில விதிமுறைகளை வகுத்துள்ளது. கடன் பெறும் நோக்கங்கள், சொத்து மதிப்பு, திருப்பித் தரக் கூடிய வகையுடைமை, வேறு பிணையங்கள் ஆகியவற்றை யெல்லாம் அடிப்படையாகக் கொண்டுதாம் இவ்வகைக் கடன் வழங்கப் பெறும். வழங்குவதோடு, அது பயன்பெறும் விதமும் கண்காணிக்கப் பெறும்.

கூட்டுறவு இயக்கத்தின் பல நிலைகளில், பலப்படுத்தப் பல்வேறு முயற்சிகள் எடுத்தும் கூட சில மாநிலங்களில், மாவட்ட மைய வங்கிகள் நிலையில் பொருளாதார வளமின்றியும், நிருவாகத் திறமின்றியும், ரிஸர்வு வங்கியளிக்கும் தாராளமான கடன் வசதியைச் சரியாகப் பயன்படுத்திக் கொள்ள முடியாமல் உள்ளன. இவ்வாறு மைய வங்கிகள் பலவீனமடைந்த இடங்களில்

மிக நல்ல முறையில் நடத்தப்படும் அடிமட்டச் சங்கங்களுக்கு மேலும் பணபலம் ஊட்டுவதற்காக, அருகிலுள்ள பொதுத்துறை நிறுவனங் களும், மற்ற வணிக வங்கிகளும் அவற்றிற்கு நிதி வசதியளிக்க வாய்ப்பான ஒரு புதிய திட்டத்தைத் தொடங்கியுள்ளது.

**வேளாண்மை மறுநிதிக் கூட்டுரு (Agricultural Refinance Corporation)**

மிக அண்மைக் காலம்வரை வேளாண்மை உற்பத்தி சரியாகப் பெருகாததற்கு, இத் துறை நிறுவனங்கள் (institutions) இதில் முதலீடு செய்வதற்குப் போதுமான நிதிவளம் உடையவையாக இல்லாமல் இருந்ததே ஒரு முக்கியக் காரணமாகும். இப் பிரச்சினை யின் பெரிய அளவை 1954 லேயே அகில இந்தியக் கிராமக் கடன் ஆய்வுக் குழு நன்கு கோடிட்டுக் காட்டியது. அக் குழு, இதற்கு, நிவாரணமாக இடைநிலைக் காலக் கடன், நெடுங்காலக் கடன்கள் மூலம் நிரந்தரமாக நிதிவசதி செய்வதற்கு ஏற்ற வாய்ப்புகளை அமைக்க வேண்டும் என்று பரிந்துரைத்தது.

அதன்படி முதல் முயற்சியாக, தேசிய வேளாண்மை நிதி (நெடுங்காலச் செயல்பாடு) என்று ரிசர்வு வங்கியால் தோற்றுவிக்கப் பட்டது. இதுவும், நெடுங்கால வேளாண்மைத் திட்டங்களுக்கு உதவுவதற்கென்றே உருவாக்கப் பெற்றது. ஆனால், இந் நிதி, மத்திய நிலவள வங்கிகள் வெளியிட்ட கடன் பத்திரங்களை வாங்க வும், மாநில அரசுகள் கூட்டுறவு நாணயச் சங்கங்கள் பங்கு மானியம் வழங்குவதற்குமே பயன்படுத்தப்பட்டதால், வேளாண்மைக்கான இடைநிலை, நெடுங்காலக் கடன் வாய்ப்புகள் முன்போலவே சூனிய நிலையில்தாம் (void) இருந்தன.

மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் வேளாண்மை உற்பத்தியைப் பெருக்குவதன் அவசியத்தை வலியுறுத்தியது. இத் துறையில், ஏற்கெனவே இருக்கும் கூட்டுறவு நிலவள வங்கிகள் உள்ளிட்ட நிதி நிலையங்களின் நிதிப்பற்றாக் குறையை ஒப்புக் கொண்டதோடு, வேளாண்மை உற்பத்தியில் பெருக்கமும் விரைவும் ஏற்பட, இந் நிலையங்களுக்கு அப்போதைக்கப்போது நிதிவசதி செய்து தர தேசிய மட்டத்தில் ஒரு மறு நிதியளிப்பு நிலையம் தோற்றுவிக்க வேண்டி யதன் இன்றியமையாமையும் வலியுறுத்தியது.

இந்தப் பின்னணியில்தான், இத் துறையில் ஏற்கெனவே இயங்கி வரும் நிறுவனங்களுக்குப் பக்க பலமாகச் சட்ட பூர்வமான வேளாண்மை மறுநிதியளிப்புக் கூட்டுரு பாராளுமன்றச் சட்டம் ஒன்றினால் நிறுவப்பட்டது. அது 1963 ஜூலை முதல் தேதியிலிருந்து செயல்படத் தொடங்கியது.

**கூட்டுருவின் நோக்கங்கள்**

வேளாண்மை மறு நிதியளிப்புக் கூட்டுரு, முக்கியமாக மத்திய நிலவள வங்கிகளும் (Central Land Development Banks) மாநிலக் கூட்டுறவு வங்கிகளும் (State Co-operative Banks), பிற வணிக வங்கிகளும் தங்கள் நிதிப்பற்றுக் குறையினுலோ, தங்கள் சட்ட திட்டங்களுக்கு ஒத்துவராத நிலையினுலோ, உருவாகும் பெரிய வேளாண்மை வளர்ச்சித் திட்டங்களுக்கு உதவுவதற்காகவே தோற்றுவிக்கப்பட்ட ஒரு மறுநிதியளிப்பு நிறுவனமாகும் (Refinancing Agency). இது ஏற்கனவே இயங்கி வரும் வேளாண்மைக் கடன் வசதி நிலையங்களுக்கு ஒரு மாற்றமைப்பாகத் தோற்றுவிக்கப்படவில்லை. சாதாரணமாக நீண்டகால, இடைநிலைக் காலக் கடன் வசதி ஏற்பாடுகளுக்கும், ஏற்கெனவே இருக்கும் ரிசர்வு வங்கித் திட்டத்துக்கும் ஒரு புதிய உருவம் கொடுக்கப்பட்டதன்று.

இக் கூட்டுரு செயல்படத் தொடங்கிய நாளிலிருந்து முற்றிலும் முன்னேற்றமும் வளர்ச்சியும் தரக்கூடிய சில பொறுப்புகளை ஏற்றுச் செயல்பட்டு வருகிறது. தனது மறு நிதியளிப்பு மூலம் நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்கு உதவுவதோடு மட்டுமல்லாமல் வளர்ச்சிப் பிரதேசங்களைத் தேர்ந்தெடுப்பதிலும், வளர்ச்சித் திட்டங்கள் தீட்டி அவற்றைச் செயல்படுத்துவதற்குத் தேவையான துறைத்திறன் (Expertise) ஆலோசனைகளையும் மிக்க ஆர்வத்துடன் வழங்கியுதவுகிறது. நாட்டு முன்னேற்றத்தால் தனது பணியின் முக்கியத்துவத்தைப் பூரணமாக உணர்ந்து, வருகின்ற ஆண்டுகளுக்குக் கீழ்க்கண்ட கொள்கைகளைத் தனது நோக்கங்களாக வைத்துள்ளது.

1. தேசியத் திட்டங்களில் விதிக்கப்படும் குறியளவை (Target) யுடைய, உற்பத்திப் பெருக்கத்திற்குத் தேவையான அளவுக்குத் தகுதியுடைய நிறுவனங்களுக்கு மறு நிதியளிப்பு வசதி வழங்குதல்.

2. வேளாண்மை வளர்ச்சி மூலம் தேசிய வருமானத்தைப் பெருக்கும் பரவலான பொருளாதார முன்னேற்றத்தையுடைய பல வகைகளில் கடன்களை வழங்குதல்.

3. இதுவரையில் அரசுத் துறைகளோ, கடன் வழங்கு நிறுவனங்களோ கவனிக்காமல் விட்ட பிரதேசங்களின் வேளாண்மை வளர்ச்சிக்கு உதவி, அதன் மூலம் பிரதேச ஏற்றத் தாழ்வுகளை நீக்குவது.

4. சமூகத்தில் புலவீனப்பட்ட சிறிய, சராசரி உழவர்களின் நன்மைக்காகத் தீட்டப்படும் திட்டங்களுக்குத் தனிப்பட்ட கவனம் செலுத்தி உதவி செய்தல்.

5. கிடைக்கும் இயற்கை வளங்களை முழுவதாகப் பயன் படுத்தும் நோக்கோடு திட்டப்படும் திட்டங்களின் தொழில் நுணுக்கத் திறத்தை வலியுறுத்தல்.

6. அரசுத் துறை நிறுவனங்கள் சிக்கனமும் நிதி வாய்ப்பு முடைய நல்ல திட்டங்களைத் தீட்டுவதிலும், செயல்படுத்துவதிலும் உதவி செய்தல்.

7. நிதியளிக்கும் வங்கியின் பிரதிநிதிகளுடனும், தொடர் புடைய அரசாங்க அதிகாரிகளுடனும், கலந்துரையாடிப் புதுத் திட்டங்களை உருவாக்குதல்.

**செயல்படும் துறைகள்**

இக் கூட்டுருவின் மறு நிதியளிப்புத் திட்டம் வேளாண்மை மட்டு மல்லாது, அதைச் சார்ந்த கால்நடை வளர்த்தல், பால் பண்ணை, கோழிப் பண்ணை, கடலோரங்களிலும் உள்நாட்டிலும் மீன் பண்ணை கள் உருவாக்கிப் பராமரித்தல் முதலான பல்வேறு வளர்ச்சிப் பணி களுக்கு உதவுகிறது, எல்லாவற்றிலும் கீழ்க்கண்ட திட்டங்களுக்குச் சிறப்பாக உதவி செய்கிறது,

1. ஒரு குறிப்பிட்ட நிலப் பரப்பிற்குப் பயன்படும் படியான நன்கு திட்டமிடப்பட்ட சிறிய நீர்ப்பாசனத் திட்டங்கள்.

2. நீர்ப்பாசனத் திட்டங்களின் கீழ் நிலத்தைச் சீர்திருத்தவும், பண்படுத்தவும் உதவுதல்.

3. பயிர்களுக்கு வரும் நோய்களைத் தடுக்கவும், பூச்சிகளைக் கொல்லவும் வானத்திலிருந்து மருந்து தெளித்தலுக்கு உதவுதல்.

4. தேயிலை, காப்பி, ரப்பர், முந்திரி, தென்னை, பாக்கு, ஏலக் காய் முதலான தோட்டப் பயிர் வேளாண்மை வளர்ச்சிக்கு உதவுதல்.

5. விளைபொருள் விற்பனைச் சந்தை வளர்ச்சிக்கும், அச் சந்தையை விவசாயிகளுக்கும் தனிப்பட்ட வணிக முகவர்களுக்கும் (Entrepreneurs) நன்முறையில் பயன்படுத்திக் கொள்ள ஏதுவாகும் விளைபொருள் பண்டக சாலைகளைக் கட்டுவதற்கு உதவி செய்தல்.

6. கால்நடைப் பண்ணை, பால் பண்ணை, மீன் பண்ணை, கோழிப் பண்ணை ஆகியவற்றின் வளர்ச்சிக்கு உதவுதல்.

**உதவிகளின் வகைகள்**

தற்போதைக்குக் கீழ்க்காணும் வகைகளில் உதவிகள் இக் கூட்டுருவின் மூலம் வழங்கப்படுகின்றன.

1. மைய நிலவள வங்கிகள் (Central Land Development Banks) மாநிலக் கூட்டுறவு வங்கிகள் (State Co-operative Banks) பட்டியலில் சேர்ந்த வணிக வங்கிகள் (Scheduled Commercial Banks) ஆகிய வற்றிற்கு இக் கூட்டுருவின் மறு நிதியளிப்பு மூலம் கடன்களும் (Loans) முன்னளிப்புகளும் (Advances) வழங்கல்.

2. ஒரு சில தனிக் கவனக் காரியங்களுக்காக (Exceptional cases) கூட்டுறவுச் சங்கங்களுக்கு, ரிசர்வு வங்கியின் ஒப்புதலின் பேரில், நேரடியாகவே கடன்களும் முன்னளிப்புகளும் வழங்கல்.

3. முதலும், வட்டியும் திருப்பிச் செலுத்தப்படுவதற்கு, தொடர்புடைய மாநில அரசுகளால் உத்திரவாதமளிக்கப்பட்ட, தகுதியுடைய நிறுவனங்களின் கடன் பத்திரங்களை (debentures) வாங்கி யுதவுதல்.

4. மத்திய அரசின் முன் ஒப்புதலின் பேரில் (prior approval) வெளிநாடுகளிலிருந்து வாங்கப்படும் நிலை முதல் தளவாடங்களுக் கான (Capital goods) கிரயத்தைப் பின் செலுத்தும் முறையில் செலுத்த (deferred payments) தனது பொறுப்புறுதியை (guarantee) வழங்குதல்.

இக் கூட்டுரு முற்றிலும் ஒரு மறுநிதிய (Refinancing) நிறுவன மாகும். ஏற்கெனவே செயல்பட்டு வரும் கூட்டுறவு வங்கிகளும், ஏனைய நிறுவனங்களும், தங்கள் கட்டுத் திட்டங்களுக் குட்பட்டு உதவி செய்ய முடியாத திட்டங்களுக்கும், நீண்ட காலக் கடன் தேவைப்படும் திட்டங்களுக்கும், உதவி செய்வதற்காகவே இது தோற்றுவிக்கப் பட்டதாகும்.

இக் கூட்டுருவில் அங்கத்தினராகும் உரிமை இந்திய வங்கி மைய நிலவள (அல்லது அடைமான) வங்கிகள் (Central Land Development or Mortgage Banks) மாநிலக் கூட்டுறவு வங்கிகள், பட்டியலில் சேர்ந்த வணிக வங்கிகள், (Scheduled Commercial Banks) ஆயுட் காப்புறுதிக் கூட்டுருக்கள், முதலீட்டு நிறுவனங்கள் (Investment Companies) கூட்டுறவுக் காப்புநிதிச் சங்கங்கள் (Co-operative Insurance Societies) ஆகியவற்றுக்குத்தாம் உண்டு. இக் கூட்டுருவின் பங்குகளுக்கு (Shares). மத்திய அரசு தனது பொறுப்புறுதியை (guarantee) அளித்துள்ளது. அத்துடன், முதலைத் திருப்புவதற்கும் ஆண்டுதோறும் ஓரளவு இலாப ஈவு (Minimum Annual Dividend) வழங்குவதற்கும் மத்திய அரசு உத்திரவாத மளிக்கிறது.

**வளமைச் சாதனங்கள் (Resources)**

இக் கூட்டுருவின் செலுத்து மூலதனம் (Paid up capital) 20 கோடி ரூபாய்கள். காப்பு நிதி (Reserve) ஒரு கோடி ரூபாய். இத்துடன், ஆவணங்களும் (Bonds) கடன் பத்திரங்களும் (debentures) வெளியிடவும், ரிசர்வு வங்கியிடமிருந்தும் நீண்டகாலச் செயல் பாட்டுக்கென (Long term operations) ஒதுக்கப்பட்ட தேசிய வேளாண்மை நிதியிலிருந்தும் (National Agricultural Fund), மத்திய அரசிடமிருந்தும் அவ்வப்போது கடன் வாங்கிக் கொள்ள அனுமதிக்கப்பட்டுள்ளது. இது, மத்திய அரசிடமிருந்தும் ஓராண்டுக்கு மேற்பட்ட காலத் தவணைகளுக்கு வைப்புகளை (deposits) ஏற்றுக் கொள்ளலாம், மத்திய அரசிடமிருந்து வாங்கும் கடன்கள் சர்வதேச வளர்ச்சிக் கூட்டுருவிடமிருந்து (International Development Association) பெறும் கடன்களையும் உள்ளிட்டதாகும். வெளிச் சந்தையில் பொது மக்களிடமிருந்து திரட்டும் கடன் ஆவணங்கள் (Bonds) வெளியிட்டுப் பெறக் கூடியதையும் உள்ளிட்டதாகும். கூட்டுரு, செலுத்து மூலதனம், காப்பு நிதி ஆகிய இரண்டையும் கூட்டி வருகின்ற தொகையைப் போல இருபது மடங்கு வரையிலும் கடன் பெற்றுக் கொள்ளலாம். இத்துடன், இந்திய அரசின் ஒப்புதல் பெற்று, ஒரு வங்கியிடம் அல்லது நிதி நிலையத்திடம் அந்நியச் செலாவணியிலும் கடன் பெற்றுக் கொள்ளலாம்.

| | பங்குதாரர்களின் எண்ணிக்கை | பங்குகளின் மதிப்பு (ரூபாய் கோடியில்) |
|---|---|---|
| ரிசர்வு வங்கி | 1 | 8·69 |
| மைய நிலவள வங்கிகள் | 19 | 2·34 |
| மாநிலக் கூட்டுறவு வங்கிகள் | 24 | 1·42 |
| பட்டியலிலிட்ட வணிக வங்கிகள் | 63 | 2·33 |
| இந்திய ஆயுள் காப்பீட்டுக் கூட்டுரு | 1 | 0·19 |
| மற்றக் காப்பீட்டு நிறுவனங்களும், சங்கங்களும் | 4 | 0 03 |
| மொத்தம் | 112 | 15 00 |

## கூட்டுருவின் நிதித் திட்டங்கள் பற்றிய விவரங்கள்

| | 1973 ஜூன் (கோடி ரூபாய்கள்) | | 1973 டிசம்பர் (கோடி ரூபாய்கள்) | |
|---|---|---|---|---|
| சொந்த நிதிகள் | | 15·82 | | 15·82 |
| மூலதனம் (செலுத்தப்பட்டது) | 15·00 | | 15·00 | |
| காப்பு நிதி (வரி) | 0·82 | 15·82 | 0·82 | 15·82 |
| தனி வைப்பு (Special Deposit) | | 1·17 | | 1·41 |
| ஆவணங்கள் | | 38·71 | | 55·21 |
| கடன்கள் | | 163·05 | | 167·44 |
| மத்திய அரசிடமிருந்து | 79·64 | | 79·64 | |
| ரிசர்வு வங்கியிடமிருந்து | 38·20 | | 35·26 | |
| உலக வங்கியிடமிருந்து | 1·20 | | 1·20 | |
| சர்வதேச வளர்ச்சிக் கூட்டுருவிடமிருந்து (IDA) | 44·01 | | 44·01 | |
| மொத்தம் | 163·05 | 218·75 | 167·44 | 239·88 |

| | திட்டங்களின் எண்ணிக்கை (No. of Schemes) | கூட்டுருவின் செலவுப் பொறுப்பு (கோடி ரூபாய்கள்) |
|---|---|---|
| சிறிய நீர்ப்பாசனத் திட்டங்கள் | 553 | 367·43 |
| நிலச் சீர்திருத்த/நிலப்பாதுகாப்புத் திட்டங்கள் | 78 | 67·08 |
| பண்ணை இயந்திரங்கள் | 15 | 7·31 |
| தோட்ட வேளாண்மை | 205 | 32·82 |
| கோழிப் பண்ணை | 15 | 0·86 |
| மீன் பண்ணை | 19 | 5·30 |
| பால் பண்ணை | 23 | 3·98 |
| ஆடு வளர்ப்பு | 1 | 0·38 |
| பண்டக வசதி/சந்தைக் கூடங்கள் வசதி | 14 | 16·27 |
| மொத்தம் | 923 | 501·43 |

| ஆண்டுகள் | அனுமதிக்கப் பெற்ற திட்டங்கள் | அனுமதிக்கப் பெற்ற திட்டங்கள் | வழங்கப் பெற்ற திட்டங்கள் |
|---|---|---|---|
| 1963-68 | 128 | 25 கோடி | 13 கோடி |
| 1968-73 | 795 | 266 கோடி | 206 கோடி |

**செயல் முறை**

நிருவாகச் செயல்களுக்குக் காப்புநிதி உருவாக்கவும் ஈடு கட்டும் வகையில். கடனைப் பயன்படுத்துவோருக்கு நிறுவனங்கள் விதிக்கும் வட்டி வீதத்திற்கும், இக் கூட்டுருவின் வட்டி வீதத்திற்கும் எப்போதும் இடைவெளி (difference) இருக்கும்படியாக அப்போதைக் கப்போது கண்காணித்து வரப்படுகிறது. கூட்டுரு, மறு நிதியளிப் புக்குரிய வட்டி வீதத்தை, 1973 ஜூன் 25 முதல் 6½% லிருந்து 7% ஆக உயர்ந்திற்று. 1974 ஆகஸ்ட் 13 ஆம் தேதி அதை மேலும் உயர்த்திச் சிறிய நீர்ப்பாசனத் திட்டங்களுக்கு 7½% ஆகவும் மற்றத் திட்டங்களுக்கு 8% ஆகவும் நிலைப்படுத்தியது.

நிலப் பாதுகாப்பு (Land Reclamation) பழத் தோட்டங்கள் (orchards) பிற தோட்டப் பயிர் வேளாண்மை (plantation) ஆகிய வற்றுக்குக் கொடுக்கப்படும் கடன்களை 15 ஆண்டுகளுக்குள் திருப்பித் தர வேண்டும். விவசாயிகள் திட்டச் செலவில் ஒரு பகுதியைச் சிறிய நீர்ப்பாசனத் திட்டத்திற்கென்று ஒதுக்கும்படி கேட்டுக் கொள்ளப் படுகிறார்கள்.

மாநில அரசுகளின் உத்திரவாதத்தின் பேரில் மாநில நிலவள வங்கிகளுக்கு மறு நிதியளிக்கப்படுகிறது. வணிக வங்கிகள் இம் மாதிரியான உத்திரவாதத்தைப் பெறுவது சிரமமாகையால் அவை பெற்றுள்ள பிணையீடுகளை இக் கூட்டுருவின் பேருக்குத் துணை அடை மானம் செய்யும்படி கோரப்படும். 1973 செப்டம்பரில் வேளாண்மை மறு நிதியளிப்புக் கூட்டுருவின் சட்டத்தில் ஒரு திருத்தம் செய்யப் பட்டு, சில குறிப்பிட்ட திட்டங்களுக்குச் சில விதி முறைகள் தளர்த் தப்பட்டன. வணிக வங்கிகள் வேளாண்மை நிதியீட்டில் ஆர்வத் துடன் ஈடுபட கூட்டுரு சில ஊக்குவிப்பு முறைகளைக் கையாண்டது.

**கூட்டுருவின் நிர்வாகம்**

கூட்டுருவின் நிர்வாகம் 9 இயக்குநர்களைக் கொண்ட ஒரு இயக்குநர் குழுவிடம் (Board of Directors) ஒப்படைக்கப்

பட்டுள்ளது. அதற்கு ரிசர்வு வங்கியின் துணை ஆளுநர் தலைவர் அதன் நிருவாக இயக்குநர் (Managing Director) ரிசர்வு வங்கியால் நியமிக்கப்படுகிறார். இது தவிர, மேலுமொரு இயக்குநர் ரிசர்வு வங்கியால் நியமிக்கப்படுகிறார். இந்திய அரசு மூன்று அதிகாரிகளை இயக்குநர்களாக நியமிக்கிறது. ஏனைய மூன்று இயக்குநர்கள் இக் கூட்டுருவின் பங்குதாரர்களாகிய (1) மைய நிறுவன வங்கிகள் (Central Land Devolopment Banks) (2) மாநிலக் கூட்டுறவு வங்கிகள் (State Co-operative Banks) (3) ஆயுள் காப்பு நிதிக் கூட்டுரு (Life Insurance Corporation) காப்பு நிதி முதலீட்டு நிறுவனங்கள் (Insurance and Investment Companies) பிற நிதி நிலையங்கள் ஆகியவற்றின் பிரதிநிதிகளாகத் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர்.

இயக்குநர் குழுவினால் அமைக்கப்பட்ட நிருவாகக் குழு அதன் கட்டுப்பாட்டின் கீழ், அதன் அதிகாரங்களைச் செயல்படுத்தி அன்றாட நிருவாகப் பொறுப்பை ஏற்று நடத்துகிறது. அக் குழுவில் இயக்குநர் குழுத்தலைவர், நிருவாக இயக்குநர், மேலும் இரண்டு உறுப்பினர்கள் ஆக நால்வர் இருப்பர். இவ் விரண்டு உறுப்பினர்களில் ஒருவர் அரசினால் நியமிக்கப்படுகிறார். மற்றவர் தேர்ந்தெடுக்கப்படுகிறார்.

அங்கங்கு செயல்படும் திட்டங்களைக் கண்காணிக்கவும், வேளாண்மை வளர்ச்சிக்காகப் புதுத் திட்டங்கள் உருவாக்குவதில் மாநில அரசு அதிகாரிகளுக்கும் நிதி நிறுவனங்களுக்கும் உதவி செய்யவும் அகமதாபாத், பெங்களூர், போப்பால், புவனேஸ்வர், பம்பாய், கல்கத்தா, சண்டிகர், ஹரியானா, கௌஹாத்தி, ஹைதராபாத், ஜெய்ப்பூர், லக்னோ, சென்னை, டில்லி, பாட்னா, திருவனந்தபுரம் ஆகிய இடங்களில் கேந்திர அலுவலகங்களைத் திறந்துள்ளது.

இக் கூட்டுரு தொடங்கி, முதல் பத்தாண்டுகளில்,(அதாவது 1963 ஜூலையிலிருந்து 1973 ஜூன் வரையிலான 10 ஆண்டுகளில்) இக் கூட்டுரு, மொத்தம் 219 கோடி ரூபாய் கடன் பட்டுவாடா செய்துள்ளது. 501 கோடி ரூபாய் வழங்கப் பொறுப்பேற்றுள்ளது. வளர்ச்சிப் பணிகளில் இக் கூட்டுரு, ஆர்வத்துடன் பங்கெடுத்துக் கொள்கிறது. வேளாண்மைக்கு இதுவரை சிறுசிறு அளவிலும் குறுங்காலக் கெடுவிலுமே வழங்கப்பட்டு வந்த கடன் முறைகள் மாறி வங்கிகள் நெடுங்காலக் கடன்களும், பெருந் தொகைகளும் கடனாக வழங்குவதற்கு முன் வரும்படியான ஓர் அடிப்படை மாற்றத்தையே தோற்றுவித்துள்ளது.

**சேமிப்புக் கிடங்குத் திட்டம் (Ware Housing Programme)**

உழவர்களுக்குக் கடன் வசதியளிப்பதில் சேமிப்புக் கிடங்குகளும் மிகச் சிறந்த பணியாற்றுகின்றன. மேலை நாடுகளில், குறிப்பாக

அமெரிக்க ஐக்கிய நாடுகள், கனடா போன்ற நாடுகளில் சேமிப்புக் கிடங்கு முறை (Ware Housing) மிகவும் முன்னேறியுள்ளது. இந்தியாவில் மிக அண்மைக் காலமாகத்தான் இத் திட்டம் அரசு ஆதரவுடன் முன்னேறி வருகிறது.

நெடுங்காலமாக இந்தியாவில் வேளாண்மை விளைபொருள்களைச் சேமித்து வைப்பதற்குப் போதுமான கிடங்குகள் வசதியில்லை. உழவர்கள் தங்கள் தங்கள் இல்லங்களிலும் பொதுவிடங்களிலும் பராமரித்து வரும் மரக்குதிர்கள், மண்தாழிகள், மரசல்கள் முதலானவை தானியங்களுக்குப் போதுமான பாதுகாப்பு அளிக்க இயலாதனவாகும். இக் குறைகள் மலிந்த சேமிப்பு முறைகளாலும், பறவைகள், வெட்டுக்கிளி, பூச்சிகள், எலி, பெருச்சாளி முதலான பிராணிகளாலும் இந்திய வேளாண்மை உற்பத்தியில் ஆண்டுக்கு, குறைந்தது 15% முதல் 20% வரை பொருள்கள் விரயமாவதாக ஆய்வாளர்கள் மதிப்பிடுகின்றனர். அதாவது 1,500,00,00,000 (ஆயிரத்து ஐந்நூறு கோடி) ரூபாய் மதிப்புள்ள தானியங்களும் பிற பொருள்களும் விரயமாகின்றன. இப் பொருள் விரயத்தோடு மட்டுமல்லாது, தானியங்களிலும் பிற ஏற்றுமதிப் பொருள்களிலும் அமிலத்தன்மையடைதல் முதலான ரசாயன மாற்றங்களால் அவற்றின் தரமும் குறைந்து விடுகிறது; பருத்தி முதலானவற்றில் இழைகள் உறுதியற்றனவாகி விடுகின்றன. இவ்வகைக் காரணங்களால், பன்னாட்டு வாணிபச் சந்தையில் நம் நாட்டுப் பொருள்கள், பிற நாட்டு, குறிப்பாக நவீன முறைச் சேமிப்புக் கிடங்கு வசதிகள் (Modern ware housing facilities) பெருகிய நாட்டுப் பொருள்களுடன் போட்டியிட முடியவில்லை. எனவே, நம் நாட்டிலும், நவீனமுறைச் சேமிப்புக் கிடங்குகளை உருவாக்க வேண்டும் என்று ராயல் கமிஷன் (Royal Commission) 1928-ல் வெளியிட்ட அறிக்கையிலிருந்து வேளாண்மைப் பொருளாதாரத்தை (Agricultural Economy) ஆராய்ந்த குழுக்கள் பலவும் நெடுநாள்களாகத் திரும்பத் திரும்ப வலியுறுத்தி வந்தன. எந்தக் குழுவும், நவீனச் சேமிப்புக் கிடங்குகள் இல்லாத பெருங்குறையைச் சுட்டிக் காட்டத் தவறவில்லை. எனவே, பல ஆய்வுக் குழுக்களின் பரிந்துரைகளுக்குப் பின் 1956 ல் பொதுத் துறையில் (public sector) சேமிப்புக் கிடங்குகள் உருவாக்குவதற்குப் பாராளுமன்றம் ஒரு சட்டத்தை நிறைவேற்றியது. (The Agricultural produce Development and ware housing Corporation Act 1956.)

அச் சட்டம் கீழ்க் காணும் மூன்று நிறுவனங்கள் அமைக்க வகை செய்தது.

1. தேசியக் கூட்டுறவு வளர்ச்சி, சேமிப்புக் கிடங்கு வாரியம் (National Co-operative Development and Ware Housing Board)

2. மத்திய சேமிப்புக் கிடங்குக் கூட்டுரு (Central Ware Housing Corporation)

3. ஒவ்வொரு மாநிலத்திலும் மாநிலச் சேமிப்புக் கூட்டுரு (State ware housing Corporations)

தற்போது நிலவும் சேமிப்புக் கிடங்குத் திட்டம் (Ware housing programme) 1957-ல் தொடங்கப் பெற்றதாகும். விளை பொருள் களைச் சேதமில்லாமல் அறிவியல் முறையில் பாதுகாக்கவும், உழவர்கள் அப் பொருள்களை ஈடுகாட்டி எளிதான முறையில் கடன் பெற்று, தங்கள் உடனடிப் பொருளாதாரச் சிக்கல்களிலிருந்து விடுபட்டுக் கொள்ள ஒரு நல்ல வாய்ப்பு அளிக்கவும் ஆகிய இரு பெரும் நோக்கங்களுடன் இத் திட்டம் தொடங்கப் பெற்றதாகும். இத் திட்டத்தின் பிற நோக்கங்களாவன:

1. உழவர்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்தல்.

2. சந்தையில் அவர்களது பொருள்களுக்குச் சரியான விலை (optimum price) கிடைக்கும் வரை அப் பொருள்களைச் சேதமின்றிப் பாதுகாத்துக் கொடுத்தல்.

3. விளை பொள்களின் (Agricultural produce) மதிப்பில் 75% வரை மிகக் குறைந்த சலுகை வட்டியில் (Concessional rate of interest) அவர்களுக்குக் கடன் வழங்கல்.

4. சந்தைகளில் சாதாரணமாக நிலவும் கள்ள அளவைகளும் நிறுவைகளும் இல்லாமல், நியாயமான அளவைகளிலும், நிறுவைகளிலும் தம் பொருள்களை விற்க வாய்ப்பளித்தல்.

5. உழவர்கள், தம் பொருள்களை விற்பனை செய்கின்றபோது, அந்த விற்பனைத் தொகையிலிருந்து மதக் காரியங்களுக் காகவும். தர்ம காரியங்களுக்காகவும் அவர்களுடைய ஒப்புதலின்றியே வியாபாரிகளால் பிடித்துக் கொள்ளப் படும் பிடிதலங்களிலிருந்து அவர்களைப் பாதுகாத்தல்.

6. விளை பொருள் சந்தைகளிடையே ஒன்றுக்கொன்று நல்லதொரு தொடர்பையும் உறவையும் ஏற்படுத்தல்.

7. சந்தையில் உழவர்களை மோசம் செய்து தாங்கள் கொழுக்கின்ற இடைத்தரகர்களிடமிருந்து அவர்களைப் பாதுகாத்தல்.

8. தற்போதைய சந்தையில் நிலவுகின்ற தகாத பேர முறைகளால் உழவர்களின் நலன் பாதிக்கப்படாமல் காத்தல்.

9. உணவுப் பொருள்களைச் சேர்த்து வைக்கும்போது, விஷக் கிருமிகள், பூச்சிகள், எலி, அணில் முதலான பிராணி களால் ஏற்படும் அழிவுகளிலிருந்து பாதுகாத்தல்.

10. தரமான விதைகள், ரசாயன உரங்கள், பூச்சிக் கொல்லி மருந்துகள், நவீன உழவுக் கருவிகள் முதலானவற்றைச் சேகரித்து வைத்து அதிகமான உணவுப் பொருள் விளை விப்பதில் உழவர்களுக்குப் பெரிதும் உதவுதல்.

11. குறைந்த வாடகைக்குக் கோணிகள் வழங்கல். இன்னும் பல வகைகளில் உழவர்களுக்கு உதவுதல்.

இந்திய மக்கள் தொகையில் மூன்றில் இரண்டு பங்குக்கு மேல் உழவர்களாய் உள்ளனர்; தேசிய வருமானத்தில் 50% வேளாண்மைப் பொருள்களிலிருந்துதான் கிடைக்கின்றது; அந்நியச் செலா வணியில் 80% நமக்கு வேளாண்மைப் பொருள்களின் மூலமாகத் தான் கிடைக்கின்றது. எனவே, வளர்ச்சித் திட்டங்கள் பல தீட்டு வதோடு மட்டும் நில்லாது, நம் தேசியச் செல்வமாகிய வேளாண்மை யையும் உழவர்களையும் பாதுகாத்தால் ஒழிய நமது பொருளா தாரம் ஒன்றும் வளர்ச்சியுறாது.

விளை பொருட் சேமிப்பு என்பது விற்பனைத் துறையில் (marketing) ஒரு முக்கியமான இடத்தை வகிக்கிறது. விளைபொருள்களைச் சேமித்துப் பாதுகாத்தல் மூன்று நிலைகளில் செய்யப்படுகிறது.

அவையாவன:

1. கிராமச் சேமிப்புக் கிடங்குகள்,
2. மாநிலச் சேமிப்புக் கிடங்குகள்.
3. மத்தியச் சேமிப்புக் கிடங்குகள்.

இம் மூன்று நிலைகளிலும் விளை பொருள்கள் சேமித்துப் பாது காக்கப் படுகின்றன.

கிடங்குக்குக் கொண்டு வரப்படுகின்ற பொருள்கள் சரியாக அளக்கப்பட்டுத் தரம் பிரித்து வைக்கப்படுகின்றன. அப் பொருள்கள் விற்பனையாகின்ற நாள்வரை, அவற்றின் பாதுகாப்பிற்குக் கிடங்கு நிருவாகி பொறுப்பேற்றுக் கொள்கிறார். ஒவ்வொரு பொருளிலும் மாதிரியெடுத்து மாதிரிப் பைகளிலொன்று பொருள் உரிமை யாளருக்குக் கொடுக்கப்படுகிறது. அத்துடன், பொருளின் தரம், அளவு, உத்தேச விலை மதிப்பு ஆகிய விவரங்களடங்கிய ரசீது ஒன்றும் கொடுக்கப்படுகின்றது. பொருள் உரிமையாளராகிய

உழவர், அந்த ரசீதை, இந்திய ஸ்டேட் பாங்கிடமோ, ஒரு பட்டியலிலிட்ட வங்கியிடமோ (State Bank of India or a Scheduled Bank) கொண்டு காட்டி, தமது பொருள் மதிப்பில் 75% வரை கடன் பெற்று, தமது உடனடிப் பணமுடையைத் தீர்த்துக் கொள்ளலாம்.

வங்கிகள் சேமிப்புக் கிடங்கு ரசீதுகளின் பேரில் (Ware house receipts) கடன் வழங்கும்போது வட்டியில் 1% சலுகை (Rebate) அளிக்கின்றன. எனவே இவ் வசதிகளை நன்கு பயன்படுத்திக் கொண்டு உழவர், சந்தையில் தாம் எதிர்பார்க்கும் விலை வரும் போது தம் பொருள்கள் முழுவதையுமோ, ஒரு பகுதியையோ விற்றுக் கொள்ளலாம்.

சேமிப்புக் கிடங்குகளில் ஏற்றுக் கொள்ளப்படும் பொருள்களுக்கு, மிகக் குறைவான சாதாரண வாடகைதான் வசூலிக்கப் படுகிறது. கூட்டுறவுச் சங்கங்கள் பொருள்களைச் சேமிப்புக் கிடங்குகளில் சேர்த்து வைத்தால் கோணி ஒன்றுக்கு 3 பைசா குறைத்து வாடகை வசூலிக்கப் படுகிறது.

சேமிப்புக் கிடங்குகளில் வைக்கப்பட்டுள்ள பொருள்களுக்குத் தீ, திருடு, கொள்ளை ஆகியவற்றாலும் பிற தீங்குகளாலும் ஏற்படும் அழிவு இழப்புகளுக்கு ஈடுகட்டும் பொறுப்பைக் காப்புறுதி நிறுவனங்கள் (Insurance Companies) ஏற்றுக் கொள்கின்றன.

# 10. தொழில் துறை (நிதியீடு) நிதியம்

## (Industrial Financing)

மூலதனச் சந்தையைப் பற்றி இரண்டாவது அதிகாரத்தில் நாம் கண்டோம். இவ் வதிகாரத்தில் நெடுங்காலக் கடன் வசதிகள் அளிக்கும் சில நிறுவனங்களைப் பற்றி ஆராய்வோம்.

தொழில்களுக்கு இரண்டு வகை முதல் தேவை. ஒன்று நிலை முதல் (Fixed capital); மற்றொன்று நடை முதல் (Working capital). நிலை முதல், நிலம் கட்டடம், எந்திரச் சாதனங்கள் வாங்குவதற்குப் பயன்படுவது. நடை முதல், கச்சாப் பொருள்களை வாங்கவும் அவற்றைத் தேக்கி வைக்கவும் அன்றாடச் செலவு செய்யவும் பயன் படுவது.

ஒவ்வொரு தொழிலின் தேவைகளைப் பொறுத்து இம் முதல்களின் அளவு விகிதம் வேறுபடும். தேயிலைத் தோட்டத் தொழில் போன்ற சில தொழில்களுக்கு நிலை முதலைக் காட்டிலும் நடைமுதல் அதிகம் தேவைப்படும்.

**நிலை முதல் (Fixed capital)**

சாதாரணமாகத் தொழிலகங்கள், பொதுமக்களுக்குப் பங்குகளை விற்றே தங்களுக்குத் தேவையான நிலைமுதலை ஈட்டிக் கொள்கின்றன. சில நிறுவனங்கள் கடன் ஈட்டும் பத்திரங்களை (debentures) வழங்கியும் நிலை முதலில் ஒரு பகுதியை ஈட்டுகின்றன. மூலதனத்தில் ஒரு பகுதி கடன் ஈட்டுப் பத்திரங்களின் மூலம் ஈட்டப்படுகின்ற பொழுது, கடன் ஈட்டும் பத்திரங்களை மீட்டிய பின் இலாப ஈவு (Dividend) வழங்குவதில் தங்களுக்குச் சாதகமான நிலையை அடைகின்றன. ஆனால், கடன் பத்திரங்களுக்கு ஒவ்வோர் ஆண்டும் குறிப்பிட்ட வீதத்தில் வட்டி தரவேண்டியயுள்ளதால் தொழில் மந்தமான சில ஆண்டுகளில், இவ் வட்டியே மூலதனத்தைச் சிறுகச் சிறுக அழித்து விடுகிறது. எனவே, நிலை முதலைக் கடன் ஈட்டுப்

பத்திரங்களின் மூலம் ஈட்டுதல் சில நேரங்களில் அறிவுடைமையாகப் படவில்லை.

எந்தத் தொழிலும் நன்முறையில் இயங்க வேண்டுமென்றால், அதற்குத் தேவையான நிலை முதலை மட்டுமல்லாது, நடை முதலில் ஒரு பகுதியையும் பங்குகளின்(shares)மூலமே ஈட்டிக்கொள்ளுதல் நல்லது. வங்கிகளும் பிற நிதி நிலையங்களும், ஆவணங்களின் (Securities) முழு மதிப்புக்கும் கடன் வழங்குவதில்லை. அவற்றின் மதிப்பில் ஓரளவைக் குறைத்துக் கொண்டுதான் வழங்குகின்றன. எனவே, ஒரு தொழிலகம் தனது நடை முதலிலும் ஒரு பகுதியைப் பங்குகள் வழங்கி ஈட்டிக் கொள்வது மிக்க அறிவுடைமையாகும்.

இந்தியாவில் மூலதனம் இன்னும் வெளியில் உலவ அஞ்சுகிறது. மக்கள், தங்கள் சேமிப்புகளை தொழிலகங்களின் பங்குகளில் முதலீடு செய்ய விரும்பவில்லை. அதற்குப் பதிலாக நிலம், வீடு, நகை முதலானவற்றிலேயே முதலீடு செய்ய விரும்புகின்றனர்.

நம் நாட்டில் ஒரு வளர்ச்சியுற்ற பங்குச் சந்தையும் (Stock Exchange Market) இல்லை. மூலதனம் எளிதில் புரளாமல் இருப்பதற்கு இதுவும் ஒரு காரணமாகும். நிறுவனங்களின் பங்குகளை ஒப்புறுதியளிக்கச் (underwrite) சரியான, நிலையான நிலையங்கள் இல்லை. தவிரவும் பொது மக்களிடமிருந்து நிலைமுதல் ஈட்டுவதில் தொழிலகங்களுக்கு உதவி செய்ய எந்த முகவரும் (Agencies) இல்லை. எனவே, இந்தியாவில் பெரும்பாலான நிறுவனங்கள் பற்றுக்குறை மூலதனத்துடனேயே செயல்படுகின்றன.

### நடை முதல் (Working Capital)

கீழ்க்கண்டவை நடை முதல் வளச் சாதனங்களாகும் (Sources of working capital).

1. நிருவாக முகவர் (Managing Agents since abolished) (இம்முறை இப்போது செயல்படவில்லை.)
2. கடன் ஈட்டுப் பத்திரங்கள் (Debentures)
3. காப்பீட்டு நிறுவனங்கள் (Insurance Companies)
4. பொது மக்களின் வைப்புத் தொகை
5. நாட்டு வங்கிகள் (indigenous Banks)
6. கூட்டுப் பங்கு வங்கிகளும் ஸ்டேட் பாங்கும் (Joint Stock Banks and State Bank)
7. தொழில் நிதியீட்டுக் கூட்டுருவும் பிற நிலையங்களும் (Industrial Finance Corporation and other institutions)
8. அரசாங்கம்

### நிருவாக முகவர் (Managing Agents)

இந்தியாவில் தொழில் நிறுவனங்களைத் தோற்றுவித்து வளர்த்த ஆரம்பக் காலக் கட்டத்தில் பணச் சந்தை என்று ஒன்று இல்லை. ஒழுங்குபட்ட பணச் சந்தை இல்லாத ஒரு சூனிய நிலையைப் போக்கு வதற்காக வேண்டி 'நிருவாக முகவர்' முறை உருவாக்கப்பட்டது. இம் முறை இப்பொழுது நடை முறையில் இல்லை.

இந்தியக் கூட்டுப் பங்கு கம்பெனிச் சட்டம் (The Indian companies Act) 'நிருவாக முகவர்' நிலையைக் கீழ்க்கண்டவாறு விளக்குகிறது.

'நிருவாக முகவர் என்பவர் குறிப்பிட்ட ஒரு நிறுவனத்தின் உடன்பாட்டின்படி அந் நிறுவனத்தின் இயக்குநர்களின் ஏவலுக்கும் கட்டுப்பாட்டுக்கும் உட்பட்டு, அந் நிறுவன நிருவாகத்தின் முழுப் பொறுப்பையும் (உடன்பாட்டில் ஏதாகிலும் விதிவிலக்குக் குறிப்பிடப் பட்டிருந்தாலொழிய) ஏற்றுக் கொள்ளும் தனியொரு நபர் அல்லது பல நபர்களின் கூட்டுக் குழு (நிறுவனம் - firm) ஆகும். இவர் அல்லது இவர்கள் அந் நிறுவனத்திற்குப் பல நிலைகளில் உதவு கின்றனர். நிறுவனத்தின் நிருவாகிகளாகவும், நிதியாளராகவும், வளர்ப்போராகவும் செயல்படுகின்றனர்.'

### நிதியாளராக நிருவாக முகவர் (Managing Agents as financiars)

ஒரு நிறுவனம் புரட்டுகின்ற மூலதனத்தில் பெரும் பகுதியை நிருவாக முகவர்களே வழங்கினர். நிலை முதலுக்கும் (Fixed capital) நடை முதலுக்கும் (Working capital) அவர்கள் நிதி வழங்கினர். ஒரு நிறுவனம், தனது தொடக்க நிலையில் பொதுமக்களிடமிருந்து அதிகமான மூலதனத்தைத் திரட்ட முடியாது. எனவே, அது முதலில் வேலையைத் தொடங்குவதற்கு இம் முகவர்களே முதலில் மூலதனத்தை வழங்கினர். அவர்கள்,

(அ) நிறுவனத்தின் பங்குகளை (Shares) வாங்குவது

(ஆ) தங்கள் தனிப்பட்ட சேமிப்புகளிலிருந்து நிறுவனத் திற்குக் கடன்கள் வழங்குவது

(இ) பொதுமக்களிடமிருந்து வைப்பீடுகளைப் பெறுவது

(ஈ) நிறுவனத்திற்காக, புரோநோட்டுகளில் தாங்கள் பிணையாகக் கையொப்பமிட்டு வங்கிகளிடமிருந்து கடன்கள் பெறுதல்

ஆகிய செயல்களின் மூலம் நிறுவனத்திற்கு மூலதனத்தைத் தேடித் தந்தனர். இம் முகவர்கள், நிறுவனங்களின் கடன் ஈட்டுப் பத்திரங்களையும் வாங்கி உதவினர்.

இந்திய மக்கள் சாதாரணமாகத் தங்கள் சேமிப்புப் பணத்தைத் தங்கள் நம்பிக்கைக்குப் பாத்திரமானவர்கள் வசம் கொடுத்து வைப்பது வழக்கம். இவ்வகையில், இம் முகவர்கள் பொதுமக்களிடமிருந்து நிறைய வைப்புத் தொகைகளைப் பெற முடிந்தது. இவ் வைப்புத் தொகைகளே நிறுவனத்திற்கு நடை முதலாகப் பயன் படுத்தப்பட்டன. பம்பாயில் உள்ள பஞ்சாலைகளில் பல இவ்வகையில்தாம் தங்கள் நடைமுதலைப் பெற்றன. அஹமதாபாத்தில் இவ் வைப்புத்தொகைகள் தொழில் நிதியீட்டுக்கு மிக முக்கியமான சாதனமாக அமைந்துள்ளன, தொழில் நிறுவனங்களும் நிருவாக முகவர்களும் இவ் வைப்புத் தொகைகளை ஓராண்டு அல்லது ஆறு மாதத் தவணைகளுக்கு ஏற்றுக்கொண்டது. இத் தொகைக்கு 4½ சதவீதத்திலிருந்து 6 சதவீதம் வரை வட்டி கொடுத்தனர். நீண்ட கால வைப்புகளுக்கு இன்னும் அதிமான வட்டி கொடுத்தனர்.

இவ் வைப்புகள் மூலம் நிதி பெறுதல் நடைமுறையில் நிலவும் நல்ல சாதனமாக இருப்பினும் முழுமையாக நம்ப முடியாதவைகளாக இருந்தன. ஒரு நிறுவனம் நன்கு இலாபகரமாகச் செயல் பட்டுக் கொண்டிருக்கும்போது அதற்கு அதிமான தேவை ஏற்படுத்துவதில்லை. ஆனால், அச் சமயங்களில்தாம் மக்கள் அதிகமான வைப்புத் தொகைகளைக் கொடுக்க முன்வருகின்றனர். நிறுவனம், அவற்றை அச் சமயத்தில் தனக்கு இலாபகரமானதாகப் பயன் படுத்திக்கொள்ள முடியாது. சில வைப்புகள், குறுகிய கால அறிவிப்பில் திரும்பப் பெற்றுக் கொள்ளப்பட்டன. சாதகமற்ற காலங்களில் நிறுவனத்திற்கு அதிகமாகத் தேவைப்படும்போது இவ் வைப்புகள் கேட்கப் பட்டன. எனவே இவற்றைக் 'கேளிக்கை நண்பர்கள்' (Fair Weather Friends) ரகத்தில் சேர்க்கலாம்.

நவீன வங்கி முறைகள் வளர்ந்து வருவதால் வைப்புத் தொகைகளைத் தொழில் நிதியீடாகப் பயன்படுத்துவது சிறிது சிறிதாகக் குறைந்து வருகிறது.

வங்கிகள், நிருவாக முகவர்கள் உறுதியளித்தாலொழிய தொழிற் சாலைகளுக்குக் கடன் வழங்கத் தயங்குகின்றன. அவை நிருவாக முகவர்களின் வகையுடைமையைத்தான் (solvency) பெரிதாகக் கருதினவேயொழிய தொழிலகத்தின் செயல் திறத்தைக் கருத்திலேயே எடுத்துக் கொள்ளவில்லை. எனவேதான் வங்கிகளிடமிருந்து வாங்குகின்ற கடனுக்கு, இம் முகவர்கள் பிணையுறுதிக் (second signature) கையொப்பம் இடவேண்டியதிருந்தது.

பரவலாக நோக்கும் போது நிருவாக முகவர்கள், தொழில் நிதியீட்டுக்கு மிக இன்றியமையாததும் முக்கியமானதுமான பணிகளைச் செய்துள்ளனர். ஆனால் இம் முறையிலும் சில குறைகள் உண்டு.

குறைகள்

1. தொழிலகங்களில் நிருவாக முகவர்களின் ஆதிக்கம் மேலோங்கித் தொழில் நுணுக்கர்களின் ஆதிக்கம் தாழ்ந்து விடுகிறது. முகவர்கள் நிதி வழங்கியவர்கள் என்பதாலேயே, அவர்கள் தொழில் திறம் அற்றவர்களாயிருந்தும், தொழில் நிருவாகத்தில் புக முடிந்தது.

2. அவர்கள் மிக அதிகமான நிதிப் பொறுப்புப் பளுவை ஏற்றுக் கொள்ள வேண்டியிருந்தது இதன் விளைவாக நமது பெரும்பாலான தொழில் நிலையங்கள் பற்றாக்குறை மூலதனத்தையே (under capita-lisation) பெற்றுள்ளன.

3. நன்கு இலாபகரமாக நடந்து கொண்டிருக்கும் தொழில் நிறுவனங்களின் காப்பு நிதிகளை (Reserve funds) நிருவாக முகவர்கள் தங்கள் கட்டுப்பாட்டிலுள்ள பலவீனப்பட்ட நிறுவனங்களுக்கு மாற்றிய நிகழ்ச்சிகள் சில உண்டு. ஆனால் இக் குறைபாட்டை நீக்க 1936ஆம் ஆண்டு இந்தியக் கம்பெனி (திருத்த)ச் சட்டம் (Indian Companies Amendment Act—1936) வகை செய்தது.

4. இந்தியத் தொழில் நிறுவனங்கள் இம் முகவர்களை விடுத்துத் தாமாகத் தமக்கு வேண்டிய நிதி வளத்தைப் பெருக்கி, வேறு வழி முறைகளை வகுத்துக் கொள்ள முடிவதில்லை.

5. நிருவாக முகவர்களில் பெரும்பாலோர், தங்கள் முகவர் பணியைத் தவிர வேறுபல தொழில்களிலும் ஈடுபட்டிருந்தார்கள். இந்திய வங்கிகளோ கடன் வழங்குவதற்கு ஒப்புறுதிக் கையொப்பம் கண்டிப்பாக வேண்டும் என்றன. அக் கையொப்பம் இம் முகவர்கள் தாம் இடவேண்டியிருந்தது. இம் முகவர்களின் வேறு நடவடிக்கைகள் இலாபகரமாக இல்லையென்றால் அவர்களுடைய வகையுடைமை (Solvency) பாதிக்கப்படுவதாகக் கருதி, வங்கிகள், தாங்கள் வழங்கிய கடன்களைக் காலக் கெடுவிற்கு முன்னரே திருப்பிச் செலுத்தும்படி கட்டாயப் படுத்தின. இதனால் நிறுவனங்களின் நிதிநிலை பெரிதும் பாதிக்கப்பட்டது.

இந் நிருவாக முகவர் முறை 1970 ஏப்ரல் 3 ஆம் தேதியோடு நிறுத்தப்பட்டு விட்டது.

கடன் ஈட்டுப் பத்திரங்கள் (Debentures)

ஒரு கடன் பத்திரம் என்பது ஒரு குறிப்பிட்ட நிறுவனத்தினால் அப் பத்திரத்தில் குறிப்பிடப்படும் தொகையைத் தனது கடனாக ஏற்றுக் கொள்ளப்பட்டதற்குரிய ஆவணமாகும். அதில், அந்

நிறுவனம் பெறுகின்ற கடனுக்குப் பொறுப் பேற்றுக் கொள்ளும் பல நிபந்தனைகள் அடங்கியிருக்கும்.

மூலதனம் பங்குகளாகப் (shares) பிரிக்கப்படுவதுபோல, கடன்கள் கடன் ஈட்டுப் பத்திரங்களாகப் பிரிக்கப்படுகின்றன. பங்குகள் விற்கப்படுவது போலவே கடன் பத்திரங்களும் விற்கப் படுகின்றன. இவற்றை வாங்குவோருக்குக் கடன்பத்திர ஆவணங்கள் (securities) வழங்கப்படுகின்றன.

கடன் நிதி திரட்டுவதற்கு, மற்ற வழிகளைக் காட்டிலும், இப் பத்திரங்களின் விற்பனையே சாலச் சிறந்ததாகும்.

### காப்பீட்டு நிறுவனங்கள் (Insurance Companies)

காப்பீட்டு நிறுவனங்களும் தொழிலகங்களுக்குத் தேவையான நடைமுதலை வழங்குகின்றன. சாதாரணமாக, அவை நிறுவனங் களின் நிலையான சொத்துகளின் பேரில் (Fixed Assets) கடன்கள் வழங்குகின்றன. சில சமயங்களில் கடன் பத்திரங்களை வாங்குவதன் மூலமும் இத் தொழிலகங்களுக்குத் தேவையான நடைமுதலை வழங்கு கின்றன.

### பொதுமக்களின் வைப்புத் தொகை

பொது மக்களிடமிருந்து வைப்புத் தொகைகளைப் பெறுவதற் காக அநேகமாக ஒவ்வொரு நாளும் கம்பெனிகளிடமிருந்து விளம்பரங்கள் வந்த வண்ணமிருக்கின்றன, கம்பெனி ஓராண் டிருந்து மூன்றாண்டுகள் அல்லது ஐந்து ஆண்டுகள் வரை தங்களிடம் செலுத்தப்படும் வைப்புகளுக்கு 12 சதவீதத்திலிருந்து 16 சதவீதம் வரை வட்டி கொடுக்க முன் வருகின்றன. சாதாரணமாக வைப்பின் மீது வட்டி, வைப்புத் தொகையையும், காலத்தையும் பொறுத்து மாறுபடும்.

இவ்வகையில் வைப்புத் தொகைகள் பெறுவது, குறிப்பாக வங்கிக் கடன் கட்டுப்பாடு (Bank Credit Squeeze) இருக்கும் இந் நாள்களில் மிக எளிதாக நிதி வசதி பெறக்கூடிய சாதனமாக அமை கிறது. வங்கி தன் கடன் மீது வசூலிக்கும் வட்டி வீதத்தைவிட வைப்புத் தொகைகள் மூலம் நிதி பெருக்குவது கம்பெனிகளுக்குச் சிக்கனமான முறையாகும். வைப்புத் தொகைகள் பிணையீடு கொண்டவையல்ல. எந் நோக்கங்களுக்காகக் கடன் பெறப் படுகிறதோ அந் நோக்கங்களைத் தெரிவிக்க வேண்டிய கட்டாய மில்லை. ஆகையால் வைப்புகளின் வழியாகக் கடன் தொகையைத் திரட்டுவது, கடன் தொகையின் மூலம் ஒரு கம்பெனி நீர்மைத்

தன்மையை வளர்த்துக் கொள்ளலாம். இவைகளைப் பெரிய அளவில் வங்கிக்கடன்களைப் பெறுவதற்கு ஈடுகளாகப் (security) பயன்படுத்த லாம். 1971ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் முடிய கம்பெனிகளிடம் பிணையீடு இல்லா வைப்புத் தொகைகளாக (unsecured public deposits) 569 கோடி ரூபாய் உள்ளதாக மதிப்பிடப்பட்டது. ஆனால் இத் தேதிக்குப் பிறகு வைப்புத் தொகை பெருகி விட்டது. அதனால் நிதி நிறுமங்களின் நிலையில் விளைவுகள் பல ஏற்பட்டிருக்கின்றன.

யூனிட் உரிமையர் பலர் தங்கள் யூனிட்டுகளை மாற்றி அத் தொகையைக் கூட்டுப் பங்குக் கம்பெனிகளிடம் வைப்புக்காகச் செலுத்துகிறார்கள் என்று யூனிட் ட்ரஸ்ட் ஆஃப் இந்தியா குறை கூறுகிறது. ஆயுள் காப்பீட்டு கூட்டுரு (L.I.C.) பாலிசியின் மீது கிடைக்கும் ஆதாயம் குறைந்து விட்டமையாலும், பணவீக்கத்தின் விளைவாகச் சேமிப்புச் சக்தி குறைந்து விட்டமையாலும் காப்பீட்டுக் கூட்டுரு செய்யும் தொழில் நடவடிக்கைகள் பாதிக்கப்பட்டிருக் கின்றன. இருப்பினும், பொதுமக்களின் நாட்டம் கம்பெனி வைப்புத் தொகையின் மீது ஏற்பட்டிருப்பதால் யூனிட் டிரஸ்ட் ஆஃப் இந்தியா வைப் போல இதனுடைய நடவடிக்கைகளும் பாதிக்கப்பட்டிருக் கின்றன. வங்கி வைப்புத் தொகைகளின் வளர்ச்சி வீதம் 1973ஆம் ஆண்டை விட 1974-ல் குறைந்தது.

இவ்வாறு பொதுமக்கள் கம்பெனிகளில் வைப்பீடு செய்து நிறைய லாபம் ஈட்ட வேண்டுமென்ற மனப்போக்கினால் ஒரு விரும்பத் தகாத விளைவு ஏற்பட்டுள்ளது. அதாவது கம்பெனிகளிடம் பொது மக்கள் சேமிப்புகள் நிறையக் குவிகின்றன. அவற்றைக் கம்பெனிகள் தம் விருப்பப்படி செலவழிக்கின்றன. இதனால், வேளாண்மை, சிறு தொழில் முதலான முந்துரிமைத் துறைக்குத் (Priority Sector) தேவையான நிதி கிடைக்காமல் போய்விடுகிறது. கம்பெனி வைப்புத் தொகைகளின் மீது வழங்கப்படும் வட்டி வீதத்தைக் கட்டுப்படுத்தினால் மற்ற நிதி நிறுவனங்களின் நிதி திரட்டும் தொழில் பாதிக்கப்படாது என்று நிருவாக வட்டாரங்களில் கருதப்படு கின்றது.

பெயர் பெற்ற கம்பெனிகளின் நிர்வாகங்கள் பங்கு வெளியிடு வதன் மூலம் நிதி திரட்டுவதை விட வைப்புத் தொகைகள் மூலம் நிதிவசதி ஏற்படுத்திக் கொள்வதை விரும்புகிறார்கள். ஏனெனில் பங்குகள் வெளியீட்டால் பங்குதாரர்களின் ஆதிக்கமும், நிதியீட்டு நிறுவனங்களிடமிருந்து பெரிய அளவில் கடன் பெற்றால் நிதியீட்டு நிறுவனங்களின் ஆதிக்கமும் குறுக்கீடுகளும் கம்பெனி நிர்வாகத்தில் ஏற்படும். நிதியீட்டு நிறுவனங்களிலிருந்து கடன் பத்திரங்கள் வெளி

யிட்டு நிதி திரட்டினாலும் அல்லது மற்ற வழிகளில் அவர்களிட மிருந்து நேரடியாகக் கடன் பெற்றாலும் இக் கடன்களை நிதி நிறுவனங்கள் தங்களிச்சைப்படி பங்குமுதலாக மாற்றிக் கொள்ள லாம். இது கம்பெனியின் தொழில் வளர்ச்சியைப் பாதிக்கலாம். மற்றும் தோற்றுவிப்பாளர்களின் ஆதிக்கம் குறைந்து விடுகிறது. அவர்கள் கம்பெனியின் மீது தங்களுடைய கட்டுப்பாடு தொடர்ந்து இருக்க வேண்டுமென்று பெரிதும் விரும்பினால் வைப்புத் தொகைகளை மக்களிடமிருந்து பெற்றுத் தேவைப்படும் நிதியைத் திரட்டிக் கொள் கிறார்கள்.

ஆனால் இம் முறையில் மக்களிடம் வைப்புத் தொகைகளை ஈர்க்கும் முறையில் முறைகேடுகள் உள்ளன. சில சிறு நிறுவனங்கள் வைப்புத் தொகைகளின் மீது ஒழுங்காக வட்டித்தொகை வழங்கவில்லை. மற்றும் சில நிறுவனங்களில் முதல் தொகைக்கு மோசடி செய்து விட்டார்கள் என்ற புகார்கள் எழும்பியிருக்கின்றன. மேலும் கம்பெனி நிருவாகத்தினரும் அதன் பெரும் பங்கு உரிமையரும் போலிப் பெயர்களில் தங்கள் கம்பெனியிடமே தொகைகளை வைப் பாகக் கொடுத்துக் கறுப்புப் பணத்தை முறையான பணமாக ஆக்கு கிறார்கள். இம் முறை கேடுகளால் ரிசர்வு வங்கி குறுக்கிடும்படி யான நிலைமை ஏற்பட்டது. கம்பெனிகள் தங்களுடைய செலுத்தப் பட்ட மூலதனம், காப்புநிதி இவைகளின் மொத்தத் தொகைகளுக்கு மேல் வைப்புத் தொகைகளை ஏற்கக் கூடாது என்று முதலில் ஒரு விதி விதித்து, பிறகு செலுத்தப்பட்ட மூலதனம், காப்புநிதி இவைகளில் 25 சதவீதத்திற்கு மேல் வைப்புத் தொகைகள் இருக்கக் கூடாது என்று கட்டுப்பாடு விதித்தது. மேலும், வைப்புத் தொகையை ஏற்க விரும்பும் கம்பெனி, தான் ஈடுபட்டிருக்கும் தொழிலில் பல ஆண்டுகளில் கிடைத்த வருமானம், பங்குகளின்மீது அளிக்கப் பட்ட இலாப ஈவு, இயக்குநர் குழு உறுப்பினர்களின் பெயர்கள் மற்றும் பல செய்திகளடங்கிய விளம்பரம் ஒன்றினைச் செய்தித் தாள்களில் கொடுக்க வேண்டும். பிறகு குறிப்பிட்ட காலங்களில் ரிசர்வு வங்கிக்கு வைப்புத் தொகைகளைப் பற்றிய விவரங்களைத் தவறாமல் சமர்ப்பிக்க வேண்டும். பொது மக்களின் நலனைக் காப்பாற்றுவதற்காகவும், ரிசர்வு வங்கியின் கடன் கட்டுப்பாட்டு விதியை மீறாமல் இருப்பதற்காகவும் இவ் விதிகள் அமலுக்கு வந்தன. அப்படியிருந்தும் இந் நிலையில் எதிர்பார்த்த முன்னேற்றம் ஏற்படவில்லை.

### நாட்டு வங்கிகள் (Indigenous Banks)

நாட்டு வங்கிகள் வேளாண்மைக்கும் குடிசைத் தொழிலுக்கும் நடைமுதல் நிதி வழங்குகின்றன. நடுத்தரத் தொழில்களுக்கும்

அவர்கள் கடன்கள் வழங்குகின்றனர். ஆனால் அவர்கள் வசூலிக்கும் வட்டி வீதம் மிகவும் அதிகமானது. கடன் பெறுவதற்கு வேறு வகையில்லாததால், நாட்டுத் தொழிலகங்களும், தொழிலாளிகளும் நாட்டு வங்கிகளிடம் கடன் பெறுகிறார்கள்.

கூட்டுப் பங்கு வங்கிகள் (Joint Stock Banks)

இக் கூட்டுப் பங்கு வங்கிகள், தொழிலகங்களின் உருமாறும் சொத்துகளின் (floating assets) மேல் குறுகிய காலக் கடன்கள் வழங்குகின்றன. சில சமயங்களில் நிலையான சொத்துகளின் பேரிலும் அவை கடன் வழங்குகின்றன. இக் கடன்களெல்லாம் குறுகிய காலக் கெடுவிலேயே வழங்கப்படுகின்றன. ஆனால் ஒவ்வோராண்டும் அவை புதுப்பிக்கப்படுகின்றன. இதில் ஓர் அவல நிலை என்னவென்றால், நிறுவனம் சிறிது இடர்ப் பாட்டுக்குள்ளாகின்றபோது கடன்கள் உடனே திருப்பி வாங்கப்படுகின்றன. இதனால், நிறுவனத்தின் துயரம் மேலும் அதிகமாகிறது.

கூட்டுப் பங்கு வங்கிகள், தொழிற்சாலைகளுக்கு இரண்டு வகையில் கடன் வழங்குகின்றன. ஒன்று ஆவணங்களை ஈடாகப் பெற்றுக் கொண்டு கடன் வழங்குதல், மற்றொரு வகை, வெந்நிலைக் கடனாக, தனி நபர் ஒப்புறுதிக் கையொப்பத்துடன் (Personal Credit with second signature) கடன் வழங்குதல். ஆனால் இம் முறைகளுக்கு அளவு உண்டு. சில நிறுவனங்கள், தம் பங்குகளை அடைமானம் வைக்கத் தயங்குகின்றன. காரணம், அது அவற்றின் பொது வைப்பீடுகளைப் பாதிக்கும். இரண்டாவது முறைதான் நிருவாக முகவர் முறையை வளர்த்து வந்துள்ளது.

வங்கிகள், சரக்குகளையும் அடைமானக் கடிதங்களையும் (Letters of hypothecation of goods) ஈடாகப் பெற்றுக் கொண்டு அதிகப் பற்றாகவும், ரொக்கமாகவும் கடன்கள் வழங்குகின்றன. ஆனாலும் சரக்குகள் கடன் பெறுவோர் வசமே இருப்பதால் வங்கிகள் இம் முறையைப் பாதுகாப்பற்றதாகக் கருதுகின்றன. எனவே மிகவும் நம்பத் தகுந்த ஒரு சிலருக்கே வங்கிகள் இம் முறையில் கடன் வழங்குகின்றன. பொதுவாக, சரக்கு இருப்பை அடைமானம் காட்டி ரொக்கக் கடன் பெறுவது வழக்கம். இம் முறை உண்டியல் சந்தையின், வளர்ச்சியைத் தடைப்படுத்தி விட்டது. இந்தியக் கம்பெனிகள் சட்டப்படி (Indian Companies Act) வங்கிகள் தம் இருப்பு நிலைக் குறிப்பில் (Balance Sheets) ஈடுபெற்ற கடன்களிலிருந்து, ஈடுபெறாமல் வழங்கிய கடன்களைத் தனியாகப் பிரித்துக் காட்ட வேண்டியிருப்பதால், சாதாரணமாக மிக நல்ல வாடிக்கைக் காரருக்குக் கூட இம் முறையில் கடன் வழங்க விரும்புவதில்லை.

இதனால் இவர்களுடைய நிலை பாதிக்கப்படுமென்று அஞ்சுகிறார்கள்.

மொத்தத்தில் வங்கிகள் தொழில்களுக்கு நிதியளிப்பதில் பெரிதும் தயக்க முடையனவாகவே உள்ளன. நடுத்தரத் தொழில்கள், சிறுரகத் தொழில்கள், குடிசைத் தொழில்கள் ஆகியவை தமது வளர்ச்சிக்காக நிதி வசதி பெறுவதற்கு இன்னும் கூடுதலான இன்னல்களுக் குள்ளாகின்றன என்பதை எல்லோரும் அறிவர். ஸ்டேட் வங்கியும், மற்றக் கூட்டுப் பங்கு வங்கிகளும் பெரு நகரங்களிலும், சிறு நரகங்களிலும் செயல்படுவதால் பெரிய தொழிற் சாலைகளுக்குத்தாம் தேவை பூர்த்தி செய்கின்றன. எனவே, சிறுதொழில்கள், தமது நிதித் தேவைக்கு அங்குள்ள உள்நாட்டு வங்கியர்களையும் வட்டிக் கடைக்காரர்களையும் அணுகி அதிகமான வட்டி கொடுத்துப் பணம் பெற வேண்டியுள்ளது.

ஜெர்மானிய வங்கிகள், இவ் விஷயத்தில் பெரிதும் முன்னேறி யுள்ளது. ஜெர்மனியின் மிக வேகமான தொழில் வளர்ச்சிக்குக் காரணம், ஜெர்மானிய வங்கிகள் கடைப்பிடித்த தொழில் நிதி யீட்டுக் கொள்கையே யாகும். ஆனால், இந்திய வங்கிகள், தொழில் வளர்ச்சிக்கு உதவுவதற்குப் போதிய பலமும் அனுபவமும் பெற்றிருக்கவில்லை. இதற்காக ஜப்பான் தொழில் வளர்ச்சி வங்கியைப் (Industrial Bank of Japan) போன்றதொரு தொழில் நிதியீட்டுக் கூட்டுரு (Industrial Finance Corporation) நிறுவ வேண்டுமென்று சிலர் யோசனை கூறினார்கள்.

**தொழில் நிதியீட்டுக் கூட்டுருவும் பிற நிலையங்களும் (Industrial Finance Corporation and other Institutions)**

**1. இந்தியத் தொழில் நிதியீட்டுக் கூட்டுரு (Industrial Finance Corporation of India)**

இந்தியத் தொழில் நிதியீட்டுக் கூட்டுரு 1948ஆம் ஆண்டு நிறுவப்பட்டது. அது நிறுவப்பட்டதன் முக்கிய நோக்கம் என்ன வென்றால், முறையான வங்கி வாய்ப்புகள் இல்லாத சூழ் நிலை களிலும், மூலதனச் சீட்டுகளை வெளியிட்டு விற்பனை செய்து கொள்ளச் சாதகமற்ற சந்தர்ப்பங்களிலும், புதிய தொழில் நிறுவனங்களுக்குத் தேவையான நெடுங்கால, குறுங்காலக் கடன் வழங்கி உதவி செய்வதே யாகும். அண்மைக் காலம் வரையில் இ. தொ. நி. கூவின் உதவி, தனியார் துறையில் வரையறுக்கப் பட்ட (Public limited Companies in the Private Sector) நிறுவனங் களுக்கும் கூட்டுறவுச் சங்கங்களுக்குமே வழங்கப்பட்டு வந்தது.

தற்போது பொதுத் துறை நிறுவனங்களுக்கும் இவ் வுதவி விரிவு படுத்தப்பட்டுள்ளது. இவ் வுதவியைப் பெற, அந் நிறுவனங்கள், ஓரளவு தொழிலில் வெற்றி பெற்று, பங்குதாரர்களுக்கு முதல் இலாப ஈவு (Maiden dividend) வழங்கியிருக்க வேண்டும்; தம் நிறுவன விரிவுத் திட்டத்திற்குரிய செலவில் ஒரு பகுதியைத் தாங்கிக் கொள்ளக் கூடிய சக்தி பெற்றிருக்க வேண்டும்; தம் வரவு செலவுக்கு அரசாங்கத்தைச் சார்ந்திருக்கக் கூடாது . இக் கூட்டுருவின் நிதி ஏற்கனவே யுள்ள நிறுவனங்களைப் புதுப்பித்தல் (renovation), புதுமைப் படுத்தல் (modernisation), விரிவுபடுத்தல் (Expansion) வேறு துறைப்படுத்தல் (Diversification) ஆகிய திட்டங் களுக்கு மட்டுமல்லாது புதிய தொழில் நிறுவனங்கள் தோற்று விப்பதற்கும் உதவுகின்றது. உதவி, நெடுங்காலக் கடன்கள் உருவத்தில் வழங்கப்படுகிறது. அக் கடன்கள் ரூபாய்ச் செலாவணி யிலும், அந்நியச் செலாவணியிலும் வழங்கப்படுகின்றன. சாதாரணப் பங்குகளை (ordinary shares) வாங்குவது, முன்னுரிமைப் பங்குகளுக்கும் (preference shares) கடன் பத்திர வெளியீட்டிற்கும் (Debentures, Issues) ஒப்புறுதி யளிப்பது; இந்தியாவிலோ வெளிநாடு களிலோ வாங்கும் எந்திரச் சாதனங்களின் கிரயத்தைப் பின் செலுத்தும் (தவணை) முறையில் (deferred payment system) செலுத்த உடனுறுதி (guarantee) யளிப்பது; அந்நியச் செலா வணியில் அந்நிய நிதி நிலையங்களின் மூலம் எழுப்பும் கடன் களுக்கும் உடனுறுதி யளிப்பது, ஆகிய வகைகளில் இக் கூட்டுரு உதவி செய்கிறது. இக் கூட்டுரு தோற்றுவிக்கப்பட்ட நாளிலிருந்து 1969 ஜூன் மாதம் வரை 283 கோடி ரூபாய்க் கடன் பட்டுவாடாச் செய்துள்ளது.

இ. தொ. நி. கூவின் பங்கு மூலதனம், தேக்கிய ஈட்டங்கள் (retained earnings), மூலதனச் சீட்டுகள் விற்பனை (Sale of investments), பணச் சந்தையில் பத்திரங்கள் வெளியீட்டால் பெறும் கடன்கள், மத்திய அரசிடமிருந்து பெறும் கடன்கள், அந்நியக் கடன்கள் ஆகிய வழிகளில் தனக்கு வேண்டிய வளமையைப் பெருக்கிக் கொள்கிறது, கழகத்தின் நிதி வளத்தில் 50 சதவீதம் இந்திய தொழில் வளர்ச்சி வங்கியால் (Industrial Development Bank of India) உதவித் தொகையாக (subsidy) வழங்கப்படுகிறது. மீதி 50 சதவீதம் மூலதனம், பட்டியலில் சேர்ந்த வங்கிகள், கூட்டுறவு வங்கிகள், காப்பீட்டு நிறுவனங்கள் மற்ற முதலீட்டுப் பொறுப் புரிமை யமைப்புகள் (Investment trusts) ஆகியவற்றால் வழங்கப்படு கிறது. இக் கூட்டுருவின் நிதி வளத்தைச் சீராக்குவதற்காக, 1964 வரை ரிசர்வு வங்கியும், அதன்பின் இ தொ. வ. வங்கியும் தங்கள் பங்குகளின் மீதான இலாப ஈவுத் (Dividend) தொகைகளைப்

பெற்றுக் கொள்ளாமல் அதை ஒரு தனிக் காப்பு நிதியாக (Special Reserve Fund) ஒரு கோடி ரூபாய் சேரும் வரை, கூட்டுருவிற்கே அளித்து வந்தன. அதன்படி அத் தனிக் காப்பு நிதி ஒரு கோடி ரூபாய்க்கு மேல் சேர்ந்ததும், 1968 ஜூன் மாதம் முதல் இ. தொ. வ தனக்குரிய இலாப ஈவைப் பெற்று வருகிறது.

ரிசர்வு வங்கிச் சட்டம் 17 (4. B) வது ஷரத்து, மத்திய, மாநில அரசு ஆவ்ணங்களை ஈடாகப் பெற்றுக் கொண்டு, கேட்புக் கடனு கவோ, 90 நாள் தவணைக் கடனுகவோ, முன் அளிப்புகளும் (advances), கடன்களும் (loans) வழங்க ரிசர்வு வங்கிக்கு அனுமதி யளிக்கிறது. அதே விதிப்படி, மத்திய அரசு ஆவணங்கள் ஈட்டின் பேரில் 18 மாதங்களுக்கு மிகாது வரையறுக்கப்பட்ட காலக் கெடுவில் கடன்கள் வழங்கவும் மத்திய அரசினுல் உடனுறுதியளிக் கப்பட்ட (guaranteed by central Government) கூட்டுருவின் பங்குகள், கடன் பத்திரங்கள் ஆகியவற்றின் ஈட்டின் பேரில் அதே காலக் கெடுவிற்கு ரிசர்வு வங்கி கடன்கள் வழங்கலாம். இம் முறையில் வழங்கப்படும் கடன் தொகை நிலுவை மொத்தம் 3 கோடி ரூபாய்க்கு மிகாமல் பார்த்துக் கொள்ள வேண்டும்.

ரிசர்வு வங்கிச் சட்டம் 17 (11) விதிப்படி ஆவணங்கள், கடன் பத்திரங்கள் ஆகியவற்றின் வெளியீட்டிலும், நிருவாகத்திலும், மத்திய மாநில அரசுகளுக்கு முகவராய்ச் (Agent) செயல்படுவது போலவே இ. தொ. நி. கூவிற்கும் அவ்வகைகளில் முகவராகச் செயல்பட ரிசர்வு வங்கி அனுமதிக்கப்படுகிறது.

இ. தொ. நி. கூவின் பங்குகளில் 50 சதவீதந்தான் பெற்றிருக் கின்ற காரணத்தால் இ. தொ. வ வங்கி அதனுடைய நிருவாகத் திலும், நடைமுறையிலும் ஒரு முக்கியமான பங்கை வகிக்கிறது. இ. தொ. நி கூ. சட்டத்தின்படி, மத்திய அரசு, அதன் இயக்குநர் குழுவிற்கு (Board of Directors) ஒரு தலைவரை (Chairman) நியமிப் பதற்கு முன் இ. தொ. வ. வங்கியைக் கலந்தாலோசிக்க வேண்டும். ஆரம்ப காலத்தில், ரிசர்வு வங்கி கூட்டுருவின் பொறுப்புமிக்க பதவிகளை நிருவகிக்கத் தனது முதிர்ந்த நிர்வாகிகளைக் கொடுத்து உதவியது. இ. தொ. வ. வங்கி, கூட்டுருவின் பல கோட்பாடு களில் (Policies) அறிவுரை வழங்குகிறது. கூட்டுரு இவ் விஷயங் களில் அடிக்கடி இ. தொ. வ. வங்கிக்கு விவரங்களைத் தந்து கொண்டேயிருக்க வேண்டும். கூட்டுரு, ஒரே சமயத்தில் நான்கு கடன்கள் வழங்குவதென்ருலோ, ஒரு நபருக்கோ, நிறுவனத் திற்கோ, ஒரு கோடி ரூபாய்க்கு மேல் கடன் கொடுப்பதென்ருலோ, இ. தொ. வ. வங்கியின் முன் அனுமதி பெற வேண்டும். தனி நிறுவனங்களுக்கு வழங்கப்படும் ரூ. 50 இலட்சத்திற்கு மேற்பட்ட

எல்லாக் கடன்களைப் பற்றியுமே. இ. தொ. வ. வங்கிக்கு அறிக்கைகள் சமர்ப்பிக்க வேண்டும்.

**1973—74-ல் இ. தொ. நி. கூ. வின் நிலை**

| | |
|---|---|
| மூலதனம்... ... ... ... ... ... ... ... ... ... | ரூ. 10 கோடி |
| வழங்கப்பட்ட ஆவணங்களும் கடன் பத்திரங்களும் | ரூ. 85.18 ,, |
| அந்நியச் செலாவணியுட்பட, கூட்டுருவின் மொத்தக் கடன் பொறுப்பு | ரூ. 20.46 ,, |
| வசூலிக்கப்பட வேண்டிய கடன்களும் முன்னறிவிப்பும் | ரூ. 192.56 ,, |

**2. இந்தியத் தொழில் வளர்ச்சிக் கடன், முதலீட்டுக் கூட்டுரு (Industrial Credit and Investment Corporation of India)**

இந் நிறுவனம் 1955-ல் தோற்றுவிக்கப்பட்டது. இதன் அனுமதிக்கப் பெற்ற மூலதனம் ரூ. 25 கோடி. இது, தனியார் துறையில் தொழிற்சாலைகள் நிறுவவும், விரிவுபடுத்தவும் (Modernisation) உதவி செய்கிறது. தனியார் மூலதனத்தை நம் நாட்டு நிறுவனங்களில் கீழ்க் கண்ட முறையில் முதலீடு செய்ய ஊக்குவிக்கிறது.

(அ) நெடுங்கால, மத்திம காலக் கடன்கள் வழங்குவது.

(ஆ) புதுப் பங்கு வெளியீட்டிற்கு ஒப்புறுதியளித்தல்.

(இ) நிறுவனங்களின் கடன்களுக்கு உத்தரவாதமளித்தல்.

(ஈ) நிறுவனங்களுக்கு மேலாண்மை (Managerial), தொழில் நுணுக்க (Technical), நிருவாக (Administrative) ஆலோசனைகள் வழங்கல்.

இக் கூட்டுரு முக்கியமாக நிலை முதல்கள் வாங்குவதற்கு ரூ. 1 கோடியிலிருந்து ரூ. 5 கோடி வரை உதவி செய்கிறது. 1969-ல் கூட்டு வணிக நிறுவனங்களுக்கு அந்நியச் செலாவணியில் கடன் வழங்கத் தீர்மானித்தது. (1969 மார்ச்சு மாதம் முடிய ரூ. 241 கோடி உதவி வழங்கியுள்ளது.)

இக் கூட்டுரு ஒரு பிரதேசத்தைத் தேர்ந்தெடுத்து, அதனுடைய விவசாயம், தொழில் முதலான சமூகப் பொருளாதாரத் துறைகளின் வளர்ச்சிக்கும் உதவுவதற்காக நிலக் கழகம் (Land Institute) என்ற

அமைப்புகளை உருவாக்கி அவற்றிற்கும் நிதியுதவி யளித்தது. குஜராத்தில் வறட்சிப் பகுதிகளில் 'லிப்ட் நீர்ப்பாசன' (Lift Irrigation system) முறையை உருவாக்கி அதற்கு உதவியளித்தது.

வட கிழக்குப் பகுதியில், தொழில் வணிக வளர்ச்சிக்காக, வட கிழக்குத் தொழில், தொழில் நுணுக்க ஆலோசனைக் கழகம் (North Eastern Industrial and Technical Consultancy organisation) தோற்றுவித்தது. இது போன்று மற்ற வளர்ச்சியுறுப் பிரதேசங்களிலும் கவனம் செலுத்தி வருகிறது,

1973-74 ல் இக் கூட்டுருவின் செலுத்திய மூலதனம் (Paid up share Capital) ரூ. 12. 5 கோடி.

1974 ல் ஐந்தாவது முறையாக ரூ. 9 கோடிக்குக் கடன் பத்திரங்கள் வெளியிட்டது. 1975 ஆண்டின் முற்பகுதியில், மேலும் ரூ. 5 கோடிக்குக் கடன் பத்திரங்கள் வெளியிட்டது.

1973-ல் இது வழங்கிய மொத்தக் கடனுத்வி ரூ. 59·27 கோடி.

1974-ல் இது வழங்கிய மொத்தக் கடனுதவி ரூ. 62·72 கோடி.

3. இந்தியத் தொழில் வளர்ச்சி வங்கி (Industrial Development Bank of India)

1964 ஆம் ஆண்டு இந்தியத் தொழில் வளர்ச்சி வங்கிச் சட்டம், இவ் வங்கிக்கு, மிகப் பரவலான செயல்பாட்டு உரிமையையும் சூழ்நிலைக்கேற்ப மாற்றிக்கொள்ளத் தக்க நெறி முறைகளையும் வகுத்துத் தந்துள்ளது. இந்தியத் தொழில் வளர்ச்சி வங்கி எல்லா விதமான தொழில்களுக்கும் நிதி உதவி செய்ய அதிகாரம் பெற்றுள்ளது. பொதுத் துறையிலும் தனியார் துறையிலும், உற்பத்தி, பக்குவப்படுத்தல், சுரங்க வேலை, போக்குவரத்து, மின்சார உற்பத்தி, விநியோகம் ஆகிய பல்வேறு வகைப்பட்ட தொழில்களுக்கும் நிதி உதவி செய்கிறது. ஆரம்பத்தில், தனியார் தொழில் நிறுவனங்களுக்கு மட்டுமே நிதியளித்து வந்தது. பின்னர், சிறிது சிறிதாக, மத்திய, மாநில அரசுப் பொதுத்துறை நிறுவனங்களுக்கும் நிதி வசதி விரிவாக்கப்பட்டுள்ளது. இவ்வாறு 1966, நவம்பரில் பொதுத்துறை உற்பத்தியாளர்களுக்கும், விற்பனையாளர்களுக்கும், எந்திர சாதன உண்டியல்களை மறுகழிவு செய்து கொள்ள இந்தியத் தொழில் வளர்ச்சி வங்கியில் உதவி வாய்ப்பு அளிக்கப்பட்டது. 1969 ஜனவரியில் பொதுத்துறையைச் சார்ந்த வாங்குவோருக்கும் உபயோகிப்போருக்கும் இவ் வசதி விரிவு படுத்தப்பட்டது. 1967 அக்டோபரில், பொதுத்துறைத் தொழிலகங்களுக்கு

குறுங்கால ஏற்றுமதிக் கடன் மறுநிதியளிப்புத் திட்டம் விரிவாக்கப் பட்டது. இந்தியத் தொழில் வளர்ச்சி வங்கியின் ஏற்றுமதிகளுக்கு நேரடி நிதியளிப்புத் திட்டம் 1968 டிசம்பரில் வெளியிடப் பெற்று, பொதுத்துறை, தனியார் துறை ஏற்றுமதியாளருக்கு உதவி வருகிறது. மேலும், 1969 மே மாதத்தில், தொழிலில் ஓரளவு வெற்றி பெற்று, பங்குதாரர்களுக்கு முதல் ஊதிய ஈவு (Maiden dividend) வழங்கித் தமது விரிவுத் திட்டங்களுக்குத் தாமே சமாளித்துக் கொள்ளும் தம்வளம் பெற்ற வரையறுக்கப்பட்ட பொதுத்துறைத் தொழில் நிறுவனங்களுக்கு (Public limited Companies) நேரடி நிதியளிப்புச் செய்ய இந்தியத் தொழில் வளர்ச்சி வங்கி தீர்மானித்தது. ஆனால், அந் நிறுவனங்கள், அரசிடம் நிதி உதவி கோரக்கூடாது; இந்தியத் தொழில் வளர்ச்சி வங்கியின் நெறிமுறைகளுக்குட்பட்டு, தம் செலவுக் கணக்குகளைப் பரிசீலிக்கும் உரிமையையும் அதற்கு அளிக்க வேண்டும். இந்தியத் தொழில் வளர்ச்சி வங்கி தொழில் நுணுக்க, நிருவாக உதவிகள் அளிப்ப தோடு, சந்தை, முதலீட்டு ஆய்வுகள், தொழில் துறைப் பொருளாதார ஆய்வுகள், முதலிய வளர்ச்சிப் பணிகளையும் மேற்கொள்ளும்.

பொதுவாக, இந்தியத் தொழில் வளர்ச்சி வங்கியின் நடவடிக்கைகளைக் கீழ்க்கண்ட இரும் பெரும் பிரிவுகளில் அடக்கலாம்.

1. வங்கிகள் மூலமாகவும், பிற நிதி நிலையங்கள் மூலமாகவும் தொழிலகங்களுக்குப் பிறமுக உதவியளித்தல்.
2. தொழில் நிறுவனங்களுக்கு நேர்முக உதவியளித்தல்.

இந்தியத் தொழில் வளர்ச்சி வங்கியின் பிறமுக உதவி நடவடிக்கைகளில், வங்கிகளும், சட்டத்திற் குறிப்பிட்ட பிற நிதி நிலையங்களும் (IFCI and SFCS and those subsequently notified by Government of India) இதனிடம் பெறும் மறு நிதியளிப்புகளும் (refinancing) அந் நிதி நிலையங்களின் கடன் பொறுப்புகளுக்கு உத்திரவாதம் அளித்தாலும், காலக்கெடுக் கடன்களுக்காகச் சந்தையில் அந் நிலையங்கள் விற்கும் ஆவணங்களையும், பத்திரங் களையும் வாங்குதலும் ஆகிய உதவிகள் அடங்கும். தொழில் நிறுவனங்களுக்கு இந்தியத் தொழில் வளர்ச்சி வங்கி செய்யும் நேர்முக உதவி, அது வழங்கும் கடன்களும் முன்னளிப்புகளும் (avdance) மற்ற வங்கிகளுடன் சேர்ந்து அந் நிறுவனங்களின் ஏற்றுமதிக்கு நிதி உதவியளிப்பதும், நிறுவனங்கள் வெளியிடும் பங்குகள், கடன் பத்திரங்கள் பிற ஆவணங்கள் (other bonds) ஆகியவற்றைத் தானே வாங்குதல் அல்லது அவற்றிற்கு ஒப்பு நிதி

(Under writing) அளித்தலும், நிறுவனங்கள் மூன்றுமவருக்குச் (Third parties) செலுத்த வேண்டிய தொகைகளை நிறுத்தி வைத்துப் பின் செலுத்தவும் (Deferred payment), அங்காடியிலும் (Open market) பிற நிதி நிலையங்கள் மூலமாகவும் அவை எழுப்புகின்ற கடன்களுக்கு உத்திரவாதமளித்தலும் ஆகிய வையாகும். இவை தவிர, தொழில் நிறுவனங்களின் மாற்று உண்டியல் சீட்டுகளையும் (Bills of Exchange) கேட்புக் கடனுறுதிச் சீட்டுகளையும் (Promissory Notes) கழிவுசெய்யவும், மறுகழிவு செய்யவும் (Discounting and rediscounting) இந்தியத் தொழில் வளர்ச்சி வங்கி அதிகாரம் பெற்றுள்ளது.

இந் நிறுவனம், 1974, ஜூன் மாதம் 30 ஆம் தேதியன்று, தனது பயனுடைய வரலாற்றில் 10 ஆண்டுகளை முடித்து 11 ஆவது ஆண்டைத் தொடங்கியது. இது, முற்றிலும் இந்திய ரிசர்வு வங்கிக்குச் சொந்தமான ஒரு துணை நிறுவனமாகும். இதன் இயக்குநர் குழு, ரிசர்வு வங்கியால் நியமிக்கப் பெற்ற அங்கத்தினர் களைக் கொண்டது. என்றாலும், இது அதிகமான செயல்பாட்டு உரிமை (Operational Freedom) பெற்று இயங்கி வருகிறது. இந்திய அரசு, ரிசர்வு வங்கியிடமிருந்து இதைப் பிரித்துத் தனி நிறுவனமாக்க வேண்டுமென நினைக்கிறது. இதைத் தனியாகப் பிரிப்பதற்கும், புனரமைப்புச் செய்வதற்கும், பாராளுமன்றத்தில் ஒரு மசோதா கொண்டு வரப்படுகிறது.

இந்தியத் தொழில் வளர்ச்சி வங்கி, வெறும் நிதி நிறுவனமாக அல்லாமல் ஒரு வளர்ச்சிப் பணி நிறுவனமாக உருவாக்கப்பட்டது. இதில் மிக்க திறம் பெற்ற தொழில் நுணுக்கர்களும், நிதி ஆய்வாளர் களும் பணியாற்றுகின்றனர்.

ஏனைய வளர்ச்சிப் பணி வங்கிகளைக் காட்டிலும் இந்தியத் தொழில் வளர்ச்சி வங்கியின் செயல்பாட்டு எல்லை மிகவும் பரந்து பட்டது குறிப்பாக, தனது நேர் நிதியளிப்பு மூலமும், மறு நிதியளிப்பு (Refinance) மறு தள்ளுபடி (Rediscounting) வசதிகளின் மூலமாகவும் வளர்ச்சிப் பணி வங்கிகளுக்கும் பிற வணிக வங்கிகளுக்கும் ஒரு பெரிய நிதி மூலமாக விளங்குகிறது மாநில நிதியக் கூட்டுரு (State Financial Corporation) இந்தியத் தொழில் நிதியீட்டுக் கூட்டுரு (Industrial Finance Corporation of India), இந்தியத் தொழில் கடன், முதலீட்டுக் கூட்டுரு (Industrial Credit and Investment Corporation of India) ஆகிய நிறுவனங்களின் மூலதனச் சீட்டுகளையும் (Shares) பிற ஆவணங்களையும் (Bonds) வாங்கி, அவற்றிற்கு உதவி செய்கிறது. இந்தியத் தொழில் வளர்ச்சி வங்கி தனிப்பட்ட தொழிலகங்களுக்கும்

(Industrial units) அண்மைக் காலமாகப் பொதுத்துறை நிறுவனங்களுக்கும் நேரடி நிதி உதவி செய்யும் ஒரு பெரிய நிறுவனமாகும். இதனுடைய விளைவான வளர்ச்சிக்குக் கீழ்க் காணும் புள்ளி விவரங்களே சான்று பகர்கின்றன. இதனுடைய தொடக்க ஆண்டாகிய 1964-65-ல் ரூ. 51 கோடிக்கு அனுமதி வழங்கி ரூ. 24 கோடி பட்டுவாடா செய்தது இதன் பத்தாவது ஆண்டாகிய 1973-74-ல் ரூ. 236 கோடிக்கு அனுமதி வழங்கி ரூ. 162 கோடி பட்டுவாடா செய்தது. இப் பத்து ஆண்டுகளிலும் இது அனுமதி வழங்கிய மொத்த உதவித் தொகை ரூ. 1,105 கோடிகள். அதில் ரூ. 727 கோடிகள் பட்டுவாடா செய்துள்ளது.

| | | |
|---|---|---|
| 1. | தொழிலாளர்களுக்கு நேரடிக் கடனுதவி | ரூ. 171·3 கோடிகள் |
| 2. | தொழில் மறுநிதியளிப்புக் கடன்கள் | ரூ. 194·8 ,, |
| 3. | உண்டியல்களை மறுதள்ளுபடி செய்தது | ரூ. 221·5 ,, |
| 4. | நிதிய நிறுவனங்களின் பங்குச் சீட்டுகள் ஆவணங்கள் வாங்கியுதவியது | ரூ. 47·7 ,, |
| 5. | ஏற்றுமதிக்கு நேரடிக் கடன் | ரூ. 35·7 ,, |
| 6. | ஏற்றுமதி மறுநிதியளிப்புக் கடன் | ரூ. 24·6 ,, |
| 7. | பங்குச் சீட்டுகள், கடன் பத்திரங்களுக்குத் தனது ஒப்புறுதி (Under-writing) அளித்த வகையில் | ரூ. 31·1 ,, |

இவை தவிர, இந்தியத் தொழில் வளர்ச்சி வங்கி, கடன்களுக்கு உத்திரவாத மளித்தும், நிலைமுதல் (Fixed assets) வாங்கலில் பின் செலுத்து முறைக்கு (Deferred payments) உதவி செய்தும் வருகிறது.

தொழில் வளர்ச்சியில் பின் தங்கிய மாநிலங்களில் மத்திய மாநில அரசுகளுடனும், பிற நிதி நிறுவனங்களுடனும் கூடித் தொழில் நுணுக்கப் பொருளாதார ஆய்வுரை அமைப்புகளைத் தொடங்கியுள்ளது. புதிய, சிற்றளவுத் தொழிலதிபர்களுக்கு (Small Entrepreneurs) பலவழிகளில் உதவி செய்ய ஆலோசனை நிலையங்களும் (Consultancy organisations) அங்கங்கே தோற்றுவித்துள்ளது.

இந்தியத் தொழில் வளர்ச்சி வங்கி ஆற்றும் ஒரு முக்கியமான பணி என்னவென்றால், இது அகில இந்திய வளர்ச்சிப் பணி வங்கி

களையும் (All India Development Banks) பிற மாநில நிதியக் கூட்டு களையும் (State Financial Corporations) வளர்ச்சிப் பணியில் ஒருங் கிணைந்து செயல்பட வைக்கிறது.

1974 ஜூலை 24ஆம் தேதியிலிருந்து நேரடிக் கடன்களுக்கு வட்டி வீதம் 9%லிருந்து 10%ஆக உயர்த்தப் பட்டது. ஆனால் பின் தங்கிய பிரதேசங்களில் தொடங்கப் பெற்ற தகுதியுடைய நிறுவனங்களுக்கு வட்டி வீதம் 7·5% லிருந்து 8·5 ஆக உயர்த்தப்பட்டது.

இந்தியத் தொழில் வளர்ச்சி வங்கியின் மறு அளிப்பு வட்டி வீதம் 8·5% ஆகவும், இம்மறு நிதியைப் பெறும் நிதி நிறுவனங்கள் தம்மிடம் கடன் பெறும் தொழிலகங்களிடம் வசூலித்துக் கொள்ளக் கூடிய வட்டி வீதம் 12% ஆகவும் நிர்ணயிக்கப்பட்டது.

கடன் உத்திரவாதத் திட்டத்தின் கீழ்ச் சிறு தொழில் நிலையங் களுக்கு (Small Scale Units) வழங்கப்படும் கடன்களுக்கு அவற்றிட மிருந்து வசூலிக்கும் வீதம் 10·5% ஆகவும், இந் நோக்கத்திற்காகப் பெறும் மறு நிதி வீதம் (Refinance rate) 7% ஆகவும் விதிக்கப் பட்டது.

சர்வதேச வளர்ச்சிக் கூட்டுரு (I. D. A.) மூலம் அந்நிய நாண யத்தில் பெறப்படும் கடன்களுக்கு வட்டி வீதம் 6·5%லிருந்து 8% ஆக உயர்த்தப்பட்டது. இதன் கீழ் வாங்கப்படும் எந்திர சாதனங்கள் உண்டியலின் மறு தள்ளுபடி வீதம் 2% உயர்த்தப்பட்டது.

**4. மாநிலத் தொழில் நிதியீட்டுக் கூட்டுருக்கள் (State finance corporations)**

1951 அக்டோபரில் மாநிலத் தொழில் நிதியீட்டுக் கூட்டுருக்கள் சட்டம் (State Financial Corporations Act 1951) நிறைவேற்றப் பட்டு, அது 1952 ஆகஸ்டு மாதத்தில் அமலுக்கு வந்தது. இது அவ் வப்பிரதேசங்களில் தோற்றுவிக்கப்படும் நடுத்தர, சிறுரகத் தொழிற் சாலைகளின் நிதித் தேவைகளைப் பூர்த்தி செய்யும் நோக்கத்தோடு, அவ்வம் மாநிலங்கள் தங்கள் தங்களுக்கென்று ஒரு நிதியீட்டுக் கூட்டுருவை நிறுவிக்கொள்ள அதிகாரமளித்தது. இதற்கு முன்னரே, தமிழகத்தில் 1949-ல் சென்னைத் தொழில் முதலீட்டுக் கூட்டுரு (வரையறுக்கப்பட்டது) (Madras Industral Investment-Corporation Limited) நிறுவப்பட்டு விட்டது. இவை தவிர யூனியன் பிரதேசங்கள் அவ்வவற்றிற்கு அருகிலுள்ள மாநிலங்களின் நிதியீட்டுக் கூட்டுருக்களின் செயல்பாட்டெல்லைக்கு உட்படுத்தப்

பட்டுள்ளன. எனவே இப்பொழுது, இந்தியா முழுவதும் பல மாநிலத் தொழில் நிதியீட்டுக்கூட்டுருக்கள் செயல்பட்டு வருகின்றன.

சில மாநிலத் தொழில் நிதியக் கூட்டுருக்களின் பேரில் சில குறைகள் கூறப்படுகின்றன. அதிகமான கடன் நிலுவைகள் அவற்றின் நிதி வளத்தைப் பாதித்துள்ளது. இதனால் புதிதாய்த் தொடங்கப் பெறும் நிறுவனங்களுக்கு நிதி வசதி செய்ய முடியாத நிலமை அடைந்துள்ளது. புதுக்கடன்களுக்கு அனுமதி வழங்கு வதிலும் அவற்றைப் பட்டுவாடா செய்வதிலும் அநாவசியமான தாமதம் ஏற்படுகிறது.

1974 மார்ச் மாதம் முடிய எல்லா மாநிலக் 'கூட்டுருக்களும் தாம் வழங்கிய கடன்களில் (overdues) 17·6% இன்றும் வசூலிக்க வேண்டியுள்ளது. அவைகளுக்கு ஒதுக்கப்பட்ட நிதிகளை, முந்துரிமைத் துறைகளுக்கே அவை கடனாக வழங்க வேண்டும். தொழில் முகவர்கள் (Enterpreneurs) முந்துரிமைத் துறைகளைச் சார்ந்த தொழில்களையே தொடங்க உதவியும் செய்து, கச்சாப் பொருள் பற்றுக் குறை ஏற்படும் தொழில்களைத் தொடங்குவதைத் தவிர்க்க வேண்டும். அதே போல், ஏற்கனவே அதிகமாய் வளர்ந்துள்ள துறைகளில் புகாமல் தடுக்கவும் வேண்டும்.

மாநிலத் தொழில் நிதியக் கூட்டுருக்கள் அனுமதி முன் நிலை (Pre-sanction) அனுமதி நிலை (Sanction) வழங்குநிலை (Disbursement-stage) ஆகியவற்றிலும், அவற்றைத் தொடர்ந்து வேலைகளைக் கண் காணிப்பதிலும் (Follow-up and supervision) தனிக்கவனம் செலுத்த வேண்டும். இத் தொடர் கவனப் பணியினால் (Follow up) அந் நிறுவனங்களின் அவ்வப்போதைய தேவையைத் தெரிந்து உதவு வதற்கு வாய்ப்பு ஏற்படும்.

சர்வதேச வளர்ச்சிக் கூட்டுரு (International Development Authority) 20 கோடி ரூபாய் மறு நிதிமுறையில் பயன்படுத்த இம் மாநிலக் கூட்டுருக்களுக்கு வழங்கியுள்ளது. அதில் 1975 ஜனவரி 31 ஆம் தேதி முடிய ரூ 17·9 கோடிதான் இம் மாநிலக் கூட்டுருக்கள், 289 திட்ட விண்ணப்பங்களின் (Proposal) பேரில் வழங்கியுள்ளன.

1972-73-ல் இக் கூட்டுருக்களால் வழங்கப்பட்ட மொத்தக் கடன் ரூ. 78·00 கோடி.

1973-74 ரூ. 96·13 கோடி இக் கடனுதவிகளில் 65% சிற்றளவுத் தொழில்களுக்கு (Small scale industries) வழங்கப்பட்டுள்ளது.

1971-72-ல் பின்தங்கிய பிரதேசங்களில் (Backward areas) தொழிலகங்களுக்கு ரூ 18 கோடி வழங்கப்பட்டது. அதே உதவி 1973-74-ல் ரூ 48 கோடியாகும்.

## 5. யூனிட் ட்ரஸ்ட ஆஃப் இந்தியா

1964-ல் யூனிட் ட்ரஸ்ட் நிறுவுவதில் ரிசர்வு வங்கி மிகப் பெரிய பொறுப்பை வகித்தது. 1964 ஜூலையில், யூனிட் ட்ரஸ்ட் செயல் படத்தொடங்கியது. யூனிட் ட்ரஸ்ட்டின் முக்கிய நோக்கம்சமுதாயத்தில் நடுத்தர வர்க்கத்தினரில் சிறிய பெரிய முதலீட்டாளர்க்கு (Investors) சாதாரணப் பங்கு முதலீடுகளில் (equity type of investments) முதலீடு செய்வதற்கு வாய்ப்பளித்து. அதன் மூலம் சிறிய பெரிய தொழில் நிறுவனங்களின் தோற்ற வளர்ச்சிக்கு உதவுவதேயாகும். இதனல் உற்பத்திப் பெருக்கமும் மூலதனப் பெருக்கமும் ஏற்பட்டு நாட்டின் பொருளாதார வளர்ச்சி மேலோங்கும். பொது மக்களின் சேமிப்புகளை ஈர்க்கும் வண்ணம், யூனிட்டுகள் சாதாரண ரூ. 10 (ரூ. பத்து) மதிப்புகளில் வெளியிடப் படுகின்றன. யூ. டி. ஐ. இன் சொத்து, நாட்டில் பரவலாகப் பல நிறுவனங்களின் பங்குகளாகவும் கடன் பத்திரங்களாகவும் பரவியிருக்கிறது. ஒரு சாதாரண சிறிய முதலீட்டாளர்க்குச் கீழ்க்கண்ட சாதகங்களைச் செய்து தருகிறது.

1. பரவலாக, பல்வேறு வகைப்பட்ட தொழில்களில் மூலதனத்தைப் பகிர்ந்து முடக்குவதால், முதலுக்கு மோசம் வராத நிலையை உருவாக்கித் தருகிறது.
2. நன்கு திறமையாக நிருவாகம் செய்கிறது.
3. முறையான தொடர்ந்த வருவாய் கொடுக்கிறது,
4. யூ. டி. ஐ. எப்பொழுதும் யூனிட்டுகளைத் திரும்ப வாங்கத் தயாராக இருப்பதால் யூனிட்டுகளின் நீர்மை நிலை (Liquidity) காப்பாற்றப்படுகிறது.

யூ.டி.ஐ. யின் ஆரம்ப மூலதனம் 5 கோடி ரூபாய். அதில் ரிசர்வு வங்கியின் பங்கு 2.5 கோடி ரூபாய், ஆயுள் காப்பீட்டுக் கழகத்தின் பங்கு 75 லட்சம், ஸ்டேட் பாங்க் அதன் கிளைகள் ஆகியவற்றின் பங்கு 75 லட்சம்; பட்டியலில் சேர்ந்த வங்கிகள் பிற குறிப்பிடப் பட்ட நிதி நிலையங்கள் ஆகியவற்றின் பங்கு 1 கோடி ரூபாய். அது கீழ்க்கண்ட முறைகளின் ரிசர்வு வங்கியிடமிருந்து கடன் வாங்கலாம்.

1. நிலைச் சொத்துகள் அல்லாத (other than immovable property) பொறுப்புரிமை ஆவணங்களின் ஈட்டின் பேரில் 90 நாள்களுக்கு மிகாத காலக் கடன்கள்.
2. மத்திய அரசின் உத்திரவாதத்துடன் தானே வெளியிட்ட பத்திரங்களின் பேரில் 18 மாதங்களுக்கு மிகாத காலக் கடன்கள்

(1964, யூனிட் திட்டமில்லாத E. sec. 17(4 BBB of R. B. I. Act)

3. பிற யூனிட் திட்டங்களுக்கு, ட்ரஸ்ட்டின் சொத்துகளின் பேரில் ரிசர்வு வங்கி விதிக்கும் நிபந்தனைகளுக்கும் காலவீதக் கட்டுப் பாட்டுகளுக்கும் உட்பட்டு எழுப்பப்படும் கடன்கள்.

கடன்கள் ஒரு சமயத்தில் ஒரு திட்டத்திற்கு 5 கோடி ரூபாய்க்கு மேல் பெறக்கூடாது. அம்மாதிரிக் கடன்கள் மொத்தத்தில் 10 கோடி ரூபாய்க்கு மேல் செல்லக் கூடாது.

யூ டி. ஐ. தனது வருமானங்கள் ஊதியங்கள், ஈட்டங்கள் ஆகிய வற்றிலிருந்து வருமான வரியோ, சொத்து வரியோ பிறவரிகளோ கட்டத் தேவையில்லை என்று அதற்குத் தனிப்பட்ட விதிவிலக்கு அளிக்கப்பட்டுள்ளது. எனவே, தனது வட்டி வருமானத்தையோ (Interet Income) ஊதிய ஈவையோ (dividend) அவற்றைப் பெறு கின்ற இடங்களில் வரிக் கழிப்பு (Tax deduction) இன்றியே பெற்றுக் கொள்ளலாம். 1970-71 வரை யூனிட் வைத்துள்ள தனிநபர்களுக்கு அவர்கள் யூ.டி.ஐ. மூலம் பெறுகின்ற ஊதியத்தில் 1,000 ரூபாய் வரை வரிவிலக்கு அளிக்கப் பெற்றது. (இந்திய நிறுவனங்களின் பங்குகளால் வரும் ஊதிய ஈவுத் தொகையிலும் (dividend) சிறு சேமிப்பு மூலம் பெறும் வட்டி ஊதியத் தொகையிலும் மேலும் ஒரு 1,000 ரூபாய்க்கு வருமானவரி விலக்கு அளிக்கப் பெற்றது) 1970ஆம் ஆண்டு நிதிச் சட்டப்படி (Finance Act 1970) 1971-72 ஆண்டிலிருந்து இவ் வரிவிலக்கு வரம்பு ரூ. 3,000க்கு உயர்த்தப்படுகிறது. இன்னும் சில குறிப்பிட்ட யூனிட்டுகளில் மொத்தமாக முதலீடு செய்தால், சொத்து வரியிலிருந்து கூட ரூ. 1·5 இலட்சம் வரை விலக்கு அளிக்கப் படுகிறது.

யூ.டி.ஐ. தனது நடவடிக்கைகளில் கணிசமான முன்னேற்றத் தைக் காட்டியுள்ளது. 1969 ஜூனுடன் முடிந்த ஐந்து ஆண்டுகளில் 63 கோடி ரூபாய்க்கு மேல் யூனிட்டுகள் விற்பனையாகியுள்ளன. யூனிட்டுகளுக்கு விண்ணப்பங்களும் நாளுக்கு நாள் பெருகி வருகின்றன. 1969 டிசம்பர் மாதத்துள் அதன் விற்பனை அதிகமாகி 74 கோடியை எட்டியது. 72-73க்கு 23·3 கோடி ரூபாய். 73-74க்கு 30 கோடி ரூபாய்.

அதிக லாபம் ஈட்டும் முதலீடுகளைத் தேர்ந்தெடுப்பது சிரமம். முதலீடு செய்யப் பெறாத பகுதியை, வங்கிகளுக்கு இடையே நடக்கும் அழைப்புக்கடன் சந்தையில் 15% வட்டி வீதத்தில் குறுங் காலக் கடனாக வழங்கப்பட்டு வருகிறது. புதிய கூட்டுப் பங்கு நிறுவனங்களின் கடன் பங்கு வெளியீட்டுக்கு ஒப்புறுதி (under writing) அளிப்பதும் இலாபகரமாகவுள்ளது. சென்ற ஆண்டு

(1974-ல்) அந்நிய நிறுவனங்களில் அந்நியர்களுக்கு இருக்கும் பங்குரிமையளவைக் குறைக்கும் நடவடிக்கை எடுத்துக் கொள்ளப் பட்டது. அப்பொழுது அந்நியர்களின் பங்குகளில் இந்திய அரசின் மூலமாக யூனிட் ட்ரஸ்டுக்கு மாற்றப்பட்டன. 1974 ஜூன் முடிய யூனிட் மூலதனம் ரூ. 150 கோடிக்கு மேல் உள்ளது. 1974-75 யூனிட்டுகள் விற்பனை மந்தமடைந்துள்ளது. இதற்குக் காரணம், பொது மக்களின் சேமிப்புகள் பொது நிறுவனங்களின் (Public Companies) வைப்புகளாகச் செலுத்தி வைக்கப்படும் போக்கின் வளர்ச்சியே யாகும்.

1974 ஜூன் முடிய யூனிட் ட்ரஸ்ட் தனது 10 ஆண்டு வரலாற்றை முடித்துள்ளது. தொடக்கத்தில் 5½% இலாப ஈவு கொடுக்கப்பட்டது. இப்பொழுது அது 8% உயர்ந்துள்ளது.

யூனிட் ட்ரஸ்ட் பல வகைப் பட்ட தொழிலகங்களின் புதிய மூலதன வெளியீடுகளுக்கு ஊக்கம் கொடுத்து வருவதன் மூலம், நாட்டின் தொழில் வளர வாய்ப்பைப் பெருக்கியுள்ளது.

# 11. மைய வங்கியும் பணச் சந்தையும்

பணச் சந்தை பற்றிக் கூறப்படும் போது மைய வங்கி பற்றிக் கூறாமல் இருக்க முடியாது. ஓர் உடம்பின் நாடிகள் மூளையின் ஏவுதலின்படி நடப்பதைப் போலப் பணச் சந்தையில் செயல்படும் பல்வேறு நிறுவனங்களும் ஒரு மைய வங்கியின் கட்டுப்பாட்டுக்குட் பட்டுச் செயல்பட வேண்டும். அப்பொழுதுதான் அப் பணச் சந்தையை நல்ல வளர்ச்சியுற்ற பணச் சந்தையெனக் கூறலாம். ஒரு மைய வங்கி அமையப் பெறாத பணச் சந்தை ஒழுங்கீனமான நிதி நடவடிக்கைகளுக்கும், பொருளாதாரச் சிக்கல்களுக்கும் பிறப்பிட மாகத்தான் விளங்கும்.

**'எது முதலில் தோன்ற வேண்டும்?'**

நிதியியல் அறிஞர்களிடையே இந்தச் சர்ச்சை அடிக்கடி நிகழ்வ துண்டு. அதாவது 'மைய வங்கி முதலில் தோன்ற வேண்டுமா அல்லது பணச் சந்தையின் பிற கூறுகள் தோன்றி வளர்ந்த பின் மைய வங்கி தோன்ற வேண்டுமா'.

இக் கேள்விக்குப் பல அறிஞர்கள் பல வகையில் கருத்துத் தெரிவித்துள்ளனர். அனைத்தையும் இங்கு விரிவாக ஆராயத் தேவையில்லை. பெஞ்சமின் ஸ்ட்ராங் உள்ளிட்ட பெரும்பாலான அறிஞர்கள் ஏற்றுக் கொள்ளும் கருத்து என்னவென்றால், மைய வங்கிதான் முதலில் தோற்றுவிக்கப்பட வேண்டும் என்பதே. மைய வங்கி முதலில் அமைந்து விட்டால், ஏனைய பணச் சந்தையின் அங்கங்களெல்லாம் வியப்புறத் தக்க வகையில் தோன்றி வளர்ந்து விடுகின்றன.

மைய வங்கியின் அமைப்பு முறை அவ்வந் நாடுகளின் அரசியல், பொருளாதாரப் பின்னணிக் கேற்ப ஒவ்வொரு நாட்டிலும் வேறு படும். ஆனால் அவ் வமைப்பு முறைகள் பணச் சந்தையைக் கட்டுப் படுத்தும் வகையில் அமைய வேண்டும் என்பதில் யாருக்கும் கருத்து வேறுபாடில்லை.

## மைய வங்கிக் கட்டுப்பாடு

குறுகிய காலக் கடன்களுக்கு வகை செய்யும் சந்தையைப் பணச் சந்தை யென்கிறோம். இக் கடன் நடவடிக்கைககள் பெரும்பாலும் தொழில் நிலையங்களின் உண்டியல்கள், கருவூல உண்டியல்கள், பங்கு மாற்று நடவடிக்கைகள், வங்கிகளிடையே நடக்கும் கொடுக்கல் வாங்கல் ஆகியவற்றால் உருவாக்கப்படுகின்றன. இவற்றில் நல்ல நீர்மையும், அதே சமயத்தில் பாதுகாப்பும் உள்ளமையால் இவற்றின் மேல் நிதி முதலீடு செய்வதில் வணிக வங்கிகள் ஈடுபாடு காட்டுகின்றன. பணச் சந்தையில் பங்குபெறும் எல்லா நிறுவனங்களும் தங்கள் தேவைகளுக்கு வணிக வங்கிகளைச் சார்ந்திருக்க வேண்டும். அதே போல் வணிக வங்கிகள் தங்கள் தேவைகளுக்கு மைய வங்கியைச் சார்ந்திருக்க வேண்டும். ஒரு மைய வங்கி, வங்கிகள் மூலமே, பணச் சந்தையையும், அப் பணச் சந்தையின் மூலம் நாட்டின் நிதிப் புழக்கம், கடன் கட்டுப்பாடு, பொருளாதார நடவடிக்கைகள், அந்நியச் செலாவணி ஆகியவற்றையும் கட்டுப்படுத்த முடியும். பணச் சந்தை, தன் சுய நிதி வளத்துடனும், வங்கிகளிடமிருந்து கிடைக்கும் கடன் நிதியுடனும் எவ்வளவு தூரம் நன்கு செயல்படுகிறது என்பதைப் பொறுத்தும், வங்கிகள், எவ்வளவு தூரம் மைய வங்கியிடம் மறுதள்ளுபடிக்கும் கடன்களுக்கும் வேண்டி நிற்கின்றன என்பதைப் பொறுத்தும்தான், ஒரு மைய வங்கியின் ஆற்றலை அல்லது அதிகாரத்தை நிருணயிக்க முடியும். நல்ல ஆற்றல் பெற்ற மைய வங்கி இயங்கும் பணச் சந்தையை வளர்ச்சியுற்ற பணச் சந்தை யென்றும், ஆற்றல் பெறாத மைய வங்கி இயங்கும் பணச் சந்தையை வளர்ச்சி யற்ற பணச் சந்தை யென்றும் கூறலாம்.

## வளர்ச்சியுற்ற பணச் சந்தை

ஒரு வளர்ச்சியுள்ள பணச் சந்தையில், வங்கியியல் நன்கு வளர்ச்சியுற்றுக் காணப்படும். வங்கிகள் பணச் சந்தையில் ஈடுபட, வணிகத் தாள்களான மாற்றுண்டியல்கள், கருவூல உண்டியல்கள், பங்குப் பத்திரங்கள், கடன் பத்திரங்கள் முதலானவை நல்ல புழக்கத்தில் இருக்கும். இவ் வணிகத் தாள்களின் புழக்கத்தில், வங்கிகளுக்கும், தொழில், வணிக நிறுவனங்களுக்கும் இடையில், தள்ளுபடியகங்கள், ஏற்பகங்கள், தரகர்கள் முதலானவர் செயல்படுவர். குறுங்காலச் சொத்துகளாகிய இவ் வணிகத் தாள்களை, வாங்கி, விற்பனை செய்யும் இவ்விடை நிலையர் ஒவ்வொருவரது நடவடிக்கையும், பணச் சந்தையின் செயல்பாட்டைப் பல துறைகளாக்கி, ஒவ்வொரு துறையும் ஒரு துணைச் சந்தையாகச் செயல்படும். நல்ல வளர்ச்சியுற்ற பணச் சந்தையில் பல துணைச் சந்தைகள் திறம்பட இயங்கும். எந்தத் துணைச் சந்தை, பணச்

சந்தையில் முக்கிய இடத்தை வகிக்கிறது என்பது நாட்டுக்கு நாடு மாறுபடலாம். ஆனால் ஒவ்வொரு துணைச் சந்தையும் ஓரளவு நியாயமான அளவுக்குப் போட்டி நிலையில் செயல்படும். தொழில், வணிக வளர்ச்சிக்காகக் கடன் பெறுவோர் தொகையும், அவர்களது கடன் தேவையை நிறைவு செய்யும் நிதியளிப்போர், அல்லது நிறுவனங்களின் எண்ணிக்கையும் அதிகமாக இருக்கும். ஒவ்வொரு துணைச் சந்தையும், மிக்க திறன் பெற்றதாகவும், நல்ல சுறுசுறுப்புடனும் செயல்பட்டாலும், இத் துணைச் சந்தைகள் ஒன்றையொன்று சார்ந்து செயல்படுவதாலும், ஒரு சந்தையில் ஏற்படும் நிதிப் புழக்க வீதம் பிற சந்தைகளில் பிரதி பலிப்பதாலும், இவற்றிடையே இடையறாத நிதி மாற்றங்கள் நிகழ்வதாலும், இவற்றின் சொத்துகளின் விலையில் அல்லது வட்டி வீதத்தில் பெரிய மாற்றங்களோ மாறுபாடுகளோ அடிக்கடி ஏற்பட மாட்டா. இவ்வகையில் திறன் பெற்ற துணைச் சந்தைகளைக் கொண்ட பணச் சந்தையானது, அது செயல்படும் நாட்டினுடைய நிதி நிலையை மட்டுமல்லாது பிற நாட்டு நிதிப் பாதிப்புகளையும் மிகத் துல்லியமாகப் பிரதிபலிக்கும் ஆற்றலைப் பெற்றிருக்கும்.

### வளர்ச்சியுற்ற பணச் சந்தையில் மைய வங்கி

இவ்வகையான வளர்ச்சியுற்ற பணச் சந்தையில் செயல்படுவது ஒரு மைய வங்கிக்கு மிக மிக எளிதாகும். அழைப்புப் பணச் சந்தை நன்கு செயல்படுவதால், வங்கிகள் மிகக் குறைந்த ரொக்க இருப்புடன் செயல்பட முடிகிறது. அவற்றின் ரொக்க நெருக்கடிகளைச் சமாளிக்கக் கருவூல உண்டியல் சந்தையும், மாற்று உண்டியல் சந்தையும், அவற்றிற்கு ஆபத்து உதவிகளாகக் கை கொடுக்கின்றன. இந் நடவடிக்கைகளின் மூலமாக, நிதிப் புழக்கத்தையும், வட்டி வீதங்களையும் நெறிப்படுத்துவது ஒரு மைய வங்கிக்கு மிக எளிதான வேலையாகி விடுகிறது.

### வளர்ச்சியுறாப் பணச் சந்தையில் மைய வங்கி

வளர்ச்சியுறாப் பணச் சந்தையில் மைய வங்கி, வங்கிகளின் மீது சரியான கட்டுப்பாடு செலுத்த முடிவதில்லை. நல்ல அழைப்புப் பணச் சந்தை செயல்படாத காரணத்தால், வங்கிகள் அதிகமான ரொக்க இருப்பைத் தேக்கி வைத்துக் கொள்கின்றன. இதனால், அவற்றிற்கு நிதி நெருக்கடி ஏற்படும் வாய்ப்புகள் மிகவும் குறைவாகும். இதனால், அவை மைய வங்கியின் உதவியின்றியே செயல்படத் தெம்பும் திறனும் பெற்று விடுகின்றன. இதன் மொத்த விளைவாகப் பணச் சந்தையின் ஏனைய சிறப்பகங்களாகிய மாற்று உண்டியல் சந்தை, ஏற்புச் சந்தை, தள்ளுபடிச் சந்தை, கருவூல உண்டியல் சந்தை ஆகியவை வளர்வதற்கு

வாய்ப்பே ஏற்படாமல் போகிறது. இந் நிலையைச் சரிக்கட்ட, தவிர்ப்பு நடவடிக்கையாக, மைய வங்கி, வெளிச் சந்தை நடவடிக்கைகளில் தன் அளவுக்கு அதிகமாக இறங்க வேண்டியதிருக்கும். அப்படி மிகுந்த அளவில் வெளிச் சந்தை நடவடிக்கைகளை மேற்கொண்டால் ஆவணங்களின் விலை சரியும். ஆவணங்களும் மிகுந்த அளவுக்கு அல்லது தேவையான அளவுக்குக் கிடைக்கமாட்டா. வங்கிகளிடையே போதிய ஒருங்கிணைப்பு இல்லாமையால் அவற்றைக் கட்டுப் படுத்தவும் முடியாது. துணைச் சந்தைகள் போதிய அளவு இல்லாமையால் அவற்றின் பணிகளை வேறு மைய வங்கியே ஏற்றுச் செயல்பட வேண்டியிருக்கும்.

வளர்ச்சியுறுப் பணச் சந்தையில் 'வங்கி வீதம்' (Bank rate) நிலையானதாக அமைய முடியாது. வங்கிகளின் கடன்களை நெறிப் படுத்துவதன் மூலம் ஒரு மைய வங்கி தன் நாட்டில், முதலீடு, வருமானம், விலைவாசி ஆகியவற்றில் தான் விரும்பும் ஒரு மாற்றத்தை நிகழ்த்தவும், அந்நியச் செலாவணி நாட்டின் பொருளாதாரத்தைப் பாதிக்காத வகையில் கட்டுப்படுத்தவும், அதற்குள்ள ஒரு வலுவான ஆயுதம் 'வங்கி வீதம்' எனப்படும் அதனுடைய வட்டி வீதமே. வங்கி வீதத்தின் மூலம், பிற பணச் சந்தை அங்கங்களில் நிலவும் வட்டி வீதங்களையும் நெறிப்படுத்த முடியும். இந்த ஆயுதத்தை மைய வங்கி கையாள்வதற்கு வாய்ப்பளிக்கும் ஒரே சந்தர்ப்பம், வங்கிகள், தம் ரொக்க நிலையைப் பாதுகாத்துக் கொள்வதற்காக, தம் குறுங்காலச் சொத்துகளை மறு தள்ளுபடி செய்ய அதனிடம் நெருங்கும் போதுதான். வளர்ச்சியுறுப் பணச் சந்தையில், வங்கிகள் மைய வங்கியை அணுகுவது அரிதாகையால் இவ் வாயுதத்திற்கு வேலையே இல்லாமல் போய் விடுகிறது.

மறு தள்ளுபடி வசதிக்காக வங்கிகள் மைய வங்கியை அடிக்கடி அணுகாமையால், கடன் முறைகளின் கட்டுப்பாட்டிற்கு, மைய வங்கி வேறு சில கட்டுப்பாட்டு முறைகளை வகுத்துச் செயல்பட வேண்டியுள்ளது. அவ்வகையில், 'மாறுபடும் ரொக்க வீதம்' (Variable cash ratio) என்ற ஒரு முறையை, கனடா, நியூசிலாந்து நாட்டு மைய வங்கிகள் கடைப் பிடிக்கின்றன. இம் முறையில், வெளிச்சந்தை நடவடிக்கைகளில் நேரடியாக ஈடுபடுவதன் மூலம் கிடைக்கக் கூடியதைக் காட்டிலும் ஓரளவு அதிகமான பலனை அடையலாம். 'மாறுபடும் ரொக்க வீத' முறை ஒரு நாட்டின் எல்லா நடவடிக்கைகளையும் பாதிக்கும். இம் முறை பெரும்பாலும், இன்னொரு நாட்டைச் சார்ந்திருக்கும் பொருளாதாரப் போக்குள்ள நாடுகளில்தான் கையாளப் படுகின்றன.

வெளி நாட்டு வாணிபத்தை நம்பியுள்ள நாடுகளில், சில சமயங்களில் அந் நாட்டுப் பொருள்களுக்கு அதிகமான அந்நியத்

தேவை ஏற்படலாம். அதையடுத்து, பின்னிறக்கமும் (Recession) ஏற்படும் அவ்வாறு பின்னிறக்கம் ஏற்பட்டால் வேலை வாய்ப்பு களுக்கும், தேசிய வருமானத்திற்கும் கேடு நேராமல் நாட்டை இட்டுச் செல்லப் போதுமான அளவு வளச் சாதனங்கள் (resources) தேவைப்படும். அம் மாதிரிச் சமயங்களில் மைய வங்கி வெளிச் சந்தை நடவடிக்கைகளில் நேரடியாக ஈடுபடுவதன் மூலம் அப் பெரும் பொறுப்பை ஏற்றுக் கொள்ளலாம். ஆனால், இம் 'மாறுபடு ரொக்க வீத' முறையைக் கையாண்டால், சமூகம் முழுவதும் அப் பொறுப்பை ஏற்றுச் சமாளிக்கும். இதனால் சமூகத் திற்கு ஒரு தன்னம்பிக்கையும் பொறுப்புணர்ச்சியும் வரும். இன்னும் சில சமயங்களில், அந்நிய நிதியின் ஊடுருவலால், ஒரு நாட்டில் பண வீக்கம் ஏற்படும் அபாயநிலை இருக்குமானால், அப்போதும் இந்த ரொக்க வீத மாற்று முறையினால் மைய வங்கி அதைத் தடுக்கலாம். இரண்டாம் உலகப்போர் முடிந்த பருவத்தில், பல நாடுகளில் வங்கிகளிடம் ஏராளமான ரொக்க வைப்புகள் குவிந்தன. மைய வங்கியிடம் கடன் பெற வேண்டிய நிலை அவற்றிற்கு ஏற்படவே யில்லை. அந் நிலையில் பல நாட்டு மைய வங்கிகள், ரொக்க நிதி வீதங்களை உயர்த்தி, வணிக வங்கி களின்பால் தம் கட்டுப்பாட்டைக் காப்பாற்றிக் கொண்டன.

இந்த ரொக்க வீதக் கட்டுப்பாடும் பல வளர்ச்சியுறாத நாடு களில் எதிர்பார்த்த பலனை அளிக்கவில்லை. காரணம், வங்கி களிடம் அளவுக்கு அதிகமான ரொக்கம் குவிந்திருந்தமையே யாகும். ப்ளம்ப்ட்ரி (Plumptry) அவர்கள், கனடா, நியூசி லாந்து நாடுகளில் தோல்வியுற்றதைக் காட்டி இத் திட்டம் வலு வற்றது என்று குறிப்பிடுகிறார்.

'பொறுக்குக் கடன் கட்டுப்பாடு' என்ற இன்னொரு முறை சில நாடுகளில் கையாளப்பட்டது. இம் முறை நன்கு வெற்றி யடைய வேண்டுமென்றால், மைய வங்கிக்கும் மற்ற வங்கி களுக்கும் இடையே நல்ல உறவும் ஒத்துழைப்பும் வேண்டும். மைய வங்கிக்குச் சட்ட பூர்வமான அதிகாரங்களும் மிகுதியாக வேண்டும். ஆனால் அவ் வதிகாரங்கள் பிரயோகிக்கப்படும்போது வங்கிகளால் பெரிதும் வெறுக்கப்படும். மைய வங்கி அநாவசிய மாகத் தங்கள் நடவடிக்கைகளில் தலையிடுவதாக வங்கிகளால் குறை கூறப்படும். எனவே, இம் முறை, மக்களாட்சி நடை பெறும் குடியரசு நாடுகளில் பெரும்பாலும் மேற் கொள்ளப்படு வதில்லை.

**மைய வங்கியும் வட்டி வீதங்களும்**

பணச் சந்தையில் பருவகாலத் தேவைக்கேற்ப நிதிப் புழக் கத்தில் மும்முரமும் மந்தமும் காணப்படும். இந்தியா போன்ற

பொருளாதாரம் வேளாண்மையைச் சார்ந்துள்ள நாடுகளில் வேளாண்மை விளைபொருள்கள் சந்தைக்கு விற்பனைக்கு வரும் போது, வணிக நடவடிக்கைகள் பெருகும். வணிகர்கள் தங்கள் நிதித் தேவைக்கு வணிக உண்டியல்களை வரைவதும், அவற்றை வங்கிகளிடம் தள்ளுபடி செய்வதும், அவ்வாறு பெற்ற உண்டியல்களை, வங்கிகள் தங்கள் ரொக்க நிலையைச் சரிக்கட்டுவதற்காக மைய வங்கியிடம் மறு தள்ளுபடி செய்வதும் மிக அதிகமாக நடக்கும். அச் சமயங்களில் நிதித் தேவை மிகுதியினால் வட்டி வீதமும் உயரும். அதே போல மந்தப் பருவத்தில் பணச் சந்தையில் நிதித் தேவை குறைவாக ஏற்படுவதால் வட்டி வீதம் குறையும்.

சில சமயங்களில், புதிய தொழிற்சாலைகள் ஒரே சமயத்தில் பல இடங்களில் தோன்றும் ஒரு நிலை ஏற்பட்டாலும், ஏற்கெனவே செயல்பட்டுவரும் தொழிலகங்கள் தமது வளர்ச்சிக்காகப் புதிய கடன் பத்திரங்களை வெளியிட்டாலும், அரசாங்கம் தனது குறுங் காலத் தேவைகளுக்குக் கருவூல உண்டியல்களை வெளியிட்டாலும், அல்லது வேறு ஆவணங்களை வெளியிட்டாலும் பணச் சந்தையில் நிதித் தேவை அதிகரிக்கும். அப்போதும் பணச் சந்தை வட்டி வீதங்கள் உயரும். நல்ல ஆற்றல் மிக்க மைய வங்கி செயல்படும் வளர்ச்சியுற்ற பணச் சந்தையில், இந்த வட்டி வீதங்களின் 'ஏற்றத் தாழ்வு' (Fluctuation) அதிகமான இடைவெளி யுடையதாக இராது. பெரும்பாலும் மைய வங்கி வீதத்தை அநுசரித்தே இவ் வீதங்கள் அமையும்.

**வங்கி வீதம் (Bank rate)**

பொது மக்கள் குறிப்பிட்ட ஆவணங்களின் மீது மைய வங்கியிடமிருந்து அல்லது வணிக வங்கிகளிடமிருந்து ஒரு குறிப்பிட்ட தள்ளுபடி வீதத்தில் பண வசதி பெறலாம். இத் தள்ளுபடி வீதத்திற்குப் பெயர்தான் 'வங்கி வீதம்' என்பது. மைய வங்கி, பெரும்பாலும் பொது மக்களுடன் நேரடித் தொடர்பு கொள்வதில்லை. வங்கிகள் மூலமோ, பணச் சந்தை அங்கங்களின் மூலமோதான் தொடர்பு கொள்கிறது. வணிக வங்கிகள், மைய வங்கியிடமிருந்து பண வசதி பெறுவதற்கு விதிக்கப்படும் வீதங்களின் அடிப்படையே வங்கி வீதமாகும். வளர்ச்சியுற்ற பணச் சந்தைகளில் வங்கி வீதம் கடும் வட்டி வீதமாக (Penal Rate) இருக்காது.

இங்கிலாந்திலும், அமெரிக்காவிலும் வங்கி வீதத்திற்கும் வைப்புகள் வீதத்திற்கும் (Deposits Rate) நெருங்கிய தொடர்பு உள்ளது. பணச் சந்தையில் நிலவும் பிற கடன் வீதங்கள், வங்கி

வீதத்திற்கு ஏற்பவும் பொருளாதார நிலைகளுக்கேற்பவும் அவ்வப்போது நிருணயிக்கப்படுகின்றன.

வைப்பு வீதம், கடன் வீதம், அழைப்புக் கடன் வீதம், மாற்றுண்டியல் வீதம், மறுதள்ளுபடி வீதம் ஆகிய இவற்றிடையே ஒரு வித ஒற்றுமைப் போக்கும், இவை வங்கி வீதத்தை அநுசரித்து இயங்கும் இயல்பும் நல்ல பணச் சந்தையின் அறிகுறிகளாகும். வங்கி வீதத்தின் ஏற்ற இறக்கங்களுக்கு ஏற்ப, மேற்குறிப்பிட்ட வீதங்களிலும் ஏற்ற இறக்கங்கள் நிகழ வேண்டும். இங்கிலாந்தில் வைப்பு வீதம் வங்கி வீதத்தை விட 1½% குறைவு. அழைப்புக் கடன் வீதம் 1% குறைவு. கடன் வீதம் 1% அதிகம்.

இந்தியாவைப் பொறுத்த வரையில், இங்கு நிலவும் பணச் சந்தையில், இன்னும் வங்கி வீதத்தை அநுசரித்த வட்டி வீதங்கள் உருவாகவில்லை. அவ்வப்போது வங்கி வீதத்தில் ஏற்பட்ட மாறுதல்களுக்கேற்பச் சந்தை வீதங்களில் மாற்றங்கள் ஏற்படவில்லை. அத்துடன், இடத்திற்கு இடம், பருவத்திற்குப் பருவம் மாறுபடக் கூடியனவாகவும் ஒன்றுக்கொன்று அதிகமான இடைவெளியையுடையனவாகவுமே சந்தை வீதங்கள் நிலவி வருகின்றன. 40 ஆண்டுகளுக்கு முன் இந்திய ரிஸர்வு வங்கி தோற்றுவிக்கப்பட்டபோது என்ன நிலைமையோ அதே நிலைமைதான் இன்னும் நிலவுகிறது.

இந்திய வங்கி வீதம் 1963 ஜனவரியில் 4½% ஆக இருந்தது. அது 1964 செப்டம்பரில் 5% ஆகவும், 1965 பிப்ரவரியில் 6% ஆகவும் உயர்ந்தது. ஆனால் 1968 மார்ச் மாதத்தில் 5%ஆகக் குறைந்தது. மறுபடி 1971 ஜனவரியில் 6%ஆக உயர்ந்தது. 1973 மே மாதத்தில் 7% ஆகவும் 1974 ஜூலை 22ஆம் தேதி 9% ஆகவும் உயர்ந்தது.

40 ஆண்டு வரலாற்றில் இந்திய ரிஸர்வு வங்கி, தனது வங்கி வீதத்தை ஒரே சமயத்தில் 2% உயர்த்தியது இதுதான் முதன் முறையாகும். வங்கிகள் தமது வைப்புத் தொகைகளுக்கு அளிக்கும் வட்டி வீதத்தை 8%லிருந்து 10%ஆக உயர்த்தியுள்ளன. அதே சமயத்தில் அவை தாம் வழங்கும் கடன்களுக்கு வசூலிக்கும் குறைந்த பட்ச வட்டி வீதமும் 11%லிருந்து 12½ ஆக்கப்பட்டது. சந்தை நிலைமைகளால் விலை பாதிக்கப்படக் கூடிய (Sensitive Commodities) பொருள்களின் மீது வழங்கப்படும் கடன்களுக்கு வட்டி வீதம் 13%லிருந்து 15% கூடுதலாக்கப்பட்டது. ஆனால், இவ் விகிதங்களைப் போல இரு மடங்கும், மும்மடங்கும் கூட நாட்டு வங்கியராலும், பிற இடைநிலை நிதி நிறுவனங்களாலும் பொது மக்களிடமிருந்து வசூலிக்கப்படுகின்றன. இந்திய ரிஸர்வு வங்கியோ தன்னை ஓர் ஆற்றல் மிக்க மைய வங்கியாக ஆக்கிக் கொள்ளவும், இந்தியப் பணச் சந்தையை ஒரு கட்டமைந்த பணச் சந்தையாக வளர்க்கவும் எல்லாவித முயற்சிகளும் மேற் கொண்டு வருகிறது.

# 12. இந்தியப் பணச் சந்தையின் குறைகளும் அவற்றை நீக்கும் வழிகளும்

இந்தியப் பணச் சந்தை ஒரு கட்டுக்கோப்பில்லாமல் வளர்ந்து பல குறைபாடுகளையுடையதாகச் செயல்படுகிறது. 1935-ல் இந்திய ரிஸர்வு வங்கி தொடங்கப் பெற்றதற்கு முன்னிருந்த குறை பாடுகளில் பல இன்னும் காணப்படுகின்றன.

## 1. ஒருங்கிணைப்பின்மை

இந்தியப் பணச் சந்தையின் ஒரு பெரிய குறை என்னவென்றால், பணச் சந்தை உறுப்புகளிடையே போதிய தொடர்பும் இணைப்பும் இன்மையே. ஒரு காலத்தில், இம்பீரியல் வங்கி, கூட்டுப் பங்கு வங்கிகள், கூட்டுறவு வங்கிகள் பிற இந்திய வங்கிகள், நாட்டு வங்கிகள், ஆகியவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு துறையில் திறன் பெற்றவையாக விளங்கின. அவ்வத் துறைகளைத் தவிர, பிற துறை களைப்பற்றிக் கவலைப்படாமலும் இருந்தன. மேலும் அவற்றிடையே நிலவிய உறவும் அவ்வளவு நன்றாக இல்லை. அப்போதைய ஆங்கில அரசு, இம்பீரியல் வங்கிக்கும் அந்நிய வங்கிகளுக்கும் தனியாதரவு தந்து வந்ததால், பிற வங்கிகள், அவற்றின் மேல் ஒருவிதப் பொறா மையைக் கொண்டிருந்தன. அப் பழைய பகைமைப் போக்கு இன்று, ஒழுங்கமைவுற்ற (Organised) பகுதிக்கும், ஒழுங்கமைவற்ற (Un organised sector) பகுதிக்கும் இடையே நிலவி வருகிறது.

இந்திய மைய வங்கியாக 1935-ல் ரிஸர்வு வங்கி தோற்றுவிக்கப் பட்டதன் பின்னர் நிதி நிறுவனங்களின் தனிமைப் போக்கு ஓரளவு குறைந்து கொண்டே வந்தது. 1949-ல் வங்கி நிறுவனங்களின் ஒழுங்காற்றுச் சட்டம் கொண்டுவரப்பட்ட பின், ரிஸர்வு வங்கி, எல்லா வங்கிகளையும் ஒரு நிறையில் நடத்தத் தொடங்கியது. புது வங்கித் தொடக்கம் அனுமதி வழங்கல் (Licensing), பங்கு மூலதனப் பிரிப்பு, கடன், முன்னளிப்பு முதலானவை வழங்கல் ஆகிய முறை

களில் எல்லா வங்கிகளுக்கும் ஒரே வித விதிமுறைகளையே வகுத்தளித்தது. ஐரோப்பியர்களால் நடத்தப்பட்ட வங்கிகளுக்கும் இந்தியர்களால் நடத்தப்பட்ட வங்கிகளுக்கும் இடையே நெடுங்காலமாக இருந்து வந்த பகைமைப் போக்கு பெரும் பகுதி மறைந்து விட்டது.

### 2. ஒழுங்கமைவற்ற சந்தையின் நடவடிக்கை

இந்தியப் பணச் சந்தையிலுள்ள இன்னொரு பெருங்குறை நாட்டு வங்கியர், பரம்பரை வட்டித் தொழிலர் அடங்கிய ஒழுங்கமைவற்ற பணச் சந்தையும் இயங்கி வருவதாகும். இவர்களுடைய கடனளிப்புகளில் நெடுங்கால, குறுங்காலக் கடன்களை வேறு பிரித்தறிவது சிரமம். அதே போல், இவர்கள் வரையும் உண்டிகளையும், (Hundi) மாற்றுண்டியலா (Bill of Exchange), பணவசதி உண்டியலா (Accommodation of Finance Bill) என்று எளிதில் வேறு பிரிக்க முடியாது. இவர்களைத் தன் கட்டுப் பாட்டுக்குள் கொண்டு வருவதற்கு ரிஸர்வு வங்கி இதுவரை எத்தனையோ முயற்சிகள் செய்தும் அதற்கு இன்னும் முழு வெற்றிகிட்டவில்லை. இதனால், அதற்குப் பணச் சந்தையின் மீது நியாயமாக இருக்க வேண்டிய செல்வாக்கு இல்லாமல் ஒரு சிறிய அளவில் தான் உள்ளது என்றாலும் இந்த நாட்டு வங்கியர் தங்கள் நிதி வசதிக்கு வணிக வங்கிகளை அணுகுவது நாளுக்குநாள் பெருகி வருவதாலும், அவ் வங்கிகள் ரிஸர்வு வங்கியின் கட்டுத் திட்டங்களுக்குட்பட்டுச் செயல்படுவதாலும், கால கட்டத்தில் இவர்கள் ரிஸர்வு வங்கியின் கட்டுப்பாட்டிற்குள் வந்துவிடுவர் என நம்ப இடமும் உண்டு.

### 3. வட்டி வீதத்தில் வேறுபாடுகள்

இந்தியப் பணச் சந்தையிலுள்ள மற்றொரு குறை, இங்கு நிலவும் வட்டி வீதங்கள் உண்டாக்குகின்ற குழப்பங்கள் 40 ஆண்டுகளுக்கு முன்னரே 'வங்கி ஆய்வுக்குழு' (Banking Enquiry Committee) கீழ்க் கண்டவாறு குறிப்பிட்டுள்ளது,

இந்தியாவில் 'அழைப்புக்கடன் (Call loan) வீதம் ¾%, உண்டி (Hundi) வீதம் 3%, வங்கி வீதம் (Bank Rate) 4%, சிறு வணிகரிடையே சந்தையில் நிலவும் வீதம் 6¾%, கல்கத்தாச் சந்தையில் உண்டியல் வீதம் 10% என்று ஒரே சமயத்தில் பல இடங்களில் பலவாறு நிலவுகிறது. இது, பல்வேறு மையங்களிடையே கடன் போக்குவரத்தில் உள்ள மிக மிக மந்தமான நிலையை உணர்த்துகிறது. இதற்கு அடிப்படையான காரணம், பணச் சந்தையின் ஓரங்களிலிருந்து இன்னோர் அங்கத்திற்கு நிதி புரள்வது மிகவும் சிரமமாக உள்ளது என்பதேயாகும்.'

லண்டனில் பணச் சந்தை வீதம், வங்கி வீதத்தை (Bank Rate) அநுசரித்தே இயங்குகிறது. ஆனால் இந்தியாவிலோ, அம்மாதிரி யான ஒரு நிலை இன்னும் உருவாகவில்லை யென்றே கூறலாம். பம்பாய், கல்கத்தா ஆகிய இரண்டு சந்தைகளுக்குமிடையே கூட வணிகப் போக்கிலும், வீத மாற்றங்களிலும் பெரிதும் வேறுபாடு காணப்படுகிறது. இது வணிகத்தாள்களின் விலைகளில் அதிகமான பாதிப்புகளை உண்டாக்குகிறது. இந்திய ரிஸர்வு வங்கி, இந்த நிலையைத் தவிர்த்து, இந்தியா முழுவதும் ஒரே வீதம் நிலவுவதற்கு உதவும் வகையில் ஒரு மையத்திலிருந்து இன்னொரு மையத்திற்குப் பணம் அனுப்புதற்காகும் செலவைக் குறைத்து, முறைகளையும் எளிமைப்படுத்தி யுள்ளது.

ஒவ்வோராண்டும், நவம்பர் மாதத்திலிருந்து ஜூன் வரையிலான விளைபொருள் விற்பனைப் பருவத்தில் நிதித் தேவை அதிகமாகவும், ஜூலையிலிருந்து அக்டோபர் வரையிலான மந்தப் பருவத்தில் நிதித் தேவை குறைந்தும் ஏற்படுகிறது. ஆண்டில், இவ் விரண்டு பருவங் களிலும் பணச் சந்தை வட்டி வீதம் பெரிதும் வேறுபடுகிறது. 1935க்கு முன் அழைப்புக் கடன் வீதத்தின் 'ஏற்றத் தாழ்வு' (Fluctuation) மும்முரப் பருவத்தில் 7%லிருந்து 8% வீதமாகவும், மந்தப் பருவத்தில் 1%லிருந்து ½%ஆகவும் இருந்தது. ரிஸர்வு வங்கி செயல்படத் தொடங்கியபின் இவ் வீத ஏற்றத் தாழ்வு 3%லிருந்து ½% ஆகக் குறைந்து விட்டது. தொடக்க நாளிலிருந்தே ரிஸர்வு வங்கி, பணச் சந்தையில் நிலவும் குறுங்கால வீதத்தை, பருவகாலப் பாதிப்பு களுக்கேற்ப எவ்வளவு குறைக்க முடியுமோ அவ்வளவு குறைக்கப் பாடுபட்டு வந்துள்ளது.

தற்போது அண்மைக் காலத்தில் ஏற்பட்ட பண வீக்கத்தினால் குறுங்கால வீதம் 11% லிருந்து 15% வரை உயர்ந்துள்ளது.

**4 உண்டியல் சந்தை இல்லாமை**

அடுத்த பெருங்குறை, இந்தியாவில் ஒரு நல்ல உண்டியல் சந்தை இல்லாமையாகும் கடன் முறைகள் நன்கு செயல்பட வேண்டு மென்றால் நன்கு அமையப் பெற்ற உண்டியல் சந்தையொன்று கட்டாயம் வேண்டும். அக் கடன் முறைகளைச் செயல்படுத்தும் நிறுவனங்களிடையே நல்ல உறவுத் தொடர்பும், இறுதி நிலையில் அவையனைத்தும் ரிஸர்வு வங்கிக் கட்டுப்பாட்டுக் குட்படுவனவாகவும் அமைய வேண்டும். ஆனால் அப்படிப்பட்ட ஓர் உண்டியல் சந்தை இதுநாள் வரை சரியாக உருவாகவில்லை. அதற்கான காரணங்கள் 'உண்டியல் சந்தைத் திட்டம்' என்ற தலைப்பின் கீழ் விரிவாக ஆராயப்படுகின்றன. அவற்றில் முக்கியமான ஒன்றை இங்குக் குறிப்பிட்டேயாக வேண்டும்.

இந்திய விடுதலைக்கு முன் வங்கிகள், குறிப்பாக அந்நியச் செலாவணி (Exchange Banks) வங்கிகள் பெரும்பாலும் ஆங்கிலேயர் களால் நடத்தப் பெற்று வந்தன. இவர்களுக்கு வணிக மாற்று உண்டியல்களின் (Bill of Exchange) உபயோகமும், வணிக முன் னேற்றத்தில் அதனுடைய முக்கியத்துவமும் நன்ருகத் தெரியும். என்றாலும் இந்திய உண்டியல்களைத் தள்ளுபடி செய்வதென்ருலோ, மறு தள்ளுபடி செய்வதென்ருலோ இந்திய ரிஸர்வு வங்கி யிடம் செய்யாமல், இலண்டன் தள்ளுபடிச் சந்தையிலும், பாங்க் ஆப் இங்கிலாந்திடமும் செய்து வந்தனர். அத்துடன், பல சமயங் களில் உண்டியல்களைத் தள்ளுபடியே செய்யாமல் அவற்றின் முதிர்வுக் காலம் வரை வைத்திருந்து வசூலித்துக் கொண்டனர். ஆங்கிலேயரது இம் மாற்ருந்தாய்ப் போக்குக்கு, நாட்டு வங்கியரது ஒத்துழையாமைப் போக்கும் ரிஸர்வு வங்கிக் கட்டுப்பாட்டுக்குள் வர விரும்பாத பிடிவாதப் போக்கும் பெரிதும் துணை செய்தன. இவர்கள் முறையான உண்டியல் சந்தை வளர்ச்சிக்கு ஊறு செய்தார் களே தவிர ஒத்துழைப்போ ஊக்கமோ தரவில்லை.

### 5. வங்கி முறை வளராமை

இந்தியாவில் நவீன, மேற்கத்திய பாணி வங்கி முறை விரைவாக வளராமல் போனதும் ஒரு பெருங்குறையாகும்; நவீன வங்கிகள் அங்கங்கே கிளைகள் தொடங்குவதில் போதிய அக்கறையும் சுறு சுறுப்பும் காட்டவில்லை. இதனுல், நிதிப் போக்குவரத்தில் மிக மிக மந்தமான ஒரு நிலையை உருவாக்கியதோடு இடத்திற்கிடம் மாறு படும் பல்வேறு வட்டி வீதங்களும் உருவாகப் பெரும் வாய்ப்பு ஏற்பட்டது.

சென்ற சில ஆண்டுகளாக நாட்டில் வங்கி முறை வளர்ச்சியில் ஒரு வேகமான வளர்ச்சியைக் காண முடிகிறது.

### இந்தியப் பணச் சந்தையின் குறைகளை நீக்கச் சில வழிகள்

இதுவரை இந்தியப் பணச் சந்தையில் நிலவும் குறைகளைப் பார்த்தோம். இங்கு அக் குறைகளை நீக்கி இந்தியப் பணச் சந்தையை ஏனைய இலண்டன் நியுயார்க் போன்ற வளர்ச்சியுற்ற பணச் சந்தை களைப் போன்று கட்டமைந்த ஒன்ருக ஆக்குவதற்குத் தேவையான வழி முறைகளில் சிலவற்றைச் சிறிது ஆராய்வோம்.

முதலில் இங்கு நடைபெற்றுவரும் ஒழுங்கமைவற்ற (Unorganised Sector) பிரிவை, ஒழுங்கமைவுற்ற பிரிவோடு இணைப்பதற்கு

எல்லாவிதமான முயற்சிகளையும் எடுத்துக் கொள்ள வேண்டும், இதை 'ஒழுங்கமைவற்ற இந்தியப் பணச் சந்தை' (Unorganised Indian Money Market) என்ற நூலில் டாக்டர் ஜி. எல். கர்க்கால் (Dr. G. L. Karkal) அவர்கள் கீழ்க்கண்டவாறு வலியுறுத்திக் கூறுகிறார்.

'இந்தியப் பணச் சந்தையில் நிலவும் ஒழுங்கீனங்களை விரைவில் அகற்றி இரு பிரிவுகளையும் ஒருங்கிணைப்பது மிகவும் இன்றியமையாததாகும். அவ்வாறு ஒருங்கிணைத்தால்தான், இந்தியப் பணச் சந்தை ஒரு துடிப்புடையதாகவும் ரிசர்வு வங்கி மேற்கொள்ளும் பணக் கொள்கைகளுக்கேற்ப இயங்கக் கூடியதாகவும் அமையும். இம்முறையில் கூட்டுறவு வங்கி முறையையும் சீர் திருத்தி வலுப்படுத்த வேண்டும். நாட்டு வங்கியர் தங்கள் நடவடிக்கைகளை நவீன வங்கி முறையில் சீர்திருத்திக் கொண்டால் அது அவர்களுக்கும் நல்லது; நாட்டுப் பொருளாதார வளர்ச்சிக்கும் நல்லது என்பதை அவர்களுக்கு நன்கு எடுத்துரைக்க வேண்டும்.'

வட்டித் தொழிலரையும், நாட்டு வங்கியரையும், சீட்டுக் கம்பெனிகள் முதலான இடைநிலை நிதி நிறுவனங்களையும் ஆரம்பச் சலுகைகள் வழங்கியோ, கட்டாயச் சட்டங்களின் மூலமாகவோ வேறு எவ்வாறாகிலும் ரிஸர்வு வங்கிக் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வந்து விடவேண்டும். இது ரிஸர்வு வங்கிக்கு நெடுங்காலமாகத் தொல்லை கொடுத்து வந்த, நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்குக் குந்தகமாய் இருந்து வந்த ஒரு பெரிய பிரச்சினை தீர்க்கப்பட்ட நிம்மதியைத் தரும். அதன் மூலம் வெளிப்படையான கணக்கில் வராமல் கறுப்புப் பணமாகப் புழங்கி இந்திய நாணயக் கொள்கையில் ஒரு தெளிவான நிலை ஏற்பட விடாமல் அடிக்கடி கலக்கிக்கொண்டிருக்கும் கறுப்புப் பணச் சந்தையின் நடவடிக்கைகள் ஓரளவு குறைந்து விடும்.

அடுத்து நவீன வங்கி முறை நாட்டின் எல்லாப் பகுதிகளிலும் நன்கு பரவி, வங்கிகளின் கிளைகள் அங்கங்கே திறக்கப்பட வேண்டும். 1969 லிருந்து கடந்த 6ஆண்டுகளாக இத் துறையில் நல்ல விரைவான முன்னேற்றம் ஏற்பட்டு வருகிறது. (இதைப்பற்றி 'ஸ்டேட் வங்கியின் அண்மைக்கால வளர்ச்சி' என்ற தலைப்பில் காண்போம். இதைப் பற்றிய புள்ளி விவரங்களைப் பிற்சேர்க்கையில் காண்க.)

வணிக உண்டியல் கருவூல உண்டியல் போன்ற குறுங்கால மூலதனச் சீட்டுகள் சந்தையில் மிக அதிகமாகப் புழங்க வேண்டும். இவற்றின் புழக்கத்திற்கு உதவுவன இலண்டனில் இருப்பது போன்ற ஏற்புகங்கள், தள்ளுபடியகங்கள் முதலிய நிறுவனங்களாகும். இவ்

வகை நிறுவனங்கள் இந்தியாவிலும் தோன்ற வேண்டும். ஆனால் தொலைபேசி மாற்றல் (Telegraphic Transfer), ரொக்கக் கடன் வசதி (Cash Credit), அதிகப்பற்று வசதி (over draft) ஆகிய துரித முறைகள் பெருகிவிட்ட இந் நாள்களில், மேற்குறிப்பிட்ட பழைய முறையில் செயல்படும் நிறுவனங்கள் தேவைதானா என்ற வினா எழலாம். ஆனால், இந்தியாவில் மிக மிக அண்மைக்காலமாகத்தான், நாட்டுப்புறங்களிலும், சிறு நகர்ப்புறங்களிலும், நவீன வங்கி முறைகள், வணிக முறைகள், தொழில் முறைகள் எல்லாம் ஊடுருவி வருகின்றன. இந்த நிலை ஏறக்குறைய ஐரோப்பிய நாடுகளில் தொழிற் புரட்சிக்காலத்திலும், பின் சென்ற நூற்றாண்டிலும் இருந்த சூழ்நிலையை ஒருவாறு ஒத்திருக்கிறது. எனவேதான், மேற் குறிப்பிட்ட ஏற்பகங்கள், தள்ளுபடியகங்கள் முதலானவை தோன்றி நல்ல முறையில் செயல்பட வேண்டுமென்று கூறுகிறோம்.

**ஸ்டேட் வங்கியின் அண்மைக்கால வளர்ச்சி**

கடந்த 5 ஆண்டுகளாக, குறிப்பாக, வங்கிகள் நாட்டுடைமையாக்கப்பட்டபின், நாட்டில் வங்கி வளர்ச்சி மிக வேகமாக ஏற்பட்டு வருகிறது. இதைக் கீழ்க்காணும் புள்ளி விவரங்கள் நன்கு விளக்கும். 'ஸ்டேட் பாங்க் ஆஃப் இந்தியா'வைப் பொறுத்தவரையில் கீழ்க்காணும் புள்ளி விவரங்கள் அதன் விரைவான வளர்ச்சியை எடுத்துக் காட்டுகின்றன.

1975 பிப்ரவரி முடிய ஸ்டேட் வங்கியின் கிளைகள் மொத்தம் 4650. இவற்றில் முக்கால் பாகம் சிற்றூர்களிலும், சிறு நகரங்களிலும் தொடங்கப்பெற்றுள்ளன. 89,400 சிறு ரகத்தொழிலகங்களுக்கு (Small scale units) இவ் வங்கியினால் ரூ. 318 கோடி முன்னளிப்பாக வழங்கப்பட்டுள்ளது. இத் தொழிலகங்களில் ஐந்தில் நான்கு என்ற வீதத்தில் ஒரு லட்ச ரூபாய்க்கும் குறைவாகவே மூலதனம் பெற்றவை.

47,20,000 விவசாயிகளுக்கு 105 கோடி ரூபாய் கடனாக வழங்கப்பட்டுள்ளது. இவர்களிலும் 5-ல் 4 பேர் சிறு விவசாயிகளாவர்.

ஸ்டேட் வங்கியும் அதன் துணைவங்கிகளும் (Subsidiaries) தாம் வழங்கியதில் 35 சதவீதம் கடன்களை முந்துமைத் துறைகளுக்கு (Priority Sectors) வழங்கியுள்ளன. பொதுத்துறை வங்கிகள் (Public Sector Banks) இத் துறைகளுக்கு வழங்கியுள்ள மொத்தக் கடனில், ஸ்டேட் வங்கியும் அதன் துணைகளும் வழங்கியது மட்டும் மூன்றில் ஒரு பாகமாகும்.

ஸ்டேட் வங்கியின் மொத்த வைப்புகள் ரூ. 3206 கோடிகள். மொத்த முன்னறிவிப்புகள் ரூ. 2052 கோடிகள்.

வங்கிகளின் வளர்ச்சி:

1974 முடிவில் வங்கிகளின் மொத்த கிளைகள் 18,000

1974-ல் புதியதாகத் தொடங்கப்பட்ட கிளைகள் 700

1973-ல் புதிதாகத் தொடங்கப்பட்ட கிளைகள் 1,800

1974-ல் மொத்த வங்கிக் கிளைகள் அளித்துள்ள முன்னறிவிப்புத் தொகை ரூ. 7,900 கோடி. 1973-ல் அளித்துள்ள முன்னறிவிப்புத் தொகை ரூ. 7,100 கோடி.

1972-ல் வைப்புகள் ரூ. 8,240 கோடி. 1973-ல் வைப்புகள் ரூ. 10,090 கோடி. 1974-ல் வைப்புகள் ரூ. 11,440 கோடி.

# 13. இலண்டன் பணச் சந்தை
## (London Money Market)

உலகிலேயே இலண்டன் பணச் சந்தை மிக்க வளர்ச்சியுற்ற தாகக் கருதப்படுகிறது. 17—18ஆம் நூற்றூண்டுகளில் ஆம்ஸ்டர் டாம் (Amsterdam) மிக்க புகழ் பெற்ற நிதி மையமாக விளங்கி வந்தது. ஆனல் 19ஆம் நூற்றூண்டுத் தொடக்கத்தில் ஆம்ஸ்டர் டாமின் முக்கியத்துவம் குறைந்து இலண்டனின் முக்கியத்துவம் வளர்ந்தது. ஹாலந்து 18ஆம் நூற்றூண்டு இறுதியில் தன் ஆதிக் கத்தின் கீழ் இருந்த பல காலனி நாடுகளை இழக்க நேரிட்டது. ஆனல் அதே நேரத்தில் பல காலனி நாடுகள் இங்கிலாந்தின் ஆதிக்கத்தின் கீழ் வந்தன. மேலும், இங்கிலாந்தில் பல துறை களில், முக்கியமாகத் தொழில், வேளாண்மை, வணிகம், போக்கு வரத்து முதலிய துறைகளில் பல முன்னேற்றங்கள் ஏற்பட்டன. இதன் மூலம் மூலதனம் பெருமளவில் குவிந்தது. இச் சூழ் நிலையில்தான் இலண்டன் ஒரு பணச் சந்தையைப் பெற வாய்ப்பு ஏற்பட்டு, விரைவிலேயே பன்னூட்டு நிதி மையமாக வளர்ந்தது. பிரெஞ்சு நாட்டில் நெப்போலியன் ஆட்சியின்போது இங்கிலாந்து பல போர்களில் ஈடுபட வேண்டியிருந்தது. இங்கிலாந்து அரசு பணச் சந்தையுடன் தொடர்பு கொண்ட பல நிறுவனங்களின் பணிகளை மிக அதிகமான அளவில் பயன்படுத்த வேண்டிய நிலையில் இருந்தது. இலண்டன் பணச் சந்தை வளருவதற்கு இது ஒரு வாய்ப்பாக அமைந்தது. வெளிநாடுகளில் முதலீடுகள் செய்வதன் மூலமாக இங்கிலாந்தின் பொருளாதாரம் நல்ல வளர்ச்சியடையும் என்ற நோக்கத்தில் இலண்டன் பணச் சந்தை அத் துறையில் ஆர்வம் காட்டியது.

முதல் உலகப் போர் வரை இலண்டன் பணச் சந்தை மிக முக்கிய இடத்தை வகித்து வந்தது. ஆனல் முதலாவது இரண் டாவது உலகப் போர்களின் இடைக்காலத்தில் (Inter-war period) நியுயார்க், பாரீஸ் பணச் சந்தைகள் இலண்டன் பணச் சந்தை

யுடன் போட்டியிட்டு ஓரளவு வெற்றியும் கண்டன. இரண்டாவது உலகப் போருக்குப்பின் இங்கிலாந்தின் அரசியல் மற்றும் பொருளாதாரச் செல்வாக்குக் குறைந்து பன்னாட்டு வாணிபத்தில் அமெரிக்க டாலரின் ஆதிக்கம் வளர்ந்ததால் நியூயார்க் பணச் சந்தை உலகப் பணச் சந்தைகளின் தலையாய இருப்பிடமாக விளங்கிற்று.

## உலகத்தின் நிதி மையமாக இலண்டன்

புகழ் வாய்ந்த உலக நிதி மையமாக இலண்டன் வளருவதற்குப் பல காரணங்கள் உண்டு. 19, 20ஆம் நூற்றாண்டுகளில் இலண்டன் ஒரு பெரிய வணிக மையமாக விளங்கியது. இங்கிலாந்தில் நிலையான அரசியல் அமைப்புச் செயல்பட்டது. மேலும், அயல் நாடுகளில் தொடர்ந்து முதலீடு செய்யக்கூடிய மூலதன வளங்களை (Capital Resources) இலண்டன் பெற்றிருந்தது. மற்ற நாடுகளுடன் வாணிபத் தொடர்பின் மூலம் பெருத்த வருவாய் கிட்டியது. இதன் மூலம் அந்நிய நாட்டு அரசுகளின் ஆவணங்கள் அதனிடம் இருந்தன. தனக்கு ஏற்படும் கடன்களைத் தங்கம் வழங்குவதன் மூலம் தீர்ப்பதை இலண்டன் ஒரு வழக்கமாகக் கொண்டிருந்தது. ஆகவே, இலண்டன் மீதான உண்டியலைத் தங்கத்திற்கு மிக எளிதாக மாற்ற முடியும் என்ற கருத்து நிலவியது. தவிர, குறுகிய காலக் கடன் வழங்கும் சந்தைக்கு மிக இன்றியமையாத தள்ளுபடிச் சந்தைகள், ஏற்பகங்கள் நன்றாக வளர்ச்சியுற்று இருந்தன. குறுங்கால நிதி வழங்கும் நடவடிக்கைகளில் இலண்டன் மிகச் சிறப்பாகச் செயல்பட்டு வந்தது. நியூயார்க் பணச் சந்தையோ, பாரீஸ் பணச் சந்தையோ இந்த அளவிற்கு வளரவில்லை. மேலும், முழுமையான அமைப்புப் பெற்ற வங்கியியல் முறை இங்கிலாந்தில் வளர்ச்சிபெற்று எல்லோருடைய நம்பிக்கைக்கும் பாத்திரமாக விளங்கியது. அந்நிய நாட்டு மூலதனம் இலண்டனுக்கு விரைந்த வண்ணம் இருந்தது. இலண்டன் பணச் சந்தையில் அரசியல் அல்லது நிர்வாகக் குறுக்கீடுகள் இல்லை. மிக முக்கிய நிதி மையமாக இலண்டன் நீண்ட காலமாகத் திகழ்ந்தது.

## இலண்டன் பணச் சந்தையின் அமைப்பு

இலண்டன் பணச் சந்தை பெரும்பாலும் அழைப்புப் பணச் சந்தை, ஏற்புச் சந்தை, தள்ளுபடிச் சந்தை ஆகிய அங்கங்களைக் கொண்டதாக இருக்கின்றது. இவற்றில் தள்ளுபடிச் சந்தை இலண்டன் பணச் சந்தையின் மிக முக்கிய அங்கம். ஏனெனில், அழைப்புப் பணச் சந்தையும், ஏற்புச் சந்தையும் தள்ளுபடிச்

சந்தையின் இரு பிரிவுகளே தவிர அவைகள் தனித்து நின்று செய்ல்பட முடியாது.

இலண்டன் பணச் சந்தையைக் குறுகிய கால மூலதனச் சந்தை என்றும், நெடுங்கால மூலதனச் சந்தை என்றும் இரு பிரிவு களாகக் கொள்ளலாம் என்று சில ஆசிரியர்கள் கருத்துத் தெரி விக்கின்றனர். குறுகிய காலச் சந்தையைப் பணச் சந்தையென்றும், நெடுங்காலச் சந்தையை மூலதனச் சந்தையென்றும் கொள்வதோடு மூலதனச் சந்தையைப் புதிய மூலதனத்துக்கான சந்தை யென்றும், பழைய மூலதனத்துக்கான சந்தை யென்றும் பிரித்துக் கூறலாம். கீழ்க்காணும் அட்டவணை இந் நிலையை விளக்கும்.




### இலண்டன் பணச் சந்தையின் நிறுவனங்கள்

உண்டியல்களையும், மற்றச் சீட்டுகளையும் வாங்கும், விற்கும் நடவடிக்கைகளில் கீழ்க்கண்ட நிறுவனங்கள் தேர்ச்சி பெற்றிருக் கின்றன.

1. கூட்டுப் பங்கு வங்கிகள் (Joint Stock Banks)
2. ஏற்பகங்கள் (Acceptance Houses)
3. தரகர்கள் (Brokers)
4. தள்ளுபடியகங்கள் (Discount Houses)
5. பாங்க் ஆஃப் இங்கிலாந்து (Bank of England)

### 1. கூட்டுப் பங்கு வங்கிகள் (Joint Stock Banks)

இலண்டன் பணச் சந்தையில் மூன்று வகை வணிக வங்கிகள் செயல்படுகின்றன. அவைகள் இலண்டன் தீர்வகத்தின் (London Clearing House) உறுப்பினர்களான தீர்வக வங்கிகள், ஸ்காட்லாந்து நாட்டு வங்கிகள் (Scottish Banks) மற்றும் அயல்நாட்டு வங்கிகள் ஆகும். இவ் வங்கிகள் மக்களிடமிருந்து வைப்புத் தொகைகளைப் (deposits) பெற்றுக் கடன்கள் வழங்குவதையும் முதலீடுகள் செய்வதையும் முக்கியப் பணிகளாகக் கொண்டுள்ளன. அயல்நாட்டுக் கூட்டுப் பங்கு வங்கிகளின் கிளைகளே அயல்நாட்டு வங்கிகளாகும். பன்னாட்டு வாணிபத்திற்கு நிதி வழங்குவது இவ் வங்கிகளின் முக்கியத் தொழிலாகும்.

வணிக வங்கிகள் இலண்டன் பணச் சந்தையில் மூன்று வழிகளில் செயல்படுகின்றன. தரகர்களும், தள்ளுபடியகங்களும் செய்வதுபோல் உண்டியல்களை நேரிடையாகத் தள்ளுபடி செய்தும் அல்லது தள்ளுபடியகங்களிலிருந்து உண்டியல்களை வாங்கியும் இவ் வங்கிகள் நிதி வசதியளிக்கின்றன. தங்களுக்குத் தேவைப்படும் அரசு ஆவணங்களைத் (Government Securities) தள்ளுபடியகங்களிடமிருந்து இவ் வழியில் பெற முடியும். மற்றும் தங்களுடைய வாடிக்கைக்காரர்களின் சார்பில் ஏற்புத் தொழிலையும் (Acceptance Business) செய்கின்றன. மேலும், தரகர்களுக்கும், தள்ளுபடியகங்களுக்கும் ஓர் இராப் போதிலிருந்து பத்து நாள் தவணையுள்ள குறுங்காலக் கடன்களை வழங்குகின்றன.

### 2. ஏற்பகங்கள் (Acceptance Houses)

வணிகர்களால் தொடங்கப்பட்டு வணிக அகங்களாக விளங்கும் பழைய நிறுவனங்கள் இவை. அயல்நாட்டு வாணிபத்தைப் பெருக்குவதிலும், நிதி வழங்குவதிலும் தேர்ச்சி பெற்றுத் தொண்டாற்றி வரும் நிறுவனங்களாக இவைகள் திகழ்கின்றன. அந்நிய நாடுகளுடன் ஏற்றுமதி இறக்குமதி வியாபாரத்தில் ஈடுபடும் சிறு வணிகர்களுக்கு அவர்கள்பால் வரையப்படும் உண்டியல்களை ஏற்று உதவி புரிகின்றன. ஏற்றுமதியாளர்களும் இறக்குமதியாளர்களும்

இவ் வேற்பகங்களின் மீது நம்பிக்கை கொண்டுள்ளனர். இறக்குமதியாளர்கள் மீது, ஏற்றுமதியாளர்கள் எழுதும் உண்டியல்களைச் சிறு கழிவுத் தொகையை (Commission) ஊதியமாகப் பெற்று இவ் வகங்கள் கையொப்பமிடுகின்றன. ஏற்பகங்களால் கையொப்பமிடப்பட்ட உண்டியல்களை மிக எளிதான முறையில் குறைந்த வீதத்திற்குத் தள்ளுபடி செய்யலாம்.

இவை தவிர இவ் வகங்கள் குறுங்கால நெடுங்கால அரசு ஆவணங்களையும், தொழில் நிறுவனங்களின் கடன் பத்திரங்களையும் வெளியிட்டும், வாங்கியும் விற்றும் செயல்படுகின்றன. மேலும், வெளி நாடுகளில் தொழில் துறையில் ஈடுபட்டிருக்கும் ஆங்கிலக் கம்பெனிகளின் சார்பில் மூலதனம் வெளியிடுவதிலும் பங்கு பெறுகின்றன.

ஏற்பகங்கள் ஏற்றுமதியாளருக்கு இறக்குமதியாளரிடமிருந்து கிடைக்க வேண்டிய தொகையை, இறக்குமதியாளருக்குப் பொருள்கள் போய்ச் சேருவதற்கு முன்பே கிடைக்கும்படி செய்கின்றன. பன்னாட்டு வாணிபத்தின் மூலம் எழுகின்ற உண்டியல்களை மிக எளிதாகத் தவணை நாள்களுக்கு முன்பு முடிவு தேதி வரை காத்திராமல், ஏற்றுமதியாளர் பணத்தைப் பெறுவதென்பது கடினமானதொன்றாகும். முன் கூறியது போல, ஏற்பகம் ஒன்றின் கையொப்பம் உண்டியல்மீது காணப்பட்டால் அவ் வுண்டியலை மிக எளிதாகத் தள்ளுபடி செய்ய முடியும். இவ் வுத்தரவாதமென்பது ஏற்றுமதியாளர் அல்லது இறக்குமதியாளர் ஒருவரின் நாணயத்தைப் பற்றி ஏற்பகம் கொடுக்கின்ற நற்சான்றிதழாகும். இவர்களின் நாணயத்தைப்பற்றித் தள்ளுபடிச் சந்தை எவ் வழியிலும் அறிய வாய்ப்பில்லை. இந் நிலையில் பேரும் புகழும் பெற்று விளங்கும் ஏற்பக நிறுவனம் ஒன்று தன் ஒப்புதலின் (acceptance) மூலம் உத்தரவாதம் அளிக்கும் காரணத்தால், எவ்விதத் தயக்கமுமின்றித் தடையுமின்றித் தள்ளுபடியகம் உண்டியல் பெற்றிருப்போருக்குப் (bearer) பணம் வழங்கி உண்டியலைப் பெற்றுக் கொள்கிறது. ஏற்பகங்கள் உத்தரவாதமளிக்கும் பணிக்காகச் சிறு தொகையைக் கழிவாகப் (Commission) பெறுகின்றன. ஏற்பகங்களின் முக்கியத் தொழில் உலகிலுள்ள பன்னாட்டு வாணிபத்தில் பங்கு பெறும் வர்த்தகர்களுடைய நாணயத்தைப் பற்றிய செய்திகளை அறிந்து மதிப்பிடுவதேயாகும். இந்த நோக்குடன், இவை வெளிநாடுகளில் பல முக்கியமான வியாபார நிலையங்களில் தங்கள் முகவர்களை (Agents) நியமிக்கின்றன.

பன்னாட்டு வணிகத்தில் இறக்குமதியாளருக்குப் பல நெருக்கடியான நேரங்களும் ஏற்படலாம். ஏற்றுமதியாளருக்குச் செலுத்த

வேண்டிய தொகையை—தாம் தருவிக்கும் பொருள்களின் கிரயத்தை—இறக்குமதியாளர் உடனடியாகப் புரட்டுவதென்பது சுலபமான காரியமன்று. அமெரிக்க இறக்குமதியாளர் ஒருவர், ஏற்பகம் ஒன்றினை அணுகித் தேவையான நிதி வசதிகள் செய்து தருமாறு வேண்டினால், இந்த ஏற்பகம் அவருடைய நாணயத்தைப் பற்றி உறுதி செய்து கொண்டபின் அந்த இறக்குமதியாளருக்கு ஓர் 'ஏற்புக்கடனை' (acceptance credit) வழங்கும். இறக்குமதியாளர் இறக்குமதி செய்யும் பொருள்களின் மொத்த மதிப்பைப் பொறுத்தும், அவருடைய நிதிவளமையைப் பொறுத்தும் ஏற்புக் கடனின் அளவு தீர்மானிக்கப்படும். அமெரிக்க இறக்குமதியாளருக் குக் கொடுக்கப்படும் ஏற்புக்கடனின் மதிப்பு 20,000 பவுன் என்று வைத்துக்கொள்வோம். அமெரிக்க இறக்குமதியாளர், இங்கிலாந்து வர்த்தகர் ஒருவரிடமிருந்து 15,000 பவுன் பெறுமானமுள்ள பொருள் களை விலைக்கு வாங்குகிறார் என்று கொள்வோம். அதன் பொருட்டு அமெரிக்க இறக்குமதியாளர் இங்கிலாந்து வர்த்தகரால் எழுதப் பெற்ற அத் தொகை கொண்ட 91 நாள் தவணை உடைய உண்டியல் ஒன்றினை ஏற்க முன்வருகிறார். தமக்கு ஏற்பகத்தில் ஏற்புக் கடன் வசதி செய்யப்பட்டிருக்கிறது என்று அமெரிக்க இறக்குமதியாளர் இங்கிலாந்து வர்த்தகருக்கு அறிவிக்கிறார். இச் சூழ்நிலையில் இங்கிலாந்து வர்த்தகர் தாம் அனுப்பிய சரக்குகளின் மொத்த மதிப்பிற்குரிய தொகைக்கு ஓர் உண்டியலை ஏற்பகத்தின் மீது வரைந்து அதன் ஒப்புதலையும் பெறுகின்றார். இவ் வுண்டியல் முதல் தரமான, நம்பிக்கைக்குப் பாத்திரமான புகழ் பெற்ற ஓர் ஏற்பகத் தின் பெயரைப் பெற்றிருப்பதால் இதை மிகக் குறைவான விகிதத் தில் தள்ளுபடி செய்ய முடியும். தவணை முடியும் தறுவாயில் அவ் வுண்டியலை ஏற்பகத்திடம் சேர்ப்பித்தால் ஏற்பகம் அதற்குரிய தொகையை உடனடியாகச் செலுத்திவிடுகிறது. அமெரிக்க வர்த்தகரிடமிருந்து தனக்குச் சேரவேண்டிய தொகையைப் பெறு வதற்கு ஏற்பகமே ஏற்பாடுகளைச் செய்து கொள்ளுகிறது. ஏற்றுக் கொள்ளும் பொறுப்புகளை எவ்வித இன்னலுமின்றி நிறைவேற்றப் போதுமான அளவு வளம் பெற்றவையாக ஏற்பகங்கள் விளங்க வேண்டும்.

சில நேரத்தில் கடனாளிக்கும் (அமெரிக்க இறக்குமதியாளர்) ஏற்பகத்திற்குமிடையே நேரிடையான தொடர்பு இல்லாமல் இருக்க லாம். அந் நிலையில், கடனாளி தன் வங்கியின் மூலம் ஏற்பகத்துடன் தொடர்பு கொண்டு ஏற்பகத்தின் பணியின் பயனைப் பெற முடியும். இறக்குமதியாளர் சார்பில் வங்கியொன்று ஏற்பகத்துடன் தொடர்பு கொண்டு தன் வாடிக்கையாளர் (கடனாளி) மீது ஏற்றுமதியாளரால் எழுதப்பெறும் உண்டியலுக்கு ஏற்பகம் உத்தரவாதம் கொடுத்தால்

ஏற்பகத்திற்கு அவ் வுண்டியலின் மூலம் ஏற்படும் கடனுக்குத் தானே பொறுப்பேற்றுக் கொள்வதாகத் தெரிவிக்கின்றது. தன் நாட்டிலுள்ள தனது வாடிக்கையாளரான இறக்குமதியாளரிடமிருந்து பணம் பெறுவதற்கான ஏற்பாடுகளை வங்கியே செய்து கொள்கிறது. இவ் வகையான கடன் 'ஈட்டுக்கடன்' (Re-imbursement Credit) எனப்படும்.

ஏற்பகங்களும், வங்கிகளும் இது போன்ற ஈட்டுக் கடன் (Re-imbursement Credit) வசதிகளை மிகக் குறைந்த விகிதத்தில் ஏற்பாடு செய்கின்றன, இவ் வகையான கடன் வசதிகளை ஏற்பாடு செய்யும் போது ஏற்பகம் இறக்குமதியாளரின் நாணயத்தைப்பற்றிக் கவலையுற வேண்டியதில்லை. இறக்குமதியாளர் பொறுப்பை ஏற்க முன் வரும் வங்கியின் உத்தரவாதம் ஒன்றே ஏற்பகத்திற்குப் போதும். ஏற்றுமதியாளரின் நாணயத்தைப் பற்றிய தகவல்களை அறிய ஏற்படும் செலவுகளும் ஏற்பகத்திற்குக் குறையும். வங்கிக்கும் ஒரு சிறு கழிவுத்( Commission) தொகை வருமானமாகக் கிடைக்கிறது. தன் வாடிக்கையாளர் ஒவ்வொருவரைப் பற்றியும்—அவர் தொழில், நாணயம், நேர்மை—வங்கி விவரங்களையெல்லாம் திரட்டி வைத்திருக்கும். பன்னாட்டு வாணிபத்தில் இம் மாதிரியான விவரங்கள் ஏற்றுமதியாளர்களுக்கு அல்லது ஏற்பகங்களுக்குத் தேவைப்படுகின்றன. வங்கியின் நற்சான்றிதழே இறக்குமதியாளர், ஏற்றுமதியாளரிடையே ஏற்படக் கூடும் நடவடிக்கைகளுக்கு ஓர் அடிப்படையாக அமைந்து வணிக நடவடிக்கைக்கு வழி வகுக்கிறது.

சிறப்பான முறையில் இலண்டனில் இயங்கிவரும் ஏற்பகங்களில் சில தங்களது இந்த அலுவல்களைத் தவிர வேறு நிதி சம்பந்தப்பட்ட பணிகளையும் புரிகின்றன. நெடுங்காலக் கடனுகப் பெருந் தொகையைத் தேடிக் கொண்டிருக்கும் கடனாளிகளுக்கு ஏற்பகங்கள் துணை புரிந்து அக் கடன்களுக்காக வகைசெய்கின்றன. இந்த ஏற்பகங்கள் 'வாணிப வங்கியாளர்கள், (Merchant Bankers) என்று அழைக்கப்படுகின்றனர். இவைகளில், பாரிங்ஸ் (Barings), ராத்சைல்ட்ஸ் (Rothchilds) க்ளீன்வோர்ட்ஸ் (Kleinworts), எர்லாஞ்சர்ஸ் (Erlangers), லஸார்ட்ஸ் (Lazards) போன்ற ஏற்பகங்கள் உலகப் புகழ் வாய்ந்த நிறுவனங்களாகத் திகழ்கின்றன. பெரிய வணிக வங்கிகளும் ஏற்புக் கடன் வசதிகளைச் செய்து கொடுக்கின்றன. வணிக வங்கித் தொழிலுடன் ஏற்புக்கடன் வசதி செய்து கொடுப்பதையும் இணைத்துக் கொள்வது வணிக வங்கிகளுக்கு மிக எளிதாகும்.

### 3. தரகர்கள் (Brokers)

இலண்டன் பணச் சந்தையில், தரகர்கள் தனி வணிகர்களாகவோ (one-man business) கூட்டு வணிக அமைப்பின்

(partnership) வாயிலாகவோ பணிபுரிகிறுர்கள். உண்டியல்களை விற்று அதன் மூலம் தொகை திரட்ட விரும்பும் வணிகர்களுக்கும், உண்டியல்களில் தங்கள் குறுகிய கால நிதிகளை முதலீடு செய்ய விரும்பும் நிறுவனங்களுக்குமிடையே இத் தரகர்கள் இடைநிலையர்களாகப் பணி புரிகிறுர்கள். வணிகர்களின் உண்டியல்களைத் தள்ளுபடிக்கு வாங்கிய பிறகு இத் தரகர்கள் அவ் வுண்டியல்களை வங்கிகளிடமும், மற்ற நிறுவனங்களிடமும் மறுதள்ளுபடி செய்கிறுர்கள். சாதாரணமாக, இத் தரகர்கள் தாங்கள் தள்ளுபடி செய்து பெற்ற உண்டியல்களை அவ் வுண்டியல்களின் காலக் கெடு முடியும் வரை தங்கள் வசமே வைத்திருப்பதற்குத் தேவையான நிதி வசதி பெற்றவர்களாக இல்லை. ஆகவேதான், உண்டியல்களை உடனுக்குடன் வங்கிகளிடம் மறு தள்ளுபடி செய்து நிதி வசதியைப் பெருக்கிக் கொள்கிறுர்கள்.

4. தள்ளுபடியகங்கள் (Discount Houses)

இலண்டன் பணச் சந்தையில் புகழ் பெற்ற பன்னிரண்டு தள்ளுபடியகங்கள் பணிபுரிகின்றன. அவற்றில் மூன்று பெரியவை; மற்ற ஒன்பது நிறுவனங்களும் சிறியவையாகும். பெரிய நிறுவனங்கள் மூன்றும் நெடுங்காலமாக வரையறுக்கப்பட்ட பொதுக் கம்பெனிகளாகச் (Public Limited Companies) செயல்பட்டு வருகின்றன. சிறிய நிறுவனங்கள் சில ஆண்டுகளுக்கு முன்வரை கூட்டு வணிக அமைப்புகளாக (partnership) இயங்கி வந்தன. இவைகளும் இப்போது கடன் வரையறுக்கப்பட்ட கம்பெனிகளாக மாற்றப்பட்டிருக்கின்றன. இக் கம்பெனிகள் ஒவ்வொன்றும் ஒரு மிலியன் பவுன்களுக்குக் குறையாத அளவு மூலதனத்தையுடையவை. மூன்று பெருங் கம்பெனிகளான தி யூனியன் (The Union), தி நேஷனல்(The National), அலெக்ஸாண்டர்ஸ் (Alexanders) ஆகியவை மிக்க புகழடைந்தவை. தொடக்கத்தில் அவைகள் உண்டியல் தரகர்களின் தொழிலில் ஈடுபடுவதற்காக நிர்மாணிக்கப்பட்டன. உண்டியல் தரகர்களைப் போலல்லாமல் இத் தள்ளுபடியகங்கள் பெரும் பணபலம் படைத்ததன் காரணத்தால் உண்டியல்களை மறு தள்ளுபடி செய்யாமல் கெடுநாள்கள் முடியும்வரை தங்கள்வசம் வைத்துக் கொண்டிருக்கும். தங்கள் பணிகளைத் திறம்படச் செய்வதற்குத் தேவைப்படும் நிதியைப் பங்குதாரர்களிடமிருந்து பங்கு மூலதனமாகவும், வணிக வங்கிகளிடமிருந்து கடனுகவும், முன்னளிப்பாகவும் பெற்றும், மற்றும் பொதுமக்களின் வைப்புத் தொகைகளின் மூலமாகவும் திரட்டுகின்றன.

5. பாங்க ஆஃப் இங்கிலாந்து (Bank of England)

இங்கிலாந்தின் மைய வங்கியாகிய பாங்க் ஆஃப் இங்கிலாந்து இலண்டன் பணச் சந்தையின் நடு நாயகமாக விளங்குகிறது.

இங்கிலாந்து நாட்டின் பணத் திட்ட அமைப்பின் (Monetary System) ஒழுங்கையும் (Integrity), நிலைத் தன்மையையும் (Stability) பேணிக் காப்பாற்றும் பொறுப்பு அந் நாட்டின் மைய வங்கியான பாங்க் ஆஃப் இங்கிலாந்திற்கு உண்டு. பணச் சந்தையின் நிறுவனங்கள் தோற்றுவிக்கும் நாணயப் பணத்தை (Credit money) கட்டுப்படுத்த வேண்டிய பொறுப்பும் இம் மைய வங்கிக்கு உண்டு. தான் பெற்றிருக்கும் சில அதிகாரங்களைப் பயன்படுத்தி இக் கட்டுப்பாட்டினைச் செயல்படுத்துகிறது. வங்கி வீதம் (Bank Rate) மாற்றம் மூலமாகவும் வெளிச் சந்தை (Open Market) நடவடிக்கைகள் மூலமாகவும் பண அளிப்பில் ஏதேனும் ஒரு மாற்றத்தை பாங்க் ஆஃப் இங்கிலாந்து கொண்டு வருமேயானால், அதன் உடனடி விளைவு தள்ளுபடிச் சந்தையில் நேரடியாகவும், கூட்டுப் பங்கு வங்கிகளின் நடவடிக்கைகளிலும் பிரதிபலிக்கின்றது.

பாங்க் ஆஃப் இங்கிலாந்திற்கும் தள்ளுபடிச் சந்தைக்குமிடையே நிலவும் உறவு நேரிடையானது; நெருக்கமானதும்கூட. மைய வங்கியிடமிருந்து தள்ளுபடியகங்கள் எச் சமயத்திலும் நிதிவசதி பெறலாம். வணிக வங்கிகளிடமிருந்து கடன் வாங்கும் நிதியைத் தள்ளுபடியகங்கள் பெரிதும் பயன்படுத்துகின்றன. ஆனால், ஒரு குறிப்பிட்ட காலத்தில் வங்கிமுறை முழுமையும் தன் ரொக்க நிலையைப் பலப்படுத்த வேண்டும் என்ற நோக்கில் தள்ளுபடிச் சந்தைக்கு வழங்கியிருக்கும் கடன் தொகையைத் திருப்பிக் கேட்கலாம். இந் நிலையில் தள்ளுபடியகங்கள் வணிக வங்கிகளிடமிருந்து தாங்கள் பெற்றிருக்கும் கடனைத் திருப்பித் தருவதற்கு பாங்க் ஆஃப் இங்கிலாந்தை அணுகலாம். பாங்க் ஆஃப் இங்கிலாந்து தரமுள்ள உண்டியல்களைப் பிணையாக ஏற்றுத் தள்ளுபடியகங்களுக்குக் கடன் வழங்கலாம்; அல்லது வங்கி வீதத்தில் (Bank Rate) அவ் வுண்டியல்களை மறுதள்ளுபடி செய்யலாம். இம் முறையில் இங்கிலாந்தின் மைய வங்கியிடமிருந்து தள்ளுபடிச் சந்தை நிதி வசதியைப் பெற முடியும். இவ்வித நெருக்கமான தொடர்பு கொண்டுள்ள தள்ளுபடிச் சந்தை மைய வங்கிக்குப் பணச் சந்தையின் நிலையையும் (condition), போக்கையும் (trend) பற்றி அவ்வப்போது கூற முடியும்.

பாங்க் ஆஃப் இங்கிலாந்திற்கும், கூட்டுப் பங்கு வங்கிகளுக்கும், குறிப்பாக இலண்டன் தீர்வக வங்கிகளுக்குமிடையே ஒரு நெருக்கமான உறவு உண்டு. மைய வங்கி, வணிக வங்கிகள் எப்போது ரொக்கம் வேண்டுமென்கின்றனவோ அப்போதெல்லாம் பணத் தாள்களை (Currency Notes) வெளியிடுகிறது. மேலும், கூட்டுப் பங்கு வங்கிகளும் ரொக்க நிதியிருப்பில் ஒரு பகுதியை மைய வங்கியிடம் வைத்திருக்கின்றன. மைய வங்கியிடம் வைக்கப்பட்டிருக்கும்

ரொக்க நிதியிருப்புகளை வங்கிகள் ரொக்கமென்றே கருதுகின்றன. மேலும், மறுதள்ளுபடி செய்து, அதன் மூலம் வங்கிகளுக்கு நெருக்கடியான காலங்களில் பண வசதியளித்து உற்றுழி உதவுவோனாக (Lender of last resort) விளங்குகிறது.

### இலண்டன் தள்ளுபடிச் சந்தை இயங்கும் முறை

இலண்டன் தள்ளுபடிச் சந்தையில் கடன் பெறுவதற்கும் வழங்குவதற்கும் முக்கியக் கருவியாகப் பயன்படுவது உண்டியலே யாகும். உண்டியல்களை இரு வகைகளாகப் பிரிக்கலாம். அவைகளாவன:

1. வணிக உண்டியல் அல்லது மாற்று உண்டியல் (Commercial Bill or Bill of Exchange)
2. நிதி உண்டியல் அல்லது பணவசதி உண்டியல் (Finance Bill)

### வணிக உண்டியல்

கடனுக்குப் பொருள் விற்பதன் மூலமாகப் பொருள் வாங்குபவர் கடனாளியாகிறார். கடன் ஈந்தவருக்குக் கொடுக்கவேண்டிய தொகைக்குக் கடனாளி தம்மேல் வரையப்பட்ட ஓர் உண்டியலை ஏற்றுக்கொள்கிறார். இவ்வாறு ஒரு வர்த்தக நடவடிக்கை ஏற்பட்டு அதன் மூலம் தோன்றும் உண்டியலை வணிக உண்டியல் என்று அழைக்கிறோம். உதாரணமாக, இந்திய வர்த்தகர் ஒருவர் இலண்டன் வர்த்தகர் ஒருவருக்குப் பொருளை ஏற்றுமதி செய்கிறார் என்று கொள்வோம். இந்திய ஏற்றுமதியாளர் இலண்டன் இறக்குமதியாளர் மீது 90 அல்லது 91 நாள்கள் கெடுவில் ஒரு குறிப்பிட்ட தொகையை (அனுப்பிய சரக்கின் மதிப்பை) ஒரு குறிப்பிட்ட நபருக்கோ, அவர் உத்தரவு பெற்ற மற்றவருக்கோ கொடுக்க வேண்டுமென்று ஓர் ஆணையை உண்டியல் மூலம் எழுதுகிறார். தேர்ச்சி பெற்ற ஓர் ஏற்பகம் இந்த உண்டியலை இலண்டன் இறக்குமதியாளர் சார்பாக ஏற்றுக்கொள்கிறது அல்லது இவ் வுண்டியலுக்கு உத்தரவாதமளிக்கிறது. இந்திய ஏற்றுமதியாளர் இந்த உண்டியலை இந்திய வணிக வங்கியிடம் அல்லது மாற்று வங்கியிடம் (Exchange Bank) விற்றுவிடலாம் அல்லது தள்ளுபடி செய்து கொள்ளலாம். உண்டியலைத் தள்ளுபடி செய்து கொண்ட இந்திய வங்கி இவ் வுண்டியலை இலண்டனில் செயல்புரியும் தன் முகவருக்கு (Agent) அனுப்பும். அவர் அல்லது அந்த நிறுவனம் தள்ளுபடியகத்திற்கோ, தரகருக்கோ இதை விற்று அதன் மூலம் பணம் பெற்றுக்கொள்ளலாம். தவணை நாள் முடிவடையும் தறுவாயில் அவ் வுண்டியலை உண்டியல் வைத்திருப்போர் இறக்குமதியாளரிடம் சமர்ப்பித்துப் பணம் பெறலாம்.

இறக்குமதியாளர் அவ் வுண்டியலை மீட்கத் தவறினால் உண்டியலுக்கு உத்தரவாதமளித்த ஏற்பகம் தொகையைச் செலுத்திவிடும். பன்னாட்டு வாணிபத்தில் உண்டியல் மூலம் நிதியளிப்பு முறை மிகப் பரவலாகக் காணப்படுகிறது. உண்டியல் முறை மூலம் ஏற்றுமதி யாளருக்குப் (அதாவது பொருள் விற்றவருக்கு) பொருளின் மதிப்பு உடனடியாகக் கிடைத்துவிடுகிறது. அதே நேரத்தில் இறக்குமதி யாளர் உண்டியலின் தவணைக் காலம் முடியும் வரை யாதொரு தொந்தரவும் இல்லாமல் தாம் வாங்கிய பொருள்களை விற்பனை செய்து கிடைத்த தொகையைக் கொண்டு தம்மீது எழுதப்பட்ட உண்டியலை மீட்கலாம். வணிக வங்கிகளும், தங்கள் வசம் இருக்கும் குறுகியகால வைப்புத் தொகைகளைப் பயன்படுத்தி உண்டியல்களைத் தள்ளுபடி செய்து வாங்குவதன் மூலம் இலாபம் பெறமுடிகிறது.

நிதி உண்டியல்

உண்டியல்களில் இரண்டாது வகையான நிதி உண்டியல் (Finance Bill) என்பது பண வசதி செய்வதற்காக எழுதப்படுவ தாகும். சரக்குகள் கைம்மாறுவதில்லை. குறுகிய காலத்திற்கு நிதி நெருக்கடியைச் சமாளிப்பதற்காகப் பயன்படுத்தப்படும் பத்திரமே உண்டியலாகும். இது குறிப்பிட்ட நபருக்கு ஒரு குறிப்பிட்ட நிதித் தொகையைக் குறிப்பிட்ட தேதியில் வழங்குவதற்காகக் கொடுக்கப் படும் உறுதிமொழியாகும். இந் நிதி உண்டியல்களில் பரவலாகக் காணப்படுவது அரசு ஆவணப் பத்திரங்களே (Government Securities) ஆகும். இங்கிலாந்து அரசுக்கு வருவாயைவிடச் செல வினங்கள் அதிகமாக ஏற்படும்போது ரொக்கம் புரட்டுவதற்காக இந்த ஆவணங்கள் வெளியிடப்படுகின்றன. இங்கிலாந்து அரசு இவ் வாவணத்தின் மூலம் இதை வைத்திருப்பவருக்கு ஒரு குறிப்பிட்ட தொகையைக் குறிப்பிட்ட நாளில் தருவதற்கு உறுதியளிக்கிறது.

இலண்டன் தள்ளுபடிச் சந்தை வணிக உண்டியல் மற்றும் அரசு ஆவணப் பத்திரங்களைத் தவிர ஐந்தாண்டுக் காலக் கெடுவுக்குள் இருக்கும் குறுகியகாலக் கடன் பத்திரங்கள் (Shortterm bonds) வாங்குவதிலும் விற்பதிலும் ஈடுபட்டு வருகின்றன.

அழைப்புக் கடன் சந்தை, ஏற்புச் சந்தை இவைகளை உட் கொண்டதாகத் தள்ளுபடிச் சந்தை அமைந்திருப்பதால் இலண்டன் தள்ளுபடிச் சந்தை இலண்டன் பணச் சந்தையில் ஒரு முக்கிய அங்கத்தை வகிக்கிறது.

இலண்டன் தள்ளுபடிச் சந்தையில் பணிபுரியும் தேர்ச்சி பெற்ற சில நிறுவனங்கள் குறுங்காலக் கடன்களைக் கூட்டுப்பங்கு வங்கிகளிட

மிருந்தும் (Joint Stock Banks), மற்ற நிறுவனங்களிடமிருந்தும், பொது மக்களிடமிருந்தும் திரட்டி ஏற்புச் சந்தையினால் அளிக்கப் படும் உண்டியல்களை வாங்கித் தங்கள் வசம் தவணை நாள்கள் முடியும் வரை வைத்துக்கொள்கின்றன. தள்ளுபடிச் சந்தைக்குத் தேவையான நிதி, பெரும்பாலும் வணிக வங்கிகளிடமிருந்து அழைப்பு மற்றும் சிற்றறிவிப்புக் கடன் (Money at call and short notice) வடிவில் கிடைக்கிறது. தள்ளுபடியகங்கள் உண்டியலைத் தள்ளுபடிச் செய்யும் விகிதத்தைவிட இந்த அழைப்புக் கடன்மீது செலுத்தும் வட்டி வீதம் குறைவு. தள்ளுபடிச் சந்தைக்கு, அழைப்புக் கடன் சந்தையிலிருந்து பெறும் கடன்மீது செலுத்த வேண்டிய வட்டி, ரொக்கத்தைப் புரட்டுவதற்காக ஏற்படும் செலவாகும் (Cost of-credit) உண்டியல்களைத் தள்ளுபடி செய்து இலாபத்தை (earnings) அடைகிறது. இந்த இலாபத்திற்கும் மேற்குறிப்பிட்ட செலவிற்கும் உள்ள வித்தியாசமே உண்டியல் சந்தைக்குக் கிடைக்கும் வருவாயாகும்.

1930 வாக்கில் உலக மந்தநிலை நிலவியபோது வணிக உண்டியல்களின் முக்கியத்துவம் குறைந்தது. ஆனால், இங்கிலாந்து அரசினால் வெளியிடப்பட்ட ஆவணப் பத்திரங்களின் முக்கியத்துவம் உயர்ந்தது. 1950 வாக்கில் இலண்டன் தள்ளுபடிச் சந்தையில் ஒரு குறிப்பிட்ட ஆண்டு வணிக உண்டியல்களின் மொத்த மதிப்பு 250 மிலியன் பவுன் மதிப்பிற்கும் குறைவாக இருந்தது. அதே நேரத்தில் அரசு ஆவணங்களின் மொத்த மதிப்பு அவ் வாண்டு 3,000 மிலியன் பவுனிற்கு மேலாக இருந்தது. இது தள்ளுபடிச் சந்தையில் அரசு ஆவணங்களின் மேலோங்கி நிற்கும் தன்மையை எடுத்துக் காட்டுகின்றது. இப் போக்கிற்குப் பல காரணங்கள் இருக்கலாம். வணிக உண்டியல்களில் தங்கள் பெயர் குறுப்பிடப்படுவதைக் கடன் பெறுவோர் சிலர் விரும்பாமல் இருக்கலாம். மேலும். உண்டியலில் குறிப்பிட்டிருக்கும் காலக்கெடுவிற்கு முன் அதை ஏற்பவரிடம் (Acceptor) கொடுத்துத் தொகை பெறமுடியாது. ஆனால், அரசு ஆவணத்தில் எளிதாக எச் சமயத்திலும் பணம் பெறமுடியும். இதைத் தவிர, வங்கிகள் வழங்கும் கடன் முறை மிகவும் எளிதாக்கப் பட்டு உள்நாட்டுத் தொழில் மற்றும் வர்த்தகம் இவற்றிற்குப் பணம் விரைவாகப் பெறமுடிகிறது. இரண்டு உலகப் போர்களின் இடைக் காலத்தில் பன்னாட்டு வாணிபம் கணிசமாகக் குறைந்ததன் விளைவாக உண்டியலின் உபயோகம் குறைந்தது. ஆனால், அதே நேரத்தில் போர்க்காலங்களிலே போரை நடத்துவதற்கு அரசு ஆவணங்களை அடுத்தடுத்து வெளியிட்டுப் பண நெருக்கடியைச் சமாளித்துக் கொண்டது. அரசு ஆவணங்கள் பெருமளவில் புழக்கத் திற்கு வந்தன.

அரசு ஆவணங்கள் குறுகியகாலக் கடன் வசதியை அளிக்கும் சாதகமாக இலண்டன் தள்ளுபடிச் சந்தையில் மேலோங்கி நின்ற போதிலும் அரசு ஆவணங்களின் இலாப வரம்பு (Margin of profit) மிகக் குறைவு. ஆகவே, இலாபம் கணிசமாகக் கிடைப்பதற்கு வகை செய்யும் வேறொரு முதலீட்டு முறையை வகுக்கவேண்டி வந்தது. குறுகிய கால அரசுக்கடன் பத்திரங்களில் (Short term Government Bonds) முதலீடு செய்யும் முறை வழக்கத்தில் வந்தது.

குறுகிய கால அரசுக்கடன் பத்திரங்கள் இரு வகைப்படும். (1) ஓராண்டுகள் முதல் ஐந்து ஆண்டுகள் வரை தவணை பெற்ற அரசு ஆவணங்கள் அதாவது கருவூல ஆவணங்கள் (exchequer bonds). (2) 15 முதல் 20 ஆண்டுகள் வரை தவணை கொண்ட (நெடுங்கால) ஆவணங்கள். இவை முடிவுத் தேதியை நெருங்கும் போது குறுங்காலப் பத்திரங்களாகக் கருதப்படுகின்றன.

தள்ளுபடியகங்கள் முதலில் கூறப்பட்ட குறுகிய காலப் பத்திரங்களை வாங்குவதையே விரும்புகின்றன. ஏனெனில், குறுகிய காலத்திலேயே ரொக்கத் தொகையை எளிதாகப் பெற்று விடலாம். மேலும், இப் பத்திரங்களில் முதலீடு செய்வதன் மூலம் உறுதியான ஒரு வருவாய் தள்ளுபடியகங்களுக்குக் கிட்டுகின்றது. ஆனால், ஒரு காலத்தில் தள்ளுபடியகங்கள் குறுகிய காலப் பத்திரங்களை வாங்கி விற்கும் நடவடிக்கைகளுக்கு ஓர் எதிர்ப்பு இருந்தது. தள்ளுபடியகங்கள் பெரும்பாலும் தங்களுடைய நிதியை மிகக் குறுகிய காலத்தில் திருப்பிக் கொடுக்கும் வகையில் கடன் மூலம் பெறுகின்றன. இம் முறையில் கிடைத்த கடனை ஐந்து ஆண்டுகள் தவணை கொண்ட அரசுக் கடன் பத்திரங்களில் முடக்கு வதால் பல இன்னல்கள் ஏற்படும் என்ற காரணத்தினால் எதிர்ப்பு ஏற்பட்டது. இக் குறையை நீக்குவதற்காகச் சில தள்ளுபடியகங்கள் தங்கள் நிதி வளத்தை வலுப்படுத்திக் கொள்ளும் பொருட்டுத் தங்களுக்குள் இணைப்பு (amalgamations) ஏற்படுத்திக் கொண்டன. தள்ளுபடியகங்கள், குறுங்கால அரசுக் கடன் பத்திரங்களில் தங்கள் மூலதனத்தைப்போல் 8 மடங்கு வரைதாம் முதலீடு செய்யலாம் என்ற வரம்பு விதிக்கப்பட்டது. மேலும், ஐந்து ஆண்டுகளுக்கு மேல் தவணை கொண்ட கடன் பத்திரங்களை அவை வாங்கக் கூடாது என்றும் விதிக்கப்பட்டது. இக் கட்டுப்பாடுகள், தள்ளுபடி யகங்களின் சீரான நிதி நிலையைப் பராமரிப்பதற்கும், இவ் வகங்கள் தேவையற்ற தொழில் இடர்ப்பாடுகளிலிருந்து தங்களைக் காப்பாற்றிக் கொள்ளுவதற்கும் தேவையெனக் கருதப்பட்டது. தற்போது அரசுக் கடன் பத்திரங்கள் வாங்குவதையும் விற்ப தையும் ஒரு முறையான நடவடிக்கையாகக் கருதுகிறது.

இங்கிலாந்தின் கூட்டுப் பங்கு வங்கிகள் இப் பத்திரங்களின் பேரில் தள்ளுபடியகங்களுக்குக் கடன் வழங்கி வருகின்றன. பாங்க் ஆஃப். இங்கிலாந்து மறு தள்ளுபடி செய்வதற்கு இப் பத்திரங்களை 'உகந்த பத்திரங்களாக' (தகுதிப் பத்திரங்கள் - eligible securities) எடுத்துக்கொள்கிறது.

**இலண்டன் தள்ளுபடிச் சந்தையின் பணிகள்**

இத் தள்ளுபடியகங்கள் உண்மையிலேயே பயனளிக்கும் பணிகளைச் செய்கின்றனவா? அல்லது இவை ஆற்றும் பணிகளைப் பணச் சந்தையில் மற்ற அங்கங்களாகச் செயல்படும் பிற நிறுவனங்கள் ஏற்க முடியுமா? என்ற வினாக்கள் எழலாம். இலண்டன் பணச் சந்தையில் பன்னிரு கூட்டுப் பங்குக் கம்பெனிகளும், சில இயக்கத் தரகர்களும் (Running Brokers) தள்ளுபடிச் சந்தையில் செயல்படுகின்றன. இவைகள் இடைநிலையர்களாக (Intermediaries) இருந்து செய்யக் கூடிய சில மறைமுகமான நடவடிக்கைகளை இவைகளை விடுத்து நேரடியாக மற்ற நிறுவனங்கள் செய்ய முடியுமா என்பதை ஆராய்வோம்.

(அ) அரசு ஆவணப் பத்திரங்களை அரசு நேரடியாகக் கூட்டுப் பங்கு வங்கிகளுக்கு விற்றுவிடலாம். தற்போது அரசு முதலில் பத்திரங்களைத் தள்ளுபடியகங்களுக்கு விற்று, பிறகு இத் தள்ளுபடியகங்கள் தங்களுக்கு நிதி தேவைப் படும்போது வணிக வங்கிகளுக்கு விற்கின்றன. தள்ளுபடியகங்களின் இந்த இடைநிலையர் பணியைத் தவிர்க்கலாம்.

(ஆ) வணிகத் தாள்களின் முக்கியத்துவம் பெருமளவில் குறைந்துவிட்டபடியால், ஏற்புத் தொழிலை ஏற்றுத் தொழில் நடத்திவரும் வணிக வங்கிகளுக்கு உண்டியல் தள்ளுபடி செய்யும் பணியினை மேற்கொள்ளுவது எளிதாகவும் இருக்கும்; மேலும் ஆதாயமானதும்கூட. இவ்வகையில் தள்ளுபடியகத்தின் பணியினை வணிக வங்கியிடம் ஒப்படைக்கலாம்.

ஆனால் பேராசிரியர் சேயர்ஸ், இலண்டன் தள்ளுபடிச் சந்தை சில சிறப்புப் பணிகளை மேற்கொண்டு திறம்படச் செய்துவருவதைச் சுட்டிக் காண்பிக்கிறார்.

1. தொழில் அல்லது வணிகம் இவற்றில் ஈடுபட்டவர்களின் நடவடிக்கைகள் மூலம் தோற்றுவிக்கப்பட்ட உண்டியல்களின்மீது கெடுவுக்காலம் வரை காத்திராமல் தொழில் நடத்துவதற்கு

உடனடியாக நிதி தேவை என்போர் ஒரு புறமும், குறுகிய கால வைப்புத் தொகைகளைக் குறுகிய காலக் கடன் அளித்து அவை மூலம் வருவாய் ஈட்ட வேண்டும் என்று விரும்பும் வணிக வங்கிகள் மற்றொரு புறமும் இருக்க, இவைகளிடையே இடைநிலையர்களாக தள்ளுபடியகங்கள் செயல்படுகின்றன. இந்தப் பணியினைப் பரம்பரையாக இத் தொழிலில் ஈடுபட்டிருக்கும் தேர்ச்சி பெற்ற தள்ளுபடியகங்களைத் தவிர வேறு எந்த நிறுவனமும் திறம்படச் செய்வதென்பது கடினம். பன்னாட்டு வாணிபம் மிக விரைவாக வளர்ந்து கொண்டிருக்கிறது. புதிய புதிய நாடுகள் இந் நூற்றாண்டில் விடுதலை பெற்றுப் பொருளாதாரத் துறையில் மிக்க வளர்ச்சியடைந்து வருகின்றன. மற்ற நாடுகளுடன் தொடர்பு கொண்டு தங்களுக்குத் தேவையான மூலதன வளங்களைத் (Capital Resources) தருவித்துத் தங்களிடம் உபரியாக இருக்கும் கச்சாப் பொருள்களையும் (Raw materials), உற்பத்திப் பொருள்களையும் (Manufactured goods) ஏற்றுமதி செய்து அந்நியச் செலாவணி ஈட்டுகின்றன. ஆகவே, பன்னாட்டு வாணிபம் மிகப் பரவலாக விரிந்து வளர்ந்திருக்கிறது. இதன் விளைவாக வணிக உண்டியல்கள் மிக அதிகமாகப் பயன்படுத்தப்படுகின்றன. இந் நிலையில் தள்ளுபடியகங்களின் சேவை மிகத் தேவைப்படும்.

2. தள்ளுபடிச் சந்தை வணிக வங்கிகளுக்குச் சில இன்றியமையாத பணிகளைப் புரிகிறது. குறுகிய காலங்களுக்குத் தங்களுடைய நிதிகளை இலாபகரமாக முதலீடு செய்ய வகை செய்வதற்கு, இங்கிலாந்து கூட்டுப்பங்கு வங்கிகள் உண்டியல்களை நாடுகின்றன. அவைகள் ஒவ்வொரு வாரமும் குறிப்பிட்ட தொகையைத் திரும்பிப் பெறுவதற்குப் பொருத்தமாக இருக்கக் கூடிய தவணைத் தேதிகள் கொண்ட உண்டியல்களைப் பெரிதும் விரும்புகின்றன. தங்கள் வசம் இருக்கும் மொத்த வைப்புத் தொகைகளில் ஒரு குறிப்பிட்ட சதவீதத்தை ரொக்கமாக வைத்துக்கொண்டு தங்கள் நீர்மைத் தன்மையைக் (liquidity) காத்துக் கொள்ள இது வகை செய்யும். இவ் விரு பணிகளையும் தள்ளுபடிச் சந்தை வணிக வங்கிகளுக்குச் செய்கிறது. தள்ளுபடியகங்கள் முதலாவதாக உண்டியல்களை வாங்குகின்றன. பிறகு அவைகளின் கெடுவுக்காலத்திற்கு ஒப்ப ஒழுங்குபடுத்தித் தங்கள் வசம் குறைந்தது 1 மாதம் அல்லது 1½ மாதம் வரை வைத்திருந்து, அதன் பிறகு முழுமைத் தொகையாக (round amount) ஒரு குறிப்பிட்ட காலக் கெடுவுடைய உண்டியல்கள் அடங்கிய கட்டுகளாக (Parcels) ஆக்கி வணிக வங்கிகளுக்கு விற்கின்றன. இவ் வேற்பாடு வணிக வங்கிகளுக்கும் அதே நேரத்தில் தள்ளுபடியகங்களுக்கும் நன்மை பயப்பதாக அமைகிறது. அந்தக் கட்டுகளை அப்படியே வங்கிகளிடம் கொடுத்துவிட்டு அவற்றிற்கு

[illegible]டாகத் தள்ளுபடியகங்கள் பணம் பெறுகின்றன. அவ் வுண்டியல்களை விற்கும்போது அவற்றின்மேல் தன்னுடைய 'புறக்குறி'யைத் (Endorsement) தள்ளுபடியகம் இடுகின்றது. எனவே கெடுவுக் காலத்தில் ஏற்பவர், வரைபவர், இதற்கு முன்பு வைத்திருந்தோர் ஆகியோர் பணம் தரத் தவறினால் தள்ளுபடியகம் பணத்திற்குப் பொறுப்பாகும். இந்த ஒரு பொறுப்புத் தவிர அந்த உண்டியல் களின்மீது வேறு எந்த விதமான பாத்தியதைகளும் இனித் தள்ளுபடி யகத்திற்குக் கிடையாது. வணிக வங்கிகளிடம் உண்டியல்களை மறு தள்ளுபடி செய்யும் (தள்ளுபடி) விகிதம் இத் தள்ளுபடியகங்கள் இந்த உண்டியல்களை முதலில் தள்ளுபடி செய்த விகிதத்திற்குக் குறைவாக இருப்பதனால் அவை இலாபமடைய முடிகின்றன. வணிக வங்கிகளின் உபரி நிதியை இவ் வேற்பாட்டின் மூலம் இலாப கரமாக முதலீடு செய்வதோடு மட்டுமல்லாமல் தங்களுடைய நீர்மைத் தன்மையைக் காப்பாற்றிக் கொள்ள முடிகிறது.

3. தள்ளுபடிச் சந்தை, கருவூலச் சந்தையை மிகவும் போட்டி யுடையதாகச் செய்திருக்கிறது. இலண்டன் தீர்வக வங்கிகளைத் தவிர, இங்கிலாந்து மற்ற அந்நிய நாட்டு வங்கிகள் தங்களுடைய குறுகியகாலக் கையிருப்புகளை இலண்டனில், குறிப்பாகக் கருவூல உண்டியல்களில் முதலீடு செய்கின்றன. இதன் மூலம் கருவூல உண்டியல்களுக்கு ஒரு நல்ல சந்தை அமையப் பெறுகிறது. தள்ளுபடியகங்கள் தங்கள் நடவடிக்கைகளின் மூலமாகக் கருவூல உண்டியல் சந்தையைப் போட்டி யுடையதாகச் செய்து, அதே நேரத்தில் இலண்டனுக்கு ஒரு தலையாய நிதி மையமென்ற பெருமையையும் ஏற்படுத்தியிருக்கின்றன.

4. இங்கிலாந்தின் மைய வங்கியான பாங்க் ஆஃப் இங்கி லாந்தைப் (Bank of England) பணச் சந்தைகளுக்கு, குறிப்பாக வணிக வங்கிகளுக்கு உற்றுழி உதவுவோனாக (Lender of last resort) செயல்படத் தள்ளுபடிச் சந்தை வகை செய்கிறது. வணிக வங்கிகள் தங்களுக்குக் கூடுதலான ரொக்கம் தேவை என்ற நிலையேற்படும் போது, தள்ளுபடிச் சந்தையை நன்றாக இறுக்குகின்றன. சில வணிக வங்கிகள் தாங்கள் வழங்கிய அழைப்புக் கடன்களைத் திரும்ப அழைக்குமேயானால் தள்ளுபடியகங்கள் பாங்க் ஆஃப் இங்கி லாந்தைக் கடனுக்காக அணுகாமல், இதர வணிக வங்கிகளிடமிருந்து கடன்களைப் பெற முடியும். ஆனால், எல்லா வங்கிகளும் தாங்கள் வழங்கிய கடன் முழுமையையும் தள்ளுபடிச் சந்தையிலிருந்து திரும்பப் பெற முயன்றால், அந் நேரத்தில் பாங்க் ஆஃப் இங்கி லாந்தை அனுமதித் தகுதி (eligible) பெற்ற உண்டியல்களை மறு தள்ளுபடி செய்து அதன் மூலம் கிட்டும் தொகையை வணிக

வங்கிகளிடமிருந்து பெற்ற அழைப்புக் கடன்களைத் தீர்ப்பதற்கும் பயன்படும். பணச் சந்தையின் நிதிவசதிகளை முழுமையாகப் பயன்படுத்துவதற்கு இவ்வழி வகை செய்கிறது. வணிக வங்கிகள் சில வற்றிடம் உபரித் தொகை இருக்குமேயானால் தங்கள் நிதி வசதிக்காகத் தள்ளுபடியகங்கள், பாங்க் ஆஃப் இங்கிலாந்தை நேரடியாக அணுகுவது என்ற நிலை ஏற்படுவதற்குச் சாத்தியம் இல்லை. இங்கிலாந்தின் மைய வங்கி கடனைப் பெருக்குவதற்கோ, கட்டுப்படுத்துவதற்கோ எடுத்துக் கொள்ளும் நடவடிக்கைகளைப் பற்றிய செய்தி பணச் சந்தை முழுவதிலும் உடனடியாகப் பரவுகிறது.

தள்ளுபடியகங்கள் ஆற்றும் பல பணிகளை வணிக வங்கிகள் அதே முறையில் செய்யக்கூடும் என்று காரணம் காட்டி, இலண்டன் பணச் சந்தையிலிருந்து தள்ளுபடியகங்களை நீக்கலாம் என்பது சிலருடைய கருத்து. ஆனால், முன் கூறியது போல் பேராசிரியர் சேயர்ஸ் தள்ளுபடிச் சந்தை தொடர்ந்து திறம்படச் செயல்புரிவதன் அவசியத்தை மிகத் தெளிவாக எடுத்துரைத்திருக்கிறார். துரிதமாக, அதிக அளவில் பயன்படுத்தப்படும் வணிக உண்டியல்களின் எண்ணிக்கை மற்றும் மதிப்புப் பெருகி வருவதால் தள்ளுபடி செய்யும் பணியில் மிக்க தேர்ச்சி பெற்ற அனுபவம் வாய்ந்த தள்ளுபடியகங்கள் தொடர்ந்து தங்களுக்குள்ள பணிகளைச் செய்திடல் வேண்டும்; வணிக வங்கிகளின் நலத்திற்கும் இது உகந்ததாகும். பேராசிரியர் சேயர்ஸ் தெரிவித்திருக்கும் கருத்தை நாம் இங்கு நினைவுகூர்தல் வேண்டும். 'எந்தெந்தச் சூழ்நிலைகளை ஒட்டித் தள்ளுபடியகங்கள் தோன்றினவோ, அந்தந்தச் சூழ்நிலைகள் பெரும்பாலும் மறைந்து விட்டன. இருப்பினும், தள்ளுபடியகங்கள் செயலாற்றி வருவதை யொட்டிச் (வணிக வங்கிகளுக்கு) சில வசதிகள் கிட்டுகின்றன. கருவூல உண்டியல் நடவடிக்கைகளைப் பொறுத்த வரையில் தள்ளுபடியகங்களின் பணிகள் இன்றியமையாதவைகள் அல்ல. இதன் விளைவாகத் தள்ளுபடியகங்கள் மறைந்துவிட நேரிடினும் பணச் சந்தை பெரிதும் பாதிக்கப்படமாட்டாது. இருப்பினும், தள்ளுபடியகங்கள் நீடித்து இருக்க வேண்டியது அவசியமே என்று தோன்றுகிறது. தள்ளுபடியகங்கள் செயலாற்றி வருவதன் மூலம் வங்கிகட்குப் பாரம்பரியமாகக் கிட்டும் சில வசதிகள் உண்டு. மேலும், காலப்போக்கில் நேர்ந்த மாற்றங்களுக்கு ஏற்பத் தங்கள் நடவடிக்கைகளைத் தள்ளுபடியகங்கள் சீரிய முறையில் மாற்றியமைத்துக் கொண்டே வந்துள்ளன.' இங்கிலாந்தின் ராட்க்ளிஃப் (Radcliffe) குழு, பேராசிரியர் சேயர்ஸ் சொன்ன கருத்தையே வலியுறுத்துகிறது. பணத் திட்ட அமைப்பிற்குத் தள்ளுபடிச் சந்தை இன்றியமையாதது என்று கூற முடியாவிடினும், பண ஓட்டத்தில் வணிக வங்கி

களிடையே ஏற்படும் தடங்கல்களை அகற்றி, ஓட்டத்தைச் சீர்படுத்தி, வணிக வங்கிகளுக்கு அப்போதைக்கப்போது ரொக்க நீர்மைத் தன்மையில் ஏற்படும் தற்கால நெருக்கடிகளைப் போக்கி, வங்கிகள் சரியான முறையில் செயல்படுவதை எளிதாக்கி, பொருளாதாரத் துறைகளுக்குக் கடன் வழங்குவதில் முழுமையான கவனத்தைச் செலுத்துவதற்கு வகை செய்கிறது. தள்ளுபடிச் சந்தையை அகற்றி அவ்விடத்தில் வேறு ஒரு நிறுவனத்தை ஏற்படுத்துவது மனித முயற்சிக்கு அப்பாற்பட்டதன்று. ஆனல் தள்ளுபடிச் சந்தை செயல் படுகிறது; நன்ருகச் செயல்பட்டு வருகிறது; அதன் பணிகளைக் குறைந்த செலவில் சீரிய முறையில் செவ்வனே செய்கின்றது.

இப்படி நன்கு வளர்ச்சி பெற்ற வங்கிமுறை, மைய வங்கி, போதுமான அளவு செலாவணிப் பத்திரங்கள் (Financial Instruments), ஒன்றையொன்று சார்ந்திருக்கும் பல துணைச் சந்தைகளைக் கொண்ட நன்கு ஒருங்கிணைக்கப்பட்ட பணச் சந்தை அமைப்பு, நிதிகளின் இடப் பெயர்ச்சி நுட்பமானதும் உணர்வு மிக்கதுமான பணச் சந்தை—இவைகள் எல்லாம் உடைய இலண்டன் பணச் சந்தை ஏனைய சந்தைகளுக்கெல்லாம் முன்மாதிரியாக விளங்குகிறது. 'இலண்டன் பணச் சந்தை' என்ற புத்தகத்தை எழுதிய சைக்ஸ் (Sykes) என்பவர் இலண்டன் பணச் சந்தையை வண்டிச் சக்கரத்திற்கு (Cart wheel) ஒப்பிட்டுள்ளார். மைய வங்கியே பணச் சந்தை என்கிற வண்டிச் சக்கரத்தின் அச்சு அல்லது இருசு (Axle) என்றும், கூட்டுப்பங்கு வங்கிகள் (Joint Stock Banks) சக்கரத்தின் குடம் (Hub) என்றும், இதர வங்கிகள் சக்கரத்தின் ஆரக்கால்கள் என்றும், உண்டியல் தள்ளுபடியகங்கள் சக்கரத்தின் விளிம்பு அல்லது ஓரம் அல்லது வட்டை என்றும் ஒரு நீண்ட உவமையைக் கையாண்டு விளக்கியுள்ளார்.

# 14. நியூயார்க் பணச் சந்தை

## (Newyork Money Market)

மற்றப் பணச் சந்தைகளைப் போல நியூயார்க் பணச் சந்தையும் பலவகைத் துணைச் சந்தைகளைக் கொண்டு செயல்படுகின்றது. இத் துணைச் சந்தைகளில் சில, பல ஆண்டுகளுக்கு முன்பே வளர்ச்சியுற்ற நிலையில் இருந்தன. மற்றச் சில துணைச் சந்தைகள் சமீப காலத்தில் ஏற்பட்டவையே. நியூயார்க் பணச் சந்தையின் முக்கிய அங்கங்க ளாகத் திகழ்பவை வணிகத்தாள் சந்தை, பிணையீட்டுக் கடன் சந்தை, ஏற்புச் சந்தை, ஐக்கிய நிதிகள் சந்தை, கருவூல உண்டியல் சந்தை ஆகியனவாகும்.

### வணிகத்தாள் சந்தை (commercial Paper Market)

இது பணச் சந்தைகளில் மிகப் பழமையான தொன்ருகும். ஒரு புகழ் பெற்ற நாணயமுள்ள தொழில் நிறுவனத்தின் மூன்று மாதம் முதல் ஆறுமாதங்கள் வரை கெடுவு தேதி கொண்ட உறுதிப் பத் திரத்தை வணிகத்தாள் என்று சொல்லுகிறோம். இந்த வணிகத்தாள் குறைந்தது 5000 டாலர் மதிப்பு கொண்டதாகவும் அல்லது அதன் மடங்கில் 100,000 டாலர் மதிப்பு வரை (உதாரணமாக 10,000, 15,000, 20,000 டாலர்கள்) உள்ளதாக இருக்கும். வணிகத்தாளகத் திற்கு (Commercial Paper House) இது சாதாரணமாக விற்கப்படு கிறது. வணிகத்தாள்களை வாங்கி விற்கும் நிறுவனங்களை நாம் வணிகத்தாளகம் என்று கூறுகிறோம். வணிகத்தாள்களை இவ் வகங்கள் வாங்கி வங்கிகளுக்கு விற்கின்றன. தற்காலிகமாக நடை முறை மூலதனத்தில் ஒரு பற்ருக்குறை ஏற்படும் போது அல்லது பருவ காலங்களில் நெருக்கடியான ஒரு நிலை தோன்றும் போதும் புகழ்பெற்ற சில தொழில் நிறுவனங்கள் இந்த எளிதான முறையைக் கையாளுகின்றன. தொழிற்கடன்களின் மீது வங்கிகள் வசூலிக்கும் வட்டி வீதத்தைவிட, தொழிலகங்கள் வணிகத்தாள்களில் கொடுக்கும்

வட்டிவீதம் குறைவு. ஆகவே வணிகத்தாள்கள் வெளியிடுவதன் மூலம் நிதி ஏற்பாடு செய்வதென்பது இலாபகரமானதாகும். வணிகத்தாள்கள் மூலம் விற்கப்பட்ட வணிகத்தாள்களின் மொத்த மதிப்பு 1920 ஆம் ஆண்டு 1800 மிலியன் டாலராக இருந்து, 1933-ல் 60 மிலியன் டாலராகக் குறைந்து, ஆனுல் மறுபடியும் 1944ஆம் ஆண்டு 700 மிலியன் டால்ராக உயர்ந்தது. ஆனுல் நிதிக் கம்பெனிகள் (Finance Companies) அவைகள் ஆற்றும் பணிகளுக்கேற்ப வெளிச் சந்தையில் தங்களுடைய உறுதிப் பத்திரங்களைத் தொடர்ந்து விற்றுக் கொண்டு வருகின்றன. மிக முக்கியமான ஐந்து பெரிய நிதிக் கம்பெனிகளின் விற்பனை 1954-ல் 1200 மிலியன் டாலராக இருந்தது.

மாதிரி வணிகத்தாள்

நியூயார்க், அக்டோபர், 1, 1963

$ 50,000 ..........................................

(நகரம், மாநிலம்) (தேதி)

மதிப்புப் பெற்றதற்கு, நாங்கள் திரு. வில்லியம் ஜான்சன் அவர்களுக்கோ அவர் ஆணை பெற்றவருக்கோ இதைக் கொணர்பவருக்கோ, 50,000 டாலர்கள் பிப்ரவரி 1, 1964 அன்று கொடுப்பதற்கு உறுதியளிக்கிறோம்.

தொகை செலுத்தும் வங்கி: நேஷனல் பாங்க் ஆஃப்
நியூயார்க்

x, y, z கார்ப்பரேஷனுக்காக

..........................................

அனுமதிக்கப் பெற்ற கையொப்பம்

..........................................

அனுமதிக்கப் பெற்ற கையொப்பம்

**பிணையீட்டுக்கடன் சந்தை (Collateral Loan Market)**

தரகர்களுக்கும் பங்குகள் மற்றும் ஆவணங்கள் முதலியவற்றை வாங்கி விற்போருக்கும் வங்கிக்கடன் வழங்கப்படும் சந்தையைப் பிணையீட்டுக் கடன் சந்தை என்று கூறுகிறோம். வங்கிக் கடன், கால

அளவு அடிப்படையிலோ (Time basis), கேட்கும் போது திருப்பிக் கொடுக்க வேண்டி (Demand basis) நிபந்தனையின் அடிப் படையிலோ, சரக்குகள் அல்லது பத்திரங்களின் ஈட்டின் பேரில் வழங்கப்படுகிறது. பிணையீட்டுக் கடன்களைத் 'தரகர்களுடைய கடன்கள்' (Broker's Loans) அல்லது 'வீதிக் கடன்கள்' (Street Loans) என்றும் கூறுவர். இவ்வகைக் கடன்களில் பெரும்பகுதி அழைப்புக் கடனாகக் (Call Loan) கொடுக்கப்படுகிறது; அதாவது வங்கிகள் கேட்கும் போதோ, ஒரு நாள் கெடுவிலோ திருப்பிக் கொடுக் கப்பட வேண்டியிருக்கும் பிணையீட்டுக் கடன் தொகைகளை வங்கி கள் வழங்குவது, ஒரு குறிப்பிட்ட பிணையீட்டின் மீது கொடுக்கப்பட வேண்டிய கடன் அளவு முதலியன சட்டத்தினால் கட்டுப்படுத்தப் படுகிறது. இவ்வகைக் கடன்களின் முக்கியத்துவம் காலப் போக்கில் குறைந்து விட்டது.

### ஏற்புச் சந்தை (Acceptance Market)

இது இலண்டனில் செயல்படும் தள்ளுபடிச் சந்தையைப் போன்றதாகும். ஒரு நிறுவனத்தினாலோ தனிப்பட்ட நபராலோ ஒரு குறிப்பிட்ட தொகையைக் குறிப்பிட்ட தேதியில் ஒரு குறிப்பிட்ட நபருக்குச் செலுத்தப்பட வேண்டும் என்று வங்கிக்கு இடப்படும் கட்டளை கொண்ட ஒரு சீட்டை (draft) அவ் வங்கி ஏற்பு தெரிவிக்கும். இதைத்தான் வங்கியரின் ஏற்பு அல்லது ஒப்புதல் அல்லது வங்கியரின் உண்டியல் எனக் கூறுகிறோம். இப் பத்திரத்தின் படி ஏற்புத் தெரிவித்த வங்கி முதன்மைக் கடனாளி (principal Debtor) ஆகும். இவ் வுண்டியலை எழுதிய நிறுவனமோ, நபரோ இவ் வுண்டியலில் குறிக்கப்பட்டிருக்கும் தொகைக்கு வகை செய்து குறிப்பிட்ட நாளில் அவ் வுண்டியலின் மீது வங்கி பணம் செலுத்த ஏற்பாடு செய்ய வேண்டும். சந்தையில் வங்கிகளின் ஏற்பு விற்கப்படுகிறது. மேலும் தகுதி வாய்ந்த ஏற்புகளை ஐக்கிய ரிசர்வு வங்கிகளிடம் (Federal Reserve Banks) மறுதள்ளுபடி செய்யமுடியும். பன்னாட்டு வாணிபத்தின் மூலமாக இவ் வேற்புகள் பெரும்பாலும் எழுகின்றன. என்றாலும் உள் நாட்டில் சரக்குப் போக்குவரத்திற்கும் கிடங்குகளில் சேமிப்பதற்கும் (Storage) பயன்படுத்தப்படுகின்றன.

### ஐக்கிய நிதிகள் சந்தை (Federal Funds Market)

அமெரிக்க வங்கிகள் யாவும் நியூயார்க் பணச் சந்தையுடன் நேரிடையாகவோ மறைமுகமாகவோ இணைந்து செயலாற்றி வருகின்றன. அமெரிக்க மைய வங்கி அமைப்பு 12 மைய வங்கிகள் அடங்கிய ஒரு கூட்டமைப்பாகும். மைய வங்கியமைப்பின் தலைமை

அலுவலகங்கள் ஐக்கிய அமெரிக்க நாட்டின் தலைநகரான வாஷிங் டனில் உள்ளன.

அமெரிக்க வங்கிகள் இங்கிலாத்தின் வங்கி முறையைப் பின் பற்ருமல் அவைகளுக்கென்று சில சிறப்பு அம்சங்களைப் பெற்றிருக் கின்றன. தனி பாங்க் முறை (Unit Banking) அமெரிக்க நாட்டில் காணப்படுகின்ற ஒன்ருகும். இங்கிலாந்தில் கிளைவங்கி முறை (Branch Banking) காணப்படுகிறது. அமெரிக்காவில் மொத்தம் 49 மாநிலங்கள் உள. மாநிலங்கள் யாவும் தம் தம் எல்லைகளுக்குள் வங்கி முறையை ஒழுங்கு செய்யும் அதிகாரம் பெற்றிருக்கின்றன. ஆகவே அமெரிக்க வங்கி முறை 49 மாநிலங்களில் சட்டதிட்டங் களால் ஒழுங்காற்றப்படுகின்றது.

ஐக்கிய ரிசர்வு வங்கிகள் 1914ஆம் ஆண்டு நிறுவப்பட்டன. அமெரிக்க வங்கிங்கள் ஐக்கிய ரிசர்வு வங்கிகளிடமிருந்து கடன் வசதி களைப் பெறலாம். ஆனல், வங்கிகள் ஐக்கிய ரிசர்வு வங்கியை அணுகித்தான் கடன் பெற வேண்டுமென்ற கட்டாயம் இல்லை. அவைகள் ஐக்கிய நிதிகள் சந்தையை அணுகித் தங்களுக்குத் தேவைப் படும் தொகையைக் கடனுகப் பெறலாம். வங்கிகளிடம் அவை களின் நீர்மைத் தன்மைக்குத் தேவையாக உள்ள தொகைக்கு உபரி யாக உள்ளதை எவ்வித ஆதாயமுமின்றி அவைகள் வைத்திருக்க வேண்டிய கட்டாயமில்லை. உபரி ரொக்கத்தை ஐக்கிய நிதிகள் சந்தை மூலம் பிற நிறுவனங்களுக்குக் கடனுக வழங்கி அதன் மூலம் வருவாயைத் தேடிக் கொள்ளலாம். இந்த ஐக்கிய நிதிகள் சந்தை நியூயார்க்கில் மிக துரிதமாக உருவாகியுள்ள ஒன்ருகும். இலண்டனில் இவ்வகையான சந்தை கிடையாது. வங்கிகள் ஐக்கிய ரிசர்வு வங்கியிடம் ஒரு குறிப்பிட்ட விகித இருப்புத் தொகை களை வைப்புகளாகச் செலுத்தி வைக்கின்றன. இவ்வாறு ஐக்கிய வங்கியிடமுள்ள வங்கிகளின் இருப்புகளே ஐக்கிய நிதிகளாகும். அரசாங்கப் பத்திரங்களை வாங்கி விற்கும் வர்த்தகர்களுக்கும் ஐக்கிய நிதிகள் பெரிதும் பயன்படுகின்றன. 1954-55ஆம் ஆண்டுகளில் வங்கிகளுக்குப் பண நெருக்கடி ஏற்பட்டது. அந் நிலையிலும் கூட நியூயார்க் வங்கிதள் ஐக்கிய ரிசர்வு வங்கியிடம் பெருமளவு கடன் களைத் தொடர்ந்து நெடுங்காலத்திற்குப் பெற வேண்டிய அவசியம் நேரவில்லை. ஏனெனில், நியூயார்க் வங்கிகள் தங்களுக்கு ஏற்பட்ட பணத் தேவையை ஐக்கிய நிதிகள் சந்தையை அணுகிப் பூர்த்தி செய்து கொண்டன. ஐக்கிய நிதிகளின் அளிப்புப் பெருமளவு வங்கி களிடமிருந்தே கிடைக்கின்றது. நியூயார்க் வங்கிகள் தவிர வெளிப் பிரதேச வங்கிகளும் தங்களிடமுள்ள உபரித் தொகையை ஐக்கிய நிதியாகப் பயன்படுத்துவதற்கு அனுப்புகின்றன. வங்கிகள் மட்டு மின்றி வேறு நபர்களும் ஐக்கிய நிதியில் பங்கு பெறுகின்றன.

தங்களிடமுள்ள உண்டியல்களை ஐக்கிய ரிசர்வு வங்கியிடம் விற்றபின் பணச்சந்தை வர்த்தகர்களின் பேரில் ஐக்கிய ரிசர்வு வங்கியில் இருப்புத் தொகை கூடுகின்றது. இத் தொகை இருப்புகளை பணச் சந்தை வர்த்தகர்கள் ஐக்கிய நிதிகள் சந்தையில் பயன்படுத்த முடியும். அதே போல் அந்நிய நாட்டு வங்கிகளின் முகவர்களும் பயன்படுத்தலாம்.

இச் சந்தை மிக விறுவிறுப்புடன் செயல்படுகின்ற ஒன்றாகும். வங்கிகளின் உபரித் தொகையைத் திரட்டி ஒன்றாகச் சேர்த்து தேவைப்படுவோருக்கு அந்தந்தக் காலங்களில் அளித்துப் பணமுடக்க மில்லாமல் சுமுகமாகச் செயல்பட வாய்ப்பைப் பெற்றிருக்கிறது, இந்த ஐக்கிய நிதிகள் சந்தை நியூயார்க்கிலுள்ள வங்கிகளும் வெளிப் பிரதேச வங்கிகளும் ஐக்கிய நிதிகள் சந்தையில் வர்த்தகர்களாக இருக்கிறார்கள். அமெரிக்க நாடு முழுவதும் பரந்துகிடக்கும் வங்கி களுடனும் இவை தொடர்புகள் உடையனவாக இருக்கின்றன. ஆகவே, அவ்வப்போது ஐக்கிய நிதிகளைக் கடனாகப் பெறவும், பிறருக்குக் கடன் அளிக்கவும் இயலுகிறது.

ஐக்கிய நிதிச் சந்தையில் செல்வாக்கு மிக்க சில நிறுவனங்கள் வட்டி வீதத்தை நிர்ணயிக்கின்றன. பெரிய வங்கிகள் ஒன்றோ டொன்று தொடர்பு கொண்டு தங்களுக்குத் தேவைப்படும் ஐக்கிய நிதிகளைத் தங்களுக்குள்ளேயே ஏற்பாடு செய்து கொள்கின்றன. மேலும் பிற நிறுவனங்களுக்குத் தேவைப்படும் ஐக்கிய நிதிகளையும் பெரிய வங்கிகள் கடனாகப்பெற்று, கடன் தேவைப்படும் நிறுவனங் களுக்கு அளிக்கின்றன. அப்போதைக்கப்போது தங்களுக்குத் தேவைப்படும் தொகையை ஐக்கிய நிதிகள் சந்தையிலிருந்து கடனாகப் பெற முடிந்தாலும் ஒரு சில வங்கிகள் ஐக்கிய ரிசர்வு வங்கியை அணுகித் தமக்குத் தேவைப்படும் தொகையைத் தகுதி பெற்ற பத்தி ரங்களை பிணையாக வைத்துக் கடன் பெற முடியும். ஐக்கிய ரிசர்வு வங்கி தன்னுடைய தள்ளுபடி வீதத்திலேயே கடன்களை வழங்கு கிறது. ஆகவே ஐக்கிய நிதிகளுக்கான வட்டிவீதம் ஐக்கிய ரிசர்வு வங்கி விதிக்குத் தள்ளுபடி வீதத்தை விடக் கூடுதலாக இருப்பதில்லை.

சில வங்கிகள், தாங்கள் சட்டரீதியாக வைத்திருக்க வேண்டிய ரொக்க இருப்பு நிதியைவிட (Reserve Cash Balance) உபரியாக வைத்திருந்தால் அந்த உபரித் தொகையைச் சட்டத்தில் கூறப்பட்டி ருக்கும் ஒரு குறிப்பிட்ட அளவு கூட ரொக்க நிதியிருப்பு வைத் திருக்க முடியாமல் இருக்கக் கூடிய வங்கிகளுக்குக் கடனாக அளிக்கும். வங்கிகளிடையே இந்த ரொக்க நிதி மாற்றம் ஐக்கிய நிதிகள் சந்தை மூலமாக அன்றாடம் நடந்து கொண்டிருக்கும் ஒரு நிகழ்ச்சியாகும்.

ஐக்கிய ரிசர்வு வங்கிகளின் கணக்கேடுகளில் இந்த நிதி மாற்றங்கள் பதிவாகின்றன.

**கருவூல உண்டியல் சந்தை (Treasury Bill Market)**

இச் சந்தையில் அமெரிக்க ஐக்கிய நாடுகளின் கருவூல உண்டியல்கள் வாங்கவும் விற்கவும்படுகின்றன. இக் கருவூல உண்டியல்கள் வட்டியில்லா உறுதிப் பத்திரங்கள் ஆகும். அவை 90 அல்லது 92 நாள்கள் தவணை கொண்டவை. ஒவ்வொரு வாரமும் ஏலப் போட்டிக்கு (Competitive bidding) தள்ளுபடி அடிப்படையில் அளிக்கப்படுகின்றன. 1,000 டாலர் அல்லது அதன் மடங்காக 1 மிலியன் டாலர் வரை குறிப்பிட்ட தொகைக்கு வெளியிடப்படுகின்றன. வங்கிகளாலும், மற்ற நிறுவனங்களாலும், இக் கருவூல உண்டியல்கள் மிகப் பொருத்தமான குறுகியகால முதலீடுகளாகக் கருதப்படுகின்றன. ஏனெனில், பெரிய அளவு பாதுகாப்பு (high degree of safety), எளிதாக விற்கக்கூடிய தன்மை, மேலும் குறுகிய காலத் தவணை முதலியன சிறப்பான அம்சங்களாக இருப்பதேயாகும்.

கருவூல உண்டியல்களின் அளிப்பு, வாரந்தோறும் 15,000 மிலியன் டாலர்கள் மதிப்புடையதாக 1953-லிருந்து இருந்துவந்தது. நிலுவை பாக்கியுள்ள உண்டியல்கள் 1955-ல் 20,000 மிலியன் டாலர்களாக இருந்தன. கருவூல உண்டியல் 1929ஆம் ஆண்டு தொடங்கப்பட்டது. ஆகவே, இது நியூயார்க் பணச் சந்தையில் சமீப காலத்தில் தோன்றிய ஒருபுதிய அங்கமாக இருக்கிறது. ஆனால், வணிக நடவடிக்கைகளின் தன்மையையும், சந்தையில் ஈடுபடுத்தப்படும் தொகையின் அளவையும் நோக்கும்போது இக் கருவூல உண்டியல் சந்தை மிக முக்கியமானதொன்றாக விளங்குகிறது.

இரண்டாம் உலகப் போருக்குப் பின் இங்கிலாந்தின் காலனி ஆதிக்கமுறை சீர்குலைந்து, பழைய அடிமை நாடுகள் பல விடுதலை பெற்று, அவ்வாறு தோன்றிய பல சுதந்திர நாடுகளுக்கு அமெரிக்க நிதியுதவி பெருமளவில் அளிக்கப்பட்டது. தவிரவும், அமெரிக்க நாடு பொருளாதாரத் துறையின் வளர்ச்சியில் ஈடுபட்டிருக்கும் ஐக்கிய நாடுகளின் பல அங்கங்களுக்கு நியூயார்க் ஒரு மையக் கேந்திரமாக விளங்கிவரும் காரணத்தால் இப்போது அனைத்துலகத்திற்கும் நியூயார்க் மிக முக்கியமான நிதி மையமாகத் திகழ்ந்து வருகிறது. முதல் உலகப் போருக்கு முன்வரை, இலண்டன், உலக நிதியத்திற்கு நூற்றாண்டுகளுக்கு மேலாக எல்லோராலும் ஏற்றுக்கொள்ளப்பட்டு நடு நாயக நிலையை வகித்து வந்தது. ஆனால், உலகப் போர்களின் இடைக்காலத்திலும் அதன் பிறகும்

இலண்டனின் தலைமைக்குப் போட்டியாக நியூயார்க் பணச் சந்தை வளர்ச்சியுற்று உலக நிதியத்தின் மையமாக இயங்கி வருகிறது. உலக நாடுகளால், பன்னாட்டு வாணிபத்தின் விளைவாக ஏற்படும் கொடுக்கல் வாங்கல் நடவடிக்கைகளைத் தீர்ப்பதற்கு, அமெரிக்க டாலர் ஏற்றுக் கொள்ளப்பட்டது. ஆகவே, அமெரிக்க நாட்டு நாணயம் உலக நாணயமாகக் கருதப்பட்டு, நாடுகளுக்கிடையே தோன்றும் கடன் பொறுப்புகளைத் தீர்க்க உதவுகிறது.

சுருங்கக் கூறின், இரண்டாவது உலகப் போருக்குப் பிறகு அமெரிக்க நாட்டு நிதி வசதி பல திட்டங்களின் கீழ் மற்ற நாடுகளின் அரசுகளுக்கு வழங்கப் படுகின்றதாலும், பன்னாட்டு நிதி நிலையங்களான பன்னாட்டுச் செலாவணி நிதி (International Monetary Fund), உலக வங்கி (World Bank) முதலியவைகளின் பணிகளாலும் அமெரிக்கத் தனியார் மூலதனம் மற்ற நாடுகளில் முதலீடு செய்யப்படுகின்றதாலும் நியூயார்க் பணச் சந்தை மேலோங்கி நிற்கிறது. உலகப் போருக்குப் பின் நியூயார்க் பணச் சந்தையின் நிறுவனங்கள், குறிப்பாக, நியூயார்க் நகர வங்கிகள் (Newyork City Banks) மற்றும் தொழில் கூட்டுருக்கள் (Industrial Corporations) பன்னாட்டு நிலையத்தில் முக்கியப் பங்கு ஏற்கின்றன.

## இலண்டன் பணச் சந்தைக்கும் நியூயார்க் பணச் சந்தைக்கும் உள்ள வேறுபாடுகள்

இலண்டன், நியூயார்க் பணச் சந்தைகள் மாறுபட்ட காலங்களில் பல சூழ்நிலைகளில் வளர்ச்சியுற்றுப் பன்னாட்டு நிதி மையங்களாக விளங்குகின்றன. 19ஆம் நூற்றுண்டில் இலண்டன் பணச் சந்தை வளர்ச்சியுற்று அச் சந்தையில் இயங்கிவரும் நிறுவனங்கள் அந் நூற்றுண்டில் வணிகம் மற்றும் தொழில் சம்பந்தமாக ஏற்பட்ட நிதித் தேவைகளையும், அந்நிய அரசுகளின் மூலதனத் தேவையையும் பூர்த்தி செய்யும் வகையின் அடிப்படையில் உருவாகி வளர்ந்தன. அமெரிக்காவின் ஐக்கிய நிதி வங்கிகள் (Federal Reserve Banks) 1913-ல் தொடங்கப்பட்டன. இதே காலத்தில் ஐரோப்பாக் கண்டத்தின் பல நாடுகள் வளர்ச்சியடைந்திருந்தன. இந்த இரண்டு காரணங்களாலும் கடந்த அறுபது ஆண்டுகளாக, குறிப்பாக முதல் உலகப்போர் தொடங்கிய காலத்திலிருந்து நியூயார்க் பணச் சந்தை முக்கியத்துவம் பெற்றது.

இவ் விரு பணச் சந்தைகளுக்குமிடையே காணப்படும் ஒரு பெரிய வேறுபாடு என்னவெனில் இலண்டன் பணச் சந்தையில் உள்ள இரு முக்கிய நிறுவனங்களான, தள்ளுபடிச் சந்தை மற்றும் வணிக வங்கியர்கள் (Merchant Bankers) அல்லது ஏற்பகங்கள், நியூ

யார்க் சந்தையில் கிடையாது. இலண்டன் பணச் சந்தையின் தள்ளுபடியகங்கள் சந்தைக்கே புகழும் பெருமையும் தேடித் தரும் சிறப்பு வாய்ந்த நிறுவனங்களாகும். இங்கிலாந்தின் மைய வங்கியான பாங்க் ஆஃப் இங்கிலாந்திற்கும் தள்ளுபடி யகங்களுக்கும் இடையே நிலவும் உறவு, இலண்டன் பணச் சந்தையின் தனித் தன்மை பெற்ற அம்சமாகும். மேலும் ஏற்பகங்களின் வளர்ச்சி இலண்டன் நிதி அமைப்பின் ஒரு குறிப்பிடத் தக்க அம்சமாகும். நியூயார்க் பணச் சந்தையுடன் ஒப்பிடுகையில் இலண்டன் பணச் சந்தை மிகச் சிறப்பான முறையில் பன்னாட்டுச் செலாவணி மையமாக இயங்குவதற்கு இது ஒரு காரணமாகும். இலண்டனின் ஏற்பகங்கள் அல்லது வர்த்தக வங்கியர்களின் (Merchant Bankers) மதிப்பு, அவர்களுடைய பணிகள், இங்கிலாந்தின் ஏற்றுமதி இறக்குமதி வாணிபத்திற்கு நிதி வசதிகள் அளிப்பதோடு மட்டுமல்லாமல், அந்நிய நாடுகளிடையே அவைகளுக்குள் நேரிடை யாக ஏற்படும் வாணிபத்திற்கும் (இவ்வித வாணிபத்தில் இங்கி லாந்து நாட்டிற்கு நேரிடையாக, எவ்வித சம்பந்தமுமில்லாமல் இருந்தாலும் கூட) நிதிவசதிக்கு வகை செய்கிறது. இவ்வாறு பன்னாட்டு வாணிபத்திற்கு நிதி வசதி செய்யும் சிறப்புமிக்க நிறு வனங்கள் நியூயார்க் பணச் சந்தையில் வளரவில்லை. ஏனெனில், நியூயார்க் பணச் சந்தையே, இலண்டன் பணச் சந்தையில் இயங்கி வரும் மேற்கூறிய நிறுவனங்கள் மூலம் தன் நடவடிக்கைகளைச் செயல்படுத்துகின்றது.

தனிப்பட்ட சந்தைகளைப் பொறுத்தவரை, இலண்டனிலும் நியூயார்க்கிலும் ஒரே மாதிரியான சந்தைகள் உள்ளன. ஆனால், இரண்டு முக்கிய விஷயங்களில் அவை வேறுபடுகின்றன. முதலா வதாக, வணிகத் தாள் சந்தை நியூயார்க்கில் நன்முறையில் வளர்ச்சி யடைந்துள்ளது. இதற்கு ஒப்பான சந்தை இலண்டனில் இல்லை. பேராசிரியர் சேயர்ஸ் நியூயார்க்கில் இயங்கும் வணிகத்தாள் சந்தை மிகச் சிறப்புடையதொன்றாகும் என்று கருதுகிறார். அதே போல் ஐக்கிய நிதிகள் சந்தை நியூயார்க் பணச் சந்தைக்கு ஒரு தனிப்பட்ட பெருமையை அளிக்கிறது. ஐக்கிய நிதிகள் சந்தை போல் இலண்டன் பணச் சந்தையில் காண முடியாது.

இரண்டாவதாக, இலண்டன் பணச் சந்தையில் ஒவ்வொரு அங்கமும் முறையாகப் பிரிக்கப்பட்டு, ஒவ்வொன்றுக்கான பணி களும் நன்முறையில் வகுக்கப்பட்டு இருக்கின்றது. எல்லா அங்கங் களும் பாராட்டும் வகையில் வளர்ச்சிபெற்று அவைகள் ஒவ்வொன் றுக்குமுள்ள பணிகளை ஆற்றுவதில் மிக்க தேர்ச்சியடைந்துள்ளன. ஒரே மாதிரியான பணிகளைச் செய்யும் நிறுவனங்களிடையே கடும்

போட்டி இருக்க வாய்ப்பு உண்டு. அப்படி இருப்பினும் அவைகளிடையே போட்டியிடும் மனப்பான்மை இருப்பதில்லை. ஆகவே, இலண்டன் பணச் சந்தையில் செயலாற்றும் நிறுவனங்கள் தங்களுக்குள் பெரும்பாலும் போட்டியின்றிப் பணிகள் முழுமையடையும் வகையில் இயங்குகின்றன. ஆனால், நியூயார்க் பணச் சந்தையில் செயலாற்றும் நிறுவனங்கள் இம்மாதிரியான தேர்ச்சி பெறவில்லை. ஒவ்வொரு நிறுவனமும் பல துறைகளில் ஈடுபட்டுப் பலவித பணிகளும் செய்யலாம். இலண்டன் பணச் சந்தையில் நிறுவனங்கள் ஆற்றும் பணிகள் நன்ருக வரையறுக்கப்பட்டிருப்பினும் அண்மைக் காலத்தில் கூட்டுப்பங்கு வங்கிகளும், ஏற்பகங்களும், தள்ளுபடியகங்களும் ஆற்றும் பணிகள் சிலவற்றில் ஆர்வம் காட்டுகின்ற போக்குக் காணப்படுகிறது.

இங்கிலாந்து நாட்டின் மைய வங்கியான பாங்க் ஆஃப் இங்கிலாந்து, இலண்டன் பணச்சந்தையின் நடு நாயகமாகத் திகழ்கின்றது. உலக மைய வங்கிகளுக்கு நடை முறையில் முன்னேடியாக விளங்குவது இவ் வங்கியாகும். இது 1694ஆம் ஆண்டு அரசு சாசனத்தின் மூலம் நிறுவப்பட்டது. உலகின் மைய வங்கிகளில் இது மிகப் பழமையானது. பல நூற்ருண்டுகளாகச் செயல்பட்டு வரும் இவ் வங்கி ஒரு பாரம்பரியத்தையே வளர்த்துள்ளது. இலண்டன் பணச் சந்தையின் மற்ற நிறுவனங்களும் இவ் வங்கியை மையமாகக் கொண்டு வளர்ந்துள்ளன. பாங்க் ஆஃப் இங்கிலாந்திற்கும் இலண்டன் பணச் சந்தைக்குமிடையே நிலவும் உறவு, அனுபவம், வழக்கம் இவைகளின் அடிப்படையில் வளர்ந்து காலப் போக்கில் முதிர்ச்சியடைந்துள்ளது. ஆனுல், அதே நேரத்தில் அமெரிக்க ஐக்கிய நாட்டு மைய வங்கிகளான ஐக்கிய ரிசர்வு வங்கிகளைப் பற்றி இவ்வாறு கூறமுடியாது. ஏனெனில், அவைகளுக்கென்று உருவாக்கப்பட்ட சட்டத்தின்கீழ் 1913ஆம் ஆண்டு ஐக்கிய நிதி வங்கிகள் நிர்மாணிக்கப்பட்டன. நியூயார்க் பணச் சந்தையில் பணியாற்றும் நிறுவனங்கள் இவ் வங்கிகளுடன் கொண்டுள்ள உறவு வழக்கத்திஞல் வளர்ந்ததன்று; சட்டத்தின் துணை கொண்டு வளர்ந்து கட்டுப்படுத்தப்பட்டு வருகின்றது.

## பிற்சேர்க்கை-1

### 1972-73 லும், 1973-74 லும் புதிதாகத் தொடங்கப்பட்ட வணிக வங்கிகளின் கிளைகள்

| | வங்கிகள் | ஜூலை-டிசம்பர் 1972 | ஜனவரி-ஜூன் 1973 | ஜூலை-ஜூன் 1972-1973 | ஜூலை-டிசம்பர் 1973 | ஜனவரி-ஜூன் 1974 | ஜூலை-ஜூன் 1973-74 |
|---|---|---|---|---|---|---|---|
| 1. | ஸ்டேட் வங்கி | 130 | 112 | 292 | 135 | 73 | 208 |
| | | (58) | (39) | (97) | (42) | (23) | (65) |
| 2. | ஸ்டேட் வங்கியின் துணை வங்கிகள் | 127 | 54 | 181 | 64 | 25 | 89 |
| | | (64) | (19) | (83) | (23) | (8) | (31) |
| 3. | நாட்டுடைமையான பதினான்கு வங்கிகள் | 618 | 308 | 926 | 697 | 212 | 909 |
| | | (272) | (100) | (372) | (263) | (55) | (317) |
| 4. | பட்டியலில் சேர்ந்த மற்ற வங்கிகள் | 194 | 155 | 349 | 250 | 128 | 378 |
| | | (74) | (58) | (132) | (90) | (42) | (132) |
| 5. | அந்நிய வங்கிகள் | — | — | — | — | — | — |
| 6. | எல்லாப் பட்டியலில் சேர்ந்த வணிக வங்கிகள் | 1119 | 629 | 1748 | 1146 | 438 | 1584 |
| | | (468) | (216) | (684) | (418) | (128) | (545) |
| 7. | பட்டியலில் சேராத வணிக வங்கிகள் | 4 | 4 | 8 | 3 | 6 | 9 |
| | | (3) | (3) | (6) | (1) | (1) | (2) |
| 8. | எல்லா வணிக வங்கிகளும் | 1123 | 633 | 1756 | 1149 | 444 | 1593 |
| | | (471) | (219) | (690) | (419) | (129) | (547) |

குறிப்பு: (அடைப்புக் குறியிட்ட புள்ளிகள், இதுவரை வங்கிக் கிளைகள் இல்லாத இடங்களில் தோற்றுவிக்கப்பட்டதைக் குறிக்கும்.)

## பிற்சேர்க்கை-2

### 1969-லிருந்து 1974 வரை ஏற்பட்ட வங்கிக் கிளைப் பெருக்கம்

| வங்கிகள் | 1969, ஜூனில் | 1974, ஜூனில் |
|---|---|---|
| 1. ஸ்டேட் வங்கி | 1569 | 3072 |
| 2. ஸ்டேட் வங்கியின் துணை வங்கிகள் | 893 | 1652 |
| 3. நாட்டுடைமையான பதினான்கு வங்கிகள் | 4133 | 9017 |
| 4. பட்டியலில் சேர்ந்த மற்ற வங்கிகள் | 1320 | 2943 |
| 5. அந்நிய வங்கிகள் | 130 | 130 |
| 6. எல்லாப் பட்டியலில் சேர்ந்த வணிக வங்கிகள் | 8045 | 16814 |
| 7. பட்டியலில் சேராத வணிக வங்கிகள் | 217 | 122 |
| 8. எல்லா வணிக வங்கிகளும் | 8262 | 16936 |

# மேற்கோள் நூற்பட்டியல்


கு. ஆளுடைய பிள்ளை, 'இந்திய வங்கியியல்'

மா. பா. குருசாமி, 'வங்கியியல்'

க. வெற்றிவேல், 'நவீன பாங்கு இயல்'

கோ. சிவஞானம், 'பணவியல்'

கு. ஆளுடையபிள்ளை, 'வாணிக இயலின் தத்துவங்கள்'

S. R. K. RAO, 'The Indian Money Market'

MADDEN AND NADLER, 'International Money Market'

S. L. N. SIMHA, 'The Capital Market in India'

N. K. ROY, 'Indian Banking and Money Market'

DR. G. L. KARKAL, 'Unorganised Money Markets in India'

BIMAL C. GOSH, 'A Study of the Indian Money Market' (with special reference to Calcutta)

H. T. PAREKH, 'The Bombay Money Market'

S. G. PANANDIKAR, 'Banking in India'

B. R. RAU, 'Present day Banking in India'

S. K. MURANJAN, 'Modern Banking in India'

G. N. JOSHI, 'Money and Money Market in India'

SAYERS, 'Modern Banking'

S. C. KUCHHAL, 'Corporation Finance'

P. N. VARSHNEY, 'Banking Law and Practice'

A. K. BASU, 'Fundamentals of Banking Theory and Practice'

S. R. DAVAR, 'Law and Practice of Banking'

M. L. TANNAN, 'Banking Law and Practice in India'

RESERVE BANK OF INDIA, 'History of the Reserve Bank of India

RESERVE BANK OF INDIA, 'Functions and Working'

RESERVE BANK OF INDIA, 'Technical studies prepared for the Banking Commission, Bombay, 1972, vol. II

GOVERNMENT OF INDIA, 'Report of the Banking Commission, 1972'

GOVERNMENT OF INDIA, 'Nationalisation of Banks—a symposium'

K. P. M. SUNDHARAM, 'Money, Banking, Trade and Finance'

RESERVE BANK of India Bulletin

STATE BANK of India Monthly Review

JOURNAL of the Indian Institute of Bankers

FINANCIAL Express (Daily)

COMMERCE (Weekly)

# கலைச்சொற்கள்

## A

| | | |
|---|---|---|
| Acceptance | — | ஏற்பு |
| Acceptance Market | — | ஏற்புச் சந்தை |
| Acceptance Home | — | ஏற்பகம் |
| Acceptor | — | ஏற்பவர் |
| Accomodation Bill | — | பண வசதி உண்டியல் |
| Adhoc Treasury Bill | — | அட்ஹாக் கருவூல உண்டியல் |
| Adjustment | — | சரிக்கட்டுதல் |
| Advance | — | முன் பணம், முன் அளிப்பு |
| Advice | — | தெரிவிப்பு, அறிவிப்பு |
| After date | — | குறித்த தேதிக்குப் பின் |
| Agent | — | முகவர் |
| Agricultural Refinance-Corporation | — | வேளாண்மை மறுநிதிக் கூட்டுரு |
| Approved Bodies | — | ஏற்றுக் கொள்ளப்பட்ட நிறுவனங்கள் |
| Amalgamation | — | தொழில் இணைப்பு |
| Annual general meeting | — | ஆண்டுப் பொதுக் கூட்டம் |
| Annual Report | — | ஆண்டறிக்கை |
| Ante-date | — | முன் தேதியிட்ட |
| Apex bank | — | உச்சி வங்கி |
| Arbitrage | — | ஆர்பிட்ரேஜ் |
| Arrears of dividend | — | பங்கு ஈவுப் பாக்கி |
| At sight | — | பார்த்தவுடன் |
| Auction | — | ஏலம் |
| Authorised Capital | — | அனுமதித்த முதல் |

## B

| | | |
|---|---|---|
| Balance | — | நிலுவை, பாக்கி, இருப்பு |
| Balance Sheet | — | இருப்பு நிலைக் குறிப்பு |
| Bank | — | வங்கி |
| Bankers' Acceptance | — | வங்கிகளின் ஏற்புகள் |
| Bank Account | — | வங்கிக் கணக்கு |
| Bank Charges | — | வங்கிக் கட்டணங்கள் |
| Bank discount | — | வங்கித் தள்ளுபடி |
| Bank draft | — | வங்கிப் பணவிடை |
| Bank rate | — | மைய வங்கி (வட்டி) வீதம் |
| Bankers' clearing house | — | வங்கிகளின் தீர்வகம் |
| Bankers' liability | — | வங்கியர் பொறுப்பு |
| Banking companies act | — | வங்கிக் கம்பெனிச் சட்டம் |
| Banking regulations act | — | வங்கி ஒழுங்குமுறைச் சட்டம் |
| Bearer | — | கொணர்பவர் |
| Bearer cheque | — | கொணர்பவர் காசோலை |
| Bearer Debenture Certificate | — | உடையவன் கடன் பத்திரம் |
| Bearer securities | — | வைத்திருப்போர் பிணையங்கள் |
| Bill | — | உண்டியல் |
| Bill broker | — | உண்டியல் தரகர் |
| Bill Market | — | உண்டியல் சந்தை அல்லது தள்ளுபடிச் சந்தை |
| Bill of Exchange | — | மாற்று உண்டியல், உண்டியல் |
| Bill of lading | — | கப்பல் இரசீது |
| Bill Market Scheme | — | உண்டியல் சந்தைத் திட்டம் |
| Bills payable | — | செலுத்த வேண்டிய உண்டியல்கள் |
| Bills receivable | — | வரவுடைய உண்டியல்கள் |
| Block capital | — | நிலை முதல் |
| Board of Directors | — | இயக்குநர் குழு |
| Bond | — | பத்திரம் |
| Business organisation | — | தொழில் அமைப்பு |

## C

| | | |
|---|---|---|
| Call loan Market | — | அழைப்புக் கடன் சந்தை |
| Capital formation | — | மூலதன ஆக்கம் |
| Capital Market | — | மூலதனச் சந்தை |
| Capital resources | — | மூலதன வளங்கள் |
| Cash credit | — | ரொக்கக் கடன் |

**Cash discount** — ரொக்கத் தள்ளுபடி
**Central Bank** — மைய வங்கி
**Changes and Mortgages** — ஈடுகாட்டும், அடைமானமும்
**Cheque** — காசோலை
**Chit fund** — சீட்டு நிதி
**Claim** — உரிமை
**Clean letter of credit** — நிபந்தனையில்லாக் கடன்
**Clearing Bank** — தீர்வக வங்கி
**Clearing House** — தீர்வகம்
**Collateral loan Market** — பிணையீட்டுக் கடன் சந்தை
**Collecting Banker** — வசூலிக்கும் வங்கியர்
**Commercial Bank** — வணிக வங்கி
**Commercial letter of credit** — வணிக உறுதிக் கடிதம்
**Company promoters** — கம்பெனித் தோற்றுவிப்பாளர்கள்
**Consumers Co-operative Society** — நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்கள்
**Consumption goods** — நுகர் பொருள்கள்
**Controlled Market** — தடைச் சந்தை
**Convertable debenture** — மாற்றக்கூடிய கடன் பத்திரம்
**Co-operative bank** — கூட்டுறவு வங்கி
**Co-operative credit society** — கூட்டுறவுக் கடன் சங்கங்கள்
**Co-operative producer's societies** — உற்பத்தியாளர் கூட்டுறவுச் சங்கங்கள்
**Corporation** — கூட்டுரு
**Corporate savings** — நிறுமச் சேமிப்புகள்
**Corporate shares** — பங்குச் சீட்டுகள்
**Credit money** — நாணயப் பணம்
**Commercial paper** — வணிகத் தாள்
**Cumulative preference share** — குவிவுச் சலுகைப் பங்குகள்
**Current deposit** — நடப்பு வைப்பு
**Customer** — வாடிக்கையர்

## D

**Day to-day rate** — அன்றுட வீதம்
**Debenture** — கடன் பத்திரம்
**Debenture holder** — கடன் பத்திர உரிமையர்
**Debtor** — கடனாளி
**Deferred shares** — பின்னுரிமைப் பங்குகள்
**Demand draft** — கேட்புப் பணவிடை

Demand Promisory Note — கேட்புக் கடனுறுதிச் சீட்டு
Deposit — வைப்பு
Depression — மந்தம்
Discounting of bill — உண்டியலைத் தள்ளுபடி செய்தல்
Discount market — தள்ளுபடிச் சந்தை அல்லது உண்டியல் சந்தை
Discount rate — தள்ளுபடி வீதம்
Dishonoured cheque — மறுத்த காசோலை
Dishonouring of bill — உண்டியல் அவமதிப்பு
Dissolution — கலைப்பு
Dividend — இலாப ஈவு
Documentary bill — பத்திரங்கள் சேர்ந்த உண்டியல்
Document of title to goods — சரக்குரிமைப் பத்திரம்

## E

Encumbrance — வில்லங்கம்
Endorser — புறங்குறிப்போர்
Endorsement — புறக் குறிப்பு
Enquiry — ஆய்வு
Entrepreneur — தொழில் முகவர், தொழில் துணிவோன்
Equilibrium — சமநிலை
Equitable Debentures — ஏற்புடை அடைமானக் கடன் பத்திரங்கள்
Equitable mortgage — நியாய ஒற்றி
Equity shares — சாதாரணப் பங்குகள்
Exchange — நாணய மாற்று
Exchange Bank — நாணய மாற்று வங்கி
Export Risk Insurance Corporation — ஏற்றுமதி அபாயத் தவிர்ப்புக் காப்புறுதிக் கூட்டுரு

## F

Finance Bill — நிதி உண்டியல்
Financial Institutions — நிதி நிறுவனங்கள்
First charge — முதல் உரிமை
Fixed assets — நிலையான சொத்துகள்
Fixed capital — நிலையான முதல்
Fixed Debentures — நிலையீட்டுக் கடன் பத்திரங்கள்
Fixed Deposit — நிலை முதல்

Floating asset — ரொக்கமாகக்கூடிய சொத்துகள், உருமாறும் சொத்துகள்
Floating debenture — இயக்க ஈட்டுக் கடன் பத்திரம்
Foreign Exchange market — அந்நியச் செலாவணிச் சந்தை
Founder's shares — தோற்றுவிப்பாளர் பங்குகள்

## G

Gilt edged securities — பொன்விளிம்பு ஆவணங்கள்
Gold reserve — தங்கக் காப்பிருப்பு
Government bonds — அரசாங்கக் கடன் பத்திரங்கள்
Government securities — அரசாங்கப் பத்திரங்கள்

## H

Hire purchase system — வாடகைக் கொள்முறை
House money — அகமிகைத் தொகை
Hundi — (இந்திய) உண்டியல்

## I

Indigenous banks — நாட்டு வங்கிகள்
Indigenous industries — இந்தியத் தொன்மைத் தொழில்கள்
Industrial bank — தொழில் வங்கி
Industrial finance — தொழில் நிதி
Inland bill — உள்நாட்டு உண்டியல்
Insurance Companies — காப்பீட்டு நிறுவனங்கள்
Intermediaries — இடையாளர்கள், இடை நிலையர்
Investment trust — முதலீட்டுப் பொறுப்பகங்கள்
Irredeemable debentures — மீட்கமுடியாக் கடன் பத்திரங்கள்
Irrevocable credit — இரத்து செய்ய முடியாக் கடன்
Issue department — வெளியீட்டுத் துறை
Issued capital — வெளியிட்ட முதல்

## L

Letter of credit — வணிக உறுதிக் கடிதம்
Letter of hypothecation — அடைமானக் கடிதம்
Liabilities — பொறுப்புகள், கடன்கள்
Licence — அனுமதி

Limited liability — வரையறுக்கப்பட்ட பொறுப்பு (கடன்)
Liquidity — ரொக்க நிலை, நீர்மை
Loan — கடன்

M

Means of payment — செலுத்தும் வழிவகைகள்
Monetary system — பணத்திட்ட அமைப்பு
Money at call — அழைப்புக் கடன் (கைமாற்றுக் கடன்)
Money at short notice — புறந்தவணைக் கடன், சிற்றறிவிப்புக் கடன்
Money market — பணச் சந்தை
Mortgage debenture — அடைமானக் கடன் பத்திரம்

N

Nationalisation — நாட்டுடைமையாக்கல்
Negotiability — செலாவணித் தன்மை
Negotiable instrument — செலாவணிப் பத்திரம்
Naked debentures — வெற்றுக் கடன் பத்திரங்கள்
Non-negotiable — செலாவணித் தன்மையற்ற

O

Opener of credit — பற்றுத் தொடக்கர்
Open market operations — வெளிச் சந்தை
Operational freedom — செயல்பாட்டு உரிமை
Order check — ஆணைக் காசோலை
Outstanding liabilities — செலுத்த வேண்டிய பொறுப்புகள்
Overdraft — அதிகப் பற்று

P

Paid up capital — செலுத்திய முதல்
Participating preference shares — எஞ்சியதில் பங்கு பெறும் சலுகைப் பங்குகள்
Pawn — அடகு
Penal interest — தண்ட வட்டி, கடுமை வட்டி

Perpetual debentures — நிரந்தரக் கடன் பத்திரங்கள்
Post dated cheque — பின் தேதியிட்ட காசோலை
Postal order — அஞ்சல் ஆணை
Preamble — நோக்க விளக்கம்
Preference shares — சலுகைப் பங்குகள்
Primary Society — அடிநிலைச் சங்கம், அடிமட்ட சங்கம்
Principal debtor — முதற் கடனாளி
Prolonged fall — தொடர் சரிவு
Promisory note — வெண்கடன் பத்திரம்
Public limited company — பொது வரையறுக்கப்பட்ட நிறுவனங்கள்
Public utility concerns — பொதுப் பயன் நிறுவனங்கள்

## Q

Quasi Government Department — அரசுப் போன்மைத் துறைகள்

## R

Redeemable preference shares — மீட்கக்கூடிய சலுகைப் பங்குகள்
Rediscount — மறுதள்ளுபடி
Registered debentures — பதிவு செய்த கடன் பத்திரம்
Reimbursement credit — ஈட்டுக் கடன்
Reinvestment — மறு முதலீடு
Remittance facility — பணம் செலுத்தும் வசதி
Reserve capital — காப்பு முதல்
Reserve Fund — காப்பு நிதி
Relative importance — ஒப்பியல் முக்கியத்துவம்
Revocable credit — இரத்தாகக்கூடிய கடன் வசதி
Risk capital — இடர்த் துணிவு மூலதனம்
Running brokers — இயக்கத் தரகர்கள்

## S

Secured loan — ஈடுடைக் கடன்
Sensitive Commodity — விலையுணர்வுடைய பொருள்
Share certificate — பங்குப் பத்திரம்
Share holder — பங்குதாரர்
Share warrant — பங்குரிமைச் சீட்டு

Shiftability — இடப் பெயர்வு
Solvency — வகையுடைமை
Special Reserve Fund — தனிக் காப்பு நிதி
Speculators — ஊக வணிகர்கள்
Stability — நிலைத் தன்மை
Stamp duty — பத்திரக் கட்டணம்
Stock — பங்குத் தொகுப்பு
Stock broker — பங்குத் தரகர்
Stock Exchange — பங்கு மாற்று நிலையம்
Subscribed capital — ஒப்பிய முதல்
Subsidy — அரசாங்க உதவிக் கொடை
Surplus — உபரி, மிகை

T

Tap — இடையரு
Tender — அளிப்பு முனைவு, டெண்டர்
Term Bill — தவணை உண்டியல்
Theory of self Liquidity — சுய நீர்மை நிலைக் கொள்கை
Treasury bill — கருவூல உண்டியல்
Trust — பொறுப்புரிமை

U

Uncalled capital — அழையா முதல்
Under writer — ஒப்புறுதியாளர்
Underwriting commission — ஒப்புறுதிக் கழிவு
Unissued capital — வெளியிடா முதல்
Unsecured loan — ஈடற்ற கடன்
Unlimited liability — வரையறுப் பொறுப்பு
Usance bill — தவணைக் கடன் உண்டி

